


# பிரிமியர்

## அதிக சேமிப்பை அடைய ஓர் சரியான தேர்வு

காண்பது கனவல்ல முற்றிலும் உண்மை. நீங்கள் வாங்கும் ஒவ்வொரு பிரிமியரின் சாதனங்களும் அவற்றுக்குக் கொடுக்கும் விலையைப் போன்று பல மடங்கு சேமிப்பை எரிபொருள் மற்றும் நேரம் இவற்றின் வாயிலாக ஆண்டு தோறும் உங்களுக்கு அளிக்கின்றது.

உங்களது வாங்கும் சக்திக்கு ஏற்பவும், நீடித்து உழைத்து நிகரற்ற இன்பம் அளிக்கத்தக்க வகையிலும் தயாரிக்கப்படுவது பிரிமியரின் சாதனங்கள் ஒன்றே!

பிரிமியர் ஒவ்வொரு குடும்பத்திற்கும் தேவையான முக்கிய சாதனங்களை வழங்குகின்றது. குறைந்த செலவுடைய சிறந்த பரிசளிப்பு சாதனங்களாகவும் விளங்குகின்றது.
எல்லா பாத்திரக்கடைகளிலும் கிடைக்கின்றது.

பிரிமியர் : புதுமை விரும்பிகளின் பொக்கிஷம்.

தயாரிப்பாளர்கள் :

**எஸ். சிவநேசன் அன் கோ**

சென்னை மற்றும் கோவை

**மங்கையர் மலர்**

**ஆகஸ்டு 1982**



சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 1-50
ஆண்டுச் சந்தா ரூ. 18/-
ஆறு மாத சந்தா ரூ. 9/-


Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543
Assistant Editor: Manjula Ramesh.

# பிஞ்சுக் கால்கள் தள்ளாடும்


க. திரவியம்

ஒரு நடுத்தர வயதினர் கண் பார்வை சரியாக இல்லை என்று கண் மருத்துவரிடம் வந்தாராம். கண்ணை நன்றாகப் பரிசோதித்து, நன்றாக மருத்துவம் பார்த்து கண்ணாடியும் போட்டு விட்டார் மருத்துவர். கண்ணாடி போட்ட அன்று ஏ.பி.சி.டி. எழுதிய போர்டைக் காண்பித்தாராம்.

''இதைப் படிக்க முடியுதா?''

''முடியலைங்க.....''

அதைவிடப் பெரிய எழுத்துப் போர்டைக் காண்பித்து 'இதைப் படிக்க முடியுதா?' என்று கேட்டிருக்கிறார். அப்போதும் 'முடியலை' பதில்தான். அவரிடமிருந்த எல்லாப் பெரிய போர்டுகளையும் காண்பித்து, தோல்வியடைந்து மகா எரிச்சலுடன் கேட்டார்.

''ஏன்யா முடியலை. உனக்கு என்னதான் கோளாறு?''

''எனக்குப் படிக்கத் தெரியாதுங்க''

இதை ஒரு ஜோக்காக நிறையப் பத்திரிகைகள் பிரசுரித்திருக்கின்றன. உண்மையில் இது சிரிக்கக் கூடிய விஷயமா? படிக்கத் தெரியாமல், படிக்க முடியாமல், வறுமையிலே அவதிப்படும் மக்கள் நம் நாட்டில் கோடிக் கணக்கில் இருக்கிறார்கள்.

கிராமங்களில் வயல் வேலைகளைச் செய்யும் தாய்மார்களின் குழந்தைகளுக்கு வரப்பும் மரத்தடியும், சேறும், நீரிறைக்கும் மாடும்தான் ஆசான்கள். நெல் விதைக்க 'கருக்கலி'லேயே கிளம்பி விடும் பெண்களுக்குத் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்குத் தயார் பண்ணவா நேரம் இருக்கும்? அது தவிர வரும் சிறிய கூலியில் பள்ளிக்குச் செலவழிக்க, அனுப்ப முடியுமா? படிப்பு இலவசமென்றாலும் நோட்டுப் புத்தகமும், பள்ளிக்குச் செல்ல காலை உணவு, மதிய உணவு... எங்கே போவார்கள்? எல்லாம் ஒரே உணவாக இரவுச் சாப்பாடுதான். இந்தக் குழந்தைகள் எதிர்காலத்தில் சோகை பிடித்தவர்களாக, மாடு மேய்க்கும் பையனாக மாறுகிறார்கள். இவர்களே நம் நாட்டின் எதிர்காலப் பிரஜைகள்.

இத்தனைப் பிரச்னைகளுக்கும் அடிப்படைக் காரணம் வறுமை. வறுமையினால் சரியான உணவின்மை. இதனால் சோகை பிடித்த நாடாக மாறும் அபாயம். இவற்றையெல்லாம் கணித்தே போன வருடம் மங்கையர் மலரில் 'உருவமில்லாத அரக்கனுடன் ஒரு போர்' என்ற ஒரு கலந்துரையாடலை அமைத்திருந்தோம். உண்மையிலேயே சத்துணவு இன்மை என்பது ஒரு அரக்கன் போலத்தான். இந்த அரக்கனை ஒழித்தாலே எதிர் காலத்தில் பல பிரச்னைகள் தீரும்.

சரியான உணவின்மையால் வறுமையினால் சில குழந்தைகள் இறக்கிறார்கள்; சிலர் சோகை பிடித்து சிந்தனை சக்தியே அற்றுப்போய் இயந்திரமாகிறார்கள். சிலர் ஆத்திரக்காரனாக, வன்முறையாளனாக மாறுகிறார்கள். மேலும் மேலும் நம் நாடு பிரச்னை மிகுந்த நாடாகிறது. ஆக, இவற்றின் மூலக் கருவையே ஒழித்தால்?

ஆமாம், இவற்றை யோசித்துத்தான் நம்முடைய தமிழகத்தின் முதலமைச்சர் திரு எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள் 'இலவசச் சத்துணவுத் திட்டத்'தை அறிமுகப் படுத்தியிருக்கிறார்.

இதைப் பற்றித் தமிழ்நாடு அரசு தலைமைச் செயலாளர் திரு க. திரவியம் அவர்கள் மிகவும் மகிழ்ச்சியோடு விவரித்தார்—

"இந்தத் திட்டத்தைப் பற்றிப் பலர் பலவிதமாக விமரிசிக்கிறார்கள். ஆனால் நாங்கள் கூறுவதெல்லாம் தயவுசெய்து

மஞ்சுளா ரமேஷ்

இதை எந்தக் கட்சிக் கண்ணோட்டத்துடனும் பார்க்காதீர்கள் என்பதுதான்.

அன்னை தான் பெற்ற குழந்தைகளில் பேதம் பார்ப்பதுண்டோ? அதைப் போல நம் அன்னைத் திருநாட்டின் குழந்தைகள் பசியால் வாடி அதனால் நாட்டுக்கே பல கேடு ஏற்படும்போது, அதை நாம் பார்த்துக் கொண்டிருக்கலாமா?

முதல்வர் இந்தத் திட்டத்தை அறிவித்த மிகக் குறுகிய காலத்திலேயே செயல்முறைக்குக் கொண்டு வந்து விட்டோம். இதை இரண்டு பிரிவாகப் பிரித்திருக்கிறோம். 2—5 வயது வரையிலான குழந்தைகள். 5—10 வயதான குழந்தைகள். இதில் 2லிருந்து 5வரையிலான குழந்தைகளுக்கு ஒவ்வொரு கிராமத்திலும் மையங்கள் அமைத்திருக்கிறோம். அங்கு உணவு சமைத்துப் பரிமாறப்படும். 10 வயது வரையிலான குழந்தைகளுக்கு அவரவர் பள்ளியிலேயே மதிய உணவு அளிக்கப்படும்.

இப்படி 4.82 இலட்சம் குழந்தைகளுக்கு வருடத்தின் 365 நாட்களும் உணவு அளிக்கிறோம். தவிரவும் உள்ளூரில் அனைவரும் அறிந்த பெண்ணையே கூடுமானவரை விதவைப் பெண்களையே உணவு சமைக்கத் தேர்ந்தெடுக்கிறோம். இரண்டு ஆயாக்களை நியமிக்கிறோம். இப்படி 16000, ஏழைப் பெண்களுக்கும் 32000, ஆயாக்களுக்கும் வேலை வாய்ப்புக்கிடைத்திருக்கிறது.

இது ஆரம்பித்தவுடன் ஏராளமான விமரிசனங்கள், ஜோசியங்கள். இவ்வளவு பெரிய நிலையில் இந்தத் திட்டத்தை நடத்தும்போது குற்றம் குறைகள் இருக்கலாம். நான் இல்லையென்று சொல்லவில்லை. அவற்றை நல்ல முறையில் எடுத்துச் சொல்லி எங்களுக்குக் குற்றம் களைய உதவி செய்யுங்கள் என்றுதான் சொல்கிறோம்.

இரண்டாவது நாளே கோதுமை உணவா என்று கேலி. ஆனால் அரிசியை விட கோதுமையில் சத்து அதிகம். நாங்களே பல உணவுகளைச் சிபாரிசு செய்திருக்கிறோம். இதற்கென்றே கோவை அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரியைச் சேர்ந்த ஐந்து உணவியல் பேராசிரியைகளைப் பட்டியல் தயார் செய்யச் சொன்னோம்.

அந்த அந்த ஊரிலேயே கிடைக்கும் முருங்கை, கறிவேப்பிலை போன்ற எளிய ஆனால் சத்து மிகுந்த உணவு வகைகளை தேர்ந்தெடுத்துக் கொள்ளச் சொல்லியிருக்கிறோம்.

இதைப் பற்றிய பல எதிர்காலக் கனவுகள் எங்களுக்கு உண்டு. இப்பொழுது இரண்டு வயது முதலான குழந்தைகளுக்கு உணவு என்றுதான்





## எவர்சில்வர் ஹாட் கேஸ்

மதிய உணவை வேலைக்காரிகள் மூலமாக கணவருக்குஅனுப்பும் இல்லத்தரசிகளுக்கு ஒரு புதுமையான டிபன் கேரியரை 'சக்தி இண்டஸ்ட்ரீஸ்' அறிமுகப் படுத்தியிருக்கிறது. இது ஒரு 'ஹாட் பேக்' போல உள்ள கேரியர். இதனுள் வைத்து எடுத்துச் செல்லப்படும் உணவு ஆறுமணி நேரத்திற்குச் சூடாகவே இருக்கிறது. பூட்டும் வசதியும் இருப்பதால் வேலைக்காரிகளிடம் கொடுக்கும் போது பூட்டியே கொடுக்கலாம். கணவருக்கும் ஆறி அவலாகிப் போன சாதத்தைச் சாப்பிடும் அவதி இல்லை.

-ர. அதூர்.

ஆரம்பித்திருக்கிறோம். ஏனெனில் மனவியல் வல்லுநர்கள் 2 வயது முதல், குழந்தைகளுக்கு மூளை வளர்ச்சி ஏற்படுவதால் அந்தச் சமயத்திலேயே அவர்களுக்குச் சத்தான உணவு தேவை என்கிறார்கள். இரண்டிலிருந்து ஐந்துவரையில் அவர்கள் நன்கு போஷிக்கப்பட்டால், எதிர்காலத்தில் அவர்கள் மூளை வளர்ச்சி பாதிக்கப் படுவதில்லை என்கிறார்கள்.

எனவே கிராமங்களில் உள்ள பெண்கள் காலையில் தங்கள் குழந்தைகளை இந்த நிலையங்களில் கொண்டு வந்து விடலாம். இதிலே எந்த ஜாதி மத பேதமும் பார்ப்பதில்லை. எந்தக் குழந்தையும் பசி என்று வந்து நின்றால் அவர்களுக்கு உணவு அளிக்கச் சொல்கிறோம்.

இப்பொழுது கிடைத்துள்ள சுமாரான வசதியுள்ள இடங்களிலேயே உணவு படைக்கும் மையங்களை அமைத்திருக்கிறோம். இதையே நல்ல ஒரு இடமாக மாற்றி அங்கு சிறு தோட்டங்களை அமைக்கலாம். இதையே குழந்தைகளைப் பாதுகாக்கும் நிலையமாக (கிரீச்) மாற்றலாம். வேலைக்குச் செல்லும் பெண்கள் குழந்தைகளை இங்கு காலையில் விட்டு விட்டு மாலையில் அழைத்துச் செல்லலாம். இவர்களுக்காக ஓரளவு விளையாட்டுச் சாமான்களை அளித்து ஆரம்ப நிலைக் கல்வியையும் அளிக்கலாம். தோட்டக் கலை கொஞ்சம் பயிற்றுவிக்கலாம்.

இப்பொழுது நடக்கும் இந்தத் திட்டம் வெற்றிகரமாக நடைமுறைக்கு வந்துவிட்ட பிறகு எதிர்காலத்தில், மேலே சொன்னவற்றை நடத்தத் திட்டமிட்டுள்ளோம். ஆங்காங்கே இருக்கும் வசதிகளுக்கு ஏற்றவாறு இப்போதுகூடச் செயல் படுத்தும்படி பணித்திருக்கிறோம்.

இப்பொழுது திட்டமிட்டுள்ளபடி, ஆண்டுக்கு இந்தச் சத்துணவுத் திட்டத்துக்காக 100 முதல் 120 கோடி ரூபாய் செலவாகும் என மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

ஆனால் நாளுக்கு நாள் உணவருந்த வரும் குழந்தைகளின் எண்ணிக்கை

### உங்களுக்குத் தெரியுமா?

'மால்டோவா' பானத்துடன் ஏஷியாட்-82 சின்னமான 'அப்பு' யானைக்குட்டி படத்தைப் போட்டு விளம்பரப் படுத்துகிறார்கள். அது ஏன் தெரியுமா? 'ஏஷியாட் - 82' விளையாட்டுப் போட்டியில் பங்கு பெறப்போகும் ஒவ்வொரு விளையாட்டு வீரருக்கும் இந்தப் பானத்தைத்தான் அளிக்கப் போகிறார்கள். ஆம்ஸர்டாமிலும் பானங்களிடையே நடந்த போட்டியில் தரத்துக்காகத் தங்க மெடலையும் பெற்றுள்ளதாம்.



அதிகமாகிக் கொண்டே போகிறது. இதைப் பற்றி எங்களுக்கு மகிழ்ச்சியே. பசி என்று வரும் சின்னஞ் சிறுர்கள் வயிருர உண்டால் அதைக் கண்டு மகிழ்ச்சி அடையாத உள்ளங்கள் உண்டா?

எனவேதான் சொல்கிறேம், இது ஒரு பொதுத் திட்டம். நாட்டு நலத் திட்டம்.

இதில் எல்லோரும் ஒன்று சேர்ந்து முழுமூச்சாக இறங்க வேண்டும். இதில் கட்சியோ, மதமோ எந்தப் பேதமுமின்றி இணைந்து செயலாற்றினுல் நல்ல பயனை நாமே காணலாம். கிராமத்தில் உள்ள பெண்கள் இதற்கு முழு ஒத்துழைப்புத் தரவேண்டும். அவரவர்களால் ஆன சிறு உதவியாக ஒரு உணவு பதார்த்தம் செய்யக் காய் கறிகளை உதவலாம். தானியங்கள் உதவலாம். எதுவுமே செய்ய இயலவில்லையென்றுல் இந்தத் திட்டம் அங்கங்கு நன்ருக நடக்கிறதாஎன்று கண்காணிக்கவாவது செய்யுங்கள்.

இதில் ஏதேனும் குறைகள் இருப்பின் எங்களுக்கு எழுதுங்கள். நாங்கள் அதை உடனே அகற்றத் தேவையான முயற்சி செய்கிறேம். இவர்கள்நம் குழந்தைகள். நம் நாட்டின் எதிர்காலம் இதில் அடங்கி யிருக்கிறது. எனவே எல்லோரும் ஒன்றுபட்டு இத்திட்டம் முழு வெற்றி பெறப் பாடுபடுவோம்....''

என்று மிகவும் உருக்கமாக வேண்டுகோள் விடுத்தார் திரு திரவியம்.

ஒரு நிமிஷம் நினைத்துப் பாருங்கள். நாம் பெற்ற குழந்தை கொஞ்சம் வாடினுல் பதை பதைத்துப் போகிறேம். ''பசிக்குதா, கண்ணு?'' என்று அள்ளியணைத்து அமுதூட்டுகிறேம்.

ஆனுல் வாடிய முகத்தைப் பார்க்கக்கூட நேரமில்லாமல் ஓடும் பெண்களின் குழந்தைகளாகப் பிறந்து,பசியால் சின்ன வயிறு கருண்டு கதறியழுது ஓலமிட, அவர்கள் செய்த பாவம் என்ன? எந்நேரமும் வயிற்றுப் பிரச்னேயே பெரிய பிரச்னேயாக,வேறு எந்த சிந்தனேயும் இல்லாமல் போன சிறுவர்களின் எதிர்காலம் என்ன?

நம் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்ப பூட்ஸ்களை மாட்டும்போது, எங்கோ சில பிஞ்சுக் கால்கள் பசியால் தள்ளாடுவதை நினைத்துப் பாருங்கள்.

நமக்கு அரசியல் வேண்டாம்; கட்சி வேண்டாம்; இந்தத் திட்டத்தில் உள்ள நன்மைகளைப் பாருங்கள்.

நாம் ஒரு நாளைக்கு எவ்வளவோ செலவழிக்கிறேம். ஒரு கப் காப்பி ஒரு ரூபாய். ஒரு காப்பி சாப்பிடும் பணத்தை இந்தத் திட்டத்துக்கு அனுப்பலாமே? உங்களுக்கு ஏழைக் குழந்தைகளுக்கு உதவ மனம் இருக்கிறது. ஆனுல் பெருமளவில் அனுப்ப முடியாது. உங்களால் முடிந்த சிறிய தொகையை-ஒரு ரூபாயை-அனுப்புங்கள். அது கூடப் பெரிதில்லை; அதற்கென்று தபால் அலுவலகத்துக்குப் போய்,ஃபாரம் பூர்த்திசெய்து....அதுதான் கஷ்டம்இல்லையா?ஆனுல் நீங்கள் அதற்கென்று செலவழிக்கும் ஐந்து நிமிடம் ஒரு குழந்தையின் முகத்தை மலரச் செய்யும்.

இந்த நல்ல திட்டத்திற்கு முதலில் கல்கி - மங்கையர் மலர் நிறுவனம் ரூ 5000த்தை அளித்துத் துவக்கி வைக்கிறது. நீங்களும் உங்கள் நிதியுதவியை எங்களுக்கு அனுப்பி வையுங்கள். நாங்கள் அத்தனையையும் ஒன்று சேர்த்து எங்கள் 'மங்கையர் மலர் சகோதரிகள்' கொடுத்த பணம் என்று மகிழ்ச்சியுடன் அரசாங்கத்திடம் அளிக்கிறேம். குறைந்தபட்சம் ஒரு ரூபாய்; அதிகபட்சமாக எவ்வளவும் அனுப்பலாம். உங்கள் பெயர் மங்கையர் மலரில் பிரசுரமாகும்.

உங்கள் நிதியுதவியை ''முதல்வரின் சத்துணவுத் திட்டக் கணக்கு'' என்று குறிப்பிட்டு

**நிர்வாகி, மங்கையர் மலர், கிண்டி, சென்னை-32.**

என்ற விலாசத்திற்கு அனுப்பவும்.

பாத்ரூம்கள் பரிசுத்தமாக, பளிங்குபோன்ற
பளபளப்புடன், பார்வைக்கு அழகாகத் திகழ

# டாசெல்

## சுகாதார சாதனங்கள்

வெடிப்புகள் ஏற்படாமல்,
நீண்டகாலம்
உழைக்கக் கூடியவை.
விலை சகாயமானவை.






**தமிழ்நாடு**
**செராமிக்ஸ் லிட்.,**

25, செனடாஃப் ரோடு, சென்னை-600 018
போன்: 445321, 445420 445572




VITREOUS SANITARYWARE

EP. TA-103

# இந்தக் காலத்துப் பெண்களுக்கு...

சுப்ரமணியம்

'ஆரோக்கியமான உடல் உள்ள இடத்தில்தான் ஆரோக்கியமான உள்ளமும் இருக்கும்' என்று ஒரு பிரபலமான ஆங்கிலப் பழமொழியைச் சொல்லுவார்கள். அதிலும் முக்கியமாகப் பெண்களின் உடல்நிலை ஆரோக்கியமாக இருக்க வேண்டும். ஏனெனில் சந்ததிகளை உருவாக்கித் தருபவர்களே அவர்கள்தானே?

ஆனால் நம் நாட்டில் நிலைமை தலைகீழாக இருக்கிறது. 'இந்தப் பெண் 'அனீமிக்'காக இருக்கிறாள்' என்று சொல்லும் சொல் மிகச் சாதாரணமாகி விட்டது. பலவீனம், படபடப்பு, ரத்தமின்மை, சோகை, இதனால் எழும் கோபங்கள், இதன் விளைவாக வீட்டில் சங்கடங்கள்...

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். இவை எல்லாவற்றுக்கும் மூலகாரணமாக இருப்பது பெண்கள் பலவீனமாக இருப்பதுதான். நாட்கணக்கில், மாதக் கணக்கில் மாத்திரைகள் சாப்பிட்டுக் கொண்டிருந்தாலும், டானிக்கைக் குடித்துக் கொண்டிருந்தாலும் உடல்நிலை தேறிவிடாது. பெண்களின் பலவீனத்துக்கு மூலகாரணம் என்ன என்பதை அறிந்து அதைக் களைய வேண்டும்.

பழைய காலப் பெண்கள் 'இல்ல'த்தரசிகளாக மட்டுமே இருந்தார்கள். அவர்களுக்கு 24 மணி நேரமும் வேலை சரியாக இருக்கும். மாவுஇடிப்பது, அரைப்பது, குனிந்து நிமிர்ந்து சமையல் செய்வது, அடுப்பினால் ஏற்படும் ஏராளமான அதிக வேலைகள் இப்படிப் பெருகிக்கொண்டே போகும். இவையெல்லாம் இயற்கையான உடற்பயிற்சிகளாக இருந்தன.

இன்றைய உலகில் எல்லாமே அவசரம்தான். அதற்கேற்பமெஷின்கள். குனியத் தேவையே இல்லாமல் காஸில் சமையலும், மிக்ஸியில் அரைத்தலும் நிமிஷமாக முடித்து விடலாம். அப்போதுதான் அவள் ஒன்பதுமணி பஸ்ஸைப் பிடித்து ஆபீஸ் போய்ச்சேர முடியும். அங்கேயும் உடல் ரீதியாக எந்த வேலையும் இல்லை. பெரும்பாலும் உட்கார்ந்து கொண்டோ நின்றுகொண்டோ செய்ய வேண்டிய வேலைதான்.

இந்த வேலை அவசரத்தினால் சரியான சத்துள்ள உணவைச் சாப்பிடாமை, சரியான உடலுழைப்பு இல்லாமை இவையெல்லாம் சேர்ந்து பெண்களைப் பலவீனமாக்கிவிடுகிறது. மேலும் மாதா மாதம் ஏற்படும் மாத விலக்காலும், அடிக்கடி ஏற்படும் பிரசவங்களினாலும் பெரும் ரத்தத்தை இழக்கின்றனர்.

இதனால் மேலும் மேலும் உடல் பலவீனமாகி மேலும் மேலும் உடல், மனோரீதியாக வெறுப்புக் கொண்ட பெண்களாகிறார்கள்.

'இந்தக் காலத்துப் பெண்களுக்கெல்லாம் பொறுமையே துளிகூட இல்லை....' என்று வாய்க்கு 'ஈஸி'யாகப் பேசிவிட்டால் தீர்ந்துவிடாது.

இவற்றை யெல்லாம் போக்க ஒரு வழி இருக்கிறது. அது யோகாசனம்!

'சரியாப் போச்சு! யோகாசனம் செய்து கொண்டிருந்தால், ஆபீசுக்கு என்றைக்குப் போய்ச் சேருவது? காலை நேர அவசரத்தில் தலைகீழாகநின்று கொண்டிருப்பார்களாக்கும் அதெல்லாம் சரிப்பட்டு வராது' என்று கூறி விடாதீர்கள்.

உங்களுடைய வேலை நேரங்களுக்கு ஏற்பத்தான் இதுவும் அமையும். 'யோகா' என்றாலே 'மனத்தை ஒன்றுபடுத்தல்' என்றுதான் பொருள். எனவே மனத்தை ஒன்றுபடுத்திச் சில ஆசனங்களைச் செய்வதன் மூலம் எல்



வளவு பலன் கிடைக்கிறது என்பதை நீங்களே அனுபவத்தில் புரிந்து கொள்வீர்கள்.

இன்றைய நாகரிக காலத்துக்கு ஏற்ப எவ்வளவோ விஷயங்களை மாற்றிக் கொண்டிருக்கிறோம். குமுட்டி ரசம் சுவையாக இருக்கும் என்று இன்றைக்கும் குமுட்டியிலேயே ரசம் வைக்க முடியுமா? அதுபோல அன்றைக்கு உடல் ரீதியாகப் பயிற்சி இருந்தது. இன்றைக்கு இல்லை. அதற்காக நாம் டாக்டர்களுக்கு எவ்வளவு செலவழிக்கிறோம். இயற்கையான முறையில் இதுவும் ஒரு வைத்தியமே.

யோகாசனம் அலோபதி மருந்தைப்போல மாத்திரையை விழுங்கியவுடன் 'டக்' கென்று ஜுரத்தை நிறுத்தி விடாது. ஆனால் நோயின் மூலாதாரத்துக்கே சென்று அதன் காரணங்களை ஆராய்ந்து நோயின் மூலத்தை அழிக்கிறது.

யோகாசனத்தினால் ஏராளமான நீரிழிவுக்காரர்களும், மூல வியாதி இருந்தவர்களும் குணமடைந்திருக்கிறார்கள். பல வியாதிகளும் மட்டுப்பட்டிருக்கின்றன.

இனி வரும் இதழ்களில் சில ஆசனங்களை விவரிக்கிறேன். இவற்றை எப்படிச் செய்ய வேண்டும், எதற்காகச் செய்ய வேண்டும், இதன் பலன் என்ன என்பதெல்லாம் வரும்.

இங்கு பிரசுரமாகும் படங்களைப் பாருங்கள். ஆனால் இவற்றை ஒரு வழிகாட்டியாக வைத்துக்கொண்டு முறையாக ஒரு குருவிடம் கற்பது நல்லது. (தொடரும்)

# அமிர்தாஞ்சன் அறியும் தலைவலியின் கடுமையை

தலைவலி என்றாலே தாங்க முடியாத வேதனைதான். அதைப்போக்க சுலபமானவழி, அமிர்தாஞ்சன். சிறிதளவு அமிர்தாஞ்சன் எடுத்து நன்றாக அழுத்தித் தேயுங்கள். தலைவலியிலிருந்து இதமான உடனடி நிவாரணம் கிடைக்கும்.

அமிர்தாஞ்சன் மற்ற மருந்துகளைப் போலல்ல, அமிர்தாஞ்சனில் உள்ள சக்திமிக்க 10 மருந்துப் பொருட்கள் உடனடியாக செயல்புரிந்து வலியிலிருந்து உங்களுக்கு துரிதமாக நிவாரணம் அளிக்கின்றன. தீங்கு செய்யும் பின் விளைவுகள் எதுவுமில்லை.

85 ஆண்டுகளுக்கும் மேலாக புகழ்வாய்ந்த அமிர்தாஞ்சன் உடல்வலி, சுளுக்கு, ஜலதோஷம் மற்றும் தொண்டைப்புண் இவற்றிலிருந்தும் சிறந்த நிவாரணம் அளிக்கிறது.

எப்பொழுதும் அமிர்தாஞ்சன் உங்கள் கைவசம் இருக்கட்டும். ஏனெனில், அது எப்போது தேவைப்படுமென்று சொல்ல முடியாது.




# அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது. தீய பின்விளைவுகள் இல்லாதது.

OBM 7652TM

# இம்மாத இல்லத்தரசி

முதல் பரிசு — தண்ணீர் டிரம்

## வேர்க்கடலை குஞ்சம்

### தேவையான பொருட்கள்:

வேர்க்கடலை அரை லிட்டர்
ஜவ்வரிசி அரை கப்
மைதா மாவு ஒரு கப்
உருளைக்கிழங்கு அரை கிலோ
வெண்ணெய் அரை கப்
பிரட் 4 ஸ்லைஸ்
எலுமிச்சம்பழம் 2
பெரிய வெங்காயம் 6
இஞ்சி ஒரு அங்குலம்
கொத்தமல்லி ஒரு கட்டு
டால்டா அரை லிட்டர்
பச்சை மிளகாய் 8
முட்டை 2
தேவையான அளவு உப்பு



பரிசுகளை வழங்கியவர் :

**சரவணா ஸ்டோர்ஸ்,**
**13, ரங்கநாதன் தெரு,**
**சென்னை—17.**

### செய்முறை:

செய்முறை: வேர்க்கடலையை நன்றாக வறுத்துப் பொடி செய்து உருளைக்கிழங்கை அவித்து எடுத்து பிரட்டைப் பொடியாக்கி இஞ்சி, பச்சை மிளகாய், உப்பு இவைகளைத் தண்ணீர் தெளித்து அரைத்து எலுமிச்சம் பழம் பிழிந்து வெண்ணெய் சேர்த்து எல்லாக் கலவையையும் பிசைந்து சேர்த்து ஒரு மணி நேரம் வைக்கவும்.

மைதா கரைத்து, ஜவ்வரிசியை ஊறவைத்து பிசைந்து, முட்டையை நன்றாக அடித்து மூன்றையும் ஒன்றாகக் கலந்து பஜ்ஜி மா பதத்தில் கரைத்துக் கொள்ளவும். வெங்காயத்தை



இரண்டாக நறுக்கி ஒவ்வொரு இதழாக எடுத்துவிட்டுக் கிண்ணம் போல் கடைசியில் இருக்கும் வெங்காயத்தில் வேர்க் கடலைக் கலவையை வைத்து அடைத்து கொத்த மல்லியைப் பொடிப் பொடியாக நறுக்கி, அதன் மேல் சிறிதுதூவி, முட்டைக் கலவையில் நனைத்து, டால்டாவில் பொன் நிறமாக வெந்ததும் எடுக்கவும்.

வி. மங்களம்,
நெ. 9, மகாலட்சுமிசேரன் நகர்,
மேட்டுப்பாளையம் ரோடு,
கோவை-641020



**இரண்டாம் பரிசு** இட்லி குக்கர்

## வேர்க்கடலை கோவா கேக்

### தேவையான பொருட்கள் :

நிலக்கடலை வறுத்துத் தோல் நீக்கியது ஒரு கப்
பொரிகடலை மாவு அரை கப்
கார்ன் பிளவர் அரை கப்
முட்டை 2
சீனி 3 கப்
தேங்காய் அரை மூடி
டால்டா அல்லது நெய் 2 கப்
ஏலக்காய்ப் பொடி ஒரு டீஸ்பூன்
குங்குமப்பூ ஒரு தேக்கரண்டி
தண்ணீர் ஒரு கப்
முந்திரிப் பருப்பு 20 கிராம்
பிஸ்தாப் பருப்பு 10 கிராம்
பாதாம் பருப்பு தோல் நீக்கியது 6
கோவா 2 தேக்கரண்டி
செர்ரி பழம் 100 கிராம்

முன்னதாக:

பொரிகடலை மாவு, கார்ன் பிளவர் இரண்டையும் சலித்து, முட்டையை நன்முக நுரை பொங்க அடித்து. நிலக்கடலையை ஒன்றிரண்டாக பொடித்து, பிஸ்தாப் பருப்பையும் நன்முகச் சிறு துண்டுகளாகப் பொடித்து, தேங்காயைத் துருவி, குங்குமப் பூவை நன்முகப் பொடி செய்து வைத்துக் கொள்ளவும்.

### செய்முறை:

சீனியை அடிக் கனமான பாத்திரத்தில் போட்டு பாகு காய்ச்சவும். சீனி கரைந்ததும் பொரி கடலை மாவு, கார்ன் பிளவர், இரண்டையும் தூவி கட்டி பிடிக்காமல் கிளறவும். சூடாக்கிய டால்டாவில் பாதியை சேர்த்துச் சிறு தீயில் கிளறவும். டால்டாவை கலவை உறிஞ்சிப் பொங்கி வரும்போது நிலக்கடலை, முட்டைக் கலவை, தேங்காய், ஏலக்காய்ப் பொடி, குங்குமப்பூ, கோவா, பாதாம் பருப்பு முதலியவற்றைச் சேர்த்து மீதமுள்ள டால்டாவைச் சிறிது சிறிதாகச் சேர்த்துக் கைவிடாமல் கிளறவும். கலவை அடியில் ஒட்டாமல் திரண்டு வரும்போது அப்படியே இறக்கி, நெய் தடவிய தட்டில் கொட்டினால் தானுகப் பரவிக்கொள்ளும். அதன்மேல் நெய்யில் வறுத்த முந்திரிப் பருப்பையும், பிஸ்தாப் பருப்பையும் தூவி அலங்கரித்து வில்லை போட்டு ஒவ்வொரு வில்லை நடுவிலும் செர்ரிப் பழத்துண்டங்களை வைத்தால் பார்க்க மிக அழகாகவும் சுவைப்பதற்கு மிகவும் ருசியாகவும் இருக்கும். உடம்புக்கு மிக சத்தானது.

ரா. ரேவதி
4-2-26, விநாயகர் கோயில் தெரு,
உசிலம்பட்டி,
மதுரை மாவட்டம்

**மூன்றும் பரிசு** டிபன் கேரியர்

## வேர்க்கடலை மட்டன் கபாஃப்

### தேவையான பொருட்கள்:

வேர்க்கடலை 200 கிராம்
பொட்டுக்கடலை 200 கிராம்
மட்டன் அரை கிலோ
சிறிய வெங்காயம் 200 கிராம்
பச்சைமிளகாய் 50 கிராம்
தேங்காய்த் துருவல் ஒரு மூடி
பூண்டு 10 கிராம்
கசகசா 2 தேக்கரண்டி
பட்டை சிறிதளவு
சோம்பு ஒரு தேக்கரண்டி
ஏலக்காய் 1
இஞ்சி ஒரு துண்டு
டால்டா கால் கிலோ
கொத்தமல்லிக் கட்டு ஒன்று
கறிவேப்பிலை, உப்பு தேவையான அளவு

### செய்முறை:

முதலில்வேர்க்கடலையைக்கொஞ்சம்இளஞ் சூட்டில் வறுத்து எடுத்து அதை மிக்ஸியிலோ கல்லிலோ வைத்துப் பவுடர் செய்து





கொள்ளவும். மட்டனை மிகவும் சின்னதாகக் கொத்தி வைக்க வேண்டும். வெங்காயத்தையும் பூண்டையும் தோல் உரித்து வைத்துக் கொள்ளவும். மட்டனை லேசாகக் கொஞ்சம் டால்டாவில் அல்லது எண்ணெயில்வதக்கிக் குக்கரில் 10 நிமிடம் வைத்து எடுத்துக் கொள்ளவும். பொட்டுக்கடலை, கசகசா, இஞ்சி, பட்டை, சோம்பு, ஏலக்காய், பூண்டு தேங்காய் ஆகியவற்றை நன்றாக அரைக்க வேண்டும். சிறிதளவு தண்ணீர் சேர்த்து கெட்டியாக அரைத்தபின் மட்டனையும் அதுடன் போட்டு அரைத்து தேவையான உப்பைச் சேர்த்து, மல்லி, கறிவேப்பிலையைக் கிள்ளிப் போட்டு மஞ்சள் தூளையும் கலந்து எடுத்து வைத்துக் கொள்ளவும்.

அடுப்பில் வாணலியை வைத்து அதில் இக்கலவையை வடை போல் தட்டி அதை வேர்க்கடலைப் பவுடரில் புரட்டி இரண்டு இரண்டாகப் போட்டு எண்ணெயிலோ டால்டாவிலோ போட்டுப் பொன்னிறமாக எடுக்க வேண்டும். இதைத் தக்காளிச் சாறுடன் சாப்பிட நன்றாக இருக்கும்.

என். வசந்தி மோகன்
பி 3/314 கைலாசபுரம், திருச்சி-14

**ஆறுதல் பரிசு** டால்டா டப்பா

## இனிப்பு கலவைப் பொடி

### தேவையான பொருட்கள்:

வறுத்த வேர்க்கடலைப் பருப்பு அரை லிட்.
என் அரைக்கால் லிட்டர்
ராகி மாவு கால் லிட்டர்
வெல்லம் அரை கிலோ
ஏலப்பொடி கால் தேக்கரண்டி
நெய் ஒரு சின்னக் கிண்ணம் அளவு

### செய்முறை:

ராகி மாவுடன் தேவையான அளவு வெல்லம் பொடித்துப் போட்டுப் பிசைந்து வாழை இலையில் அடை போலத் தட்டி தோசைக் கல்லில் சுட்டு ஆறவைத்துக்கொள்ளவும். வேர்க்கடலைப் பருப்பைத் தோல் நீக்கிப் பொடி செய்துகொள்ளவும். ஒன்றிரண்டாக இருக்கலாம். என்னைச் சற்று நெய்யில் வறுத்துப் பொடி செய்து கொள்ளவும். பின் ஆறவைத்துள்ள அடைகளையும் பொடி செய்துகொள்ளவும். பின் வெல்லத்தையும் நன்கு பொடித்துக் கொண்டு ராகிப் பொடி, என்னுப் பொடி, வேர்க்கடலைப் பொடி, ஏலப்பொடி, நெய் எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து கொண்டு, உரலில் இட்டு நன்றாக இடித்துக் கொஞ்சம் தண்ணீர் தெளித்துச் சிறு சிறு உருண்டைகளாகப் பிடிக்கவும். வளரும் குழந்தைகளுக்கும் அனைவருக்கும் ஏற்ற சத்துருண்டை இது.

கே. சங்கரி
76, பெரிய தேவாங்கர் தெரு,
புவனகிரி-608601

**ஆறுதல் பரிசு** டால்டா டப்பா

## வேர்க்கடலை குல்கந்து

### தேவையான பொருட்கள்:

வேர்க்கடலை மாவு ஒரு கப்
கோதுமை மாவு ஒரு கப்
டால்டா ஒரு கப்
சீனி ஒரு கப்
பால் ஒரு கப்
முந்திரிப் பருப்பு 25 கிராம்
ஏலக்காய்ப் பொடி ஒரு டீஸ்பூன்
கேசரிப் பவுடர் ஒரு சிட்டிகை

### செய்முறை:

அடுப்பில் வாணலியை வைத்து டால்டா விட்டு, அது இளகியவுடன் சலித்தகோதுமை மாவு, வேர்க்கடலை மாவு, இரண்டையும் போட்டு நன்றாக வறுக்க வேண்டும். நன்றாகச் சிவந்த கலர் வரும்வரை வறுக்க வேண்டும். பிறகு தீயை குறைத்து சர்க்கரையை முதலில் போட்டு ஒரே தரம் கிளறி பிறகு காய்ச்சி வைத்திருக்கும் பாலை விட வேண்டும். பால் விட்டவுடன் கேசரிப் பவுடரையும் போட்டுக் கிளறும்போது சர்க்கரையும் நன்றாகக் கரைந்து கேசரிப் பவுடரும் கலந்துவிடும். சிறிது நேரம் கிளறி, பொடித்து வைத்திருக்கும் ஏலக்காய் பொடி, வறுத்த முந்திரிப் பருப்பு இவைகளைச் சேர்த்துக் கிளறி ஒரு தட்டில் கொட்டிவிட வேண்டும். நன்றாக ஆறியவுடன் ஒரு ஸ்பூனினால் கிளறினால் உதிரி உதிரியாக வந்துவிடும். இதுவே வேர்க்கடலை குல்கந்து.

பத்மாவதி நாராயண்,
15, அழகர் சுவாமி
நாயகர் தெரு,
விருதுநகர்



ஜூலை மங்கையர் மலர் இதழில் 'சுவை யூட்டும் குளிர் பானங்கள்' என்ற தலைப்பில் பழரசங்களிலிருந்து ஸ்குவாஷ் செய்யும் குறிப்புகள் வெளியாகியுள்ளன. இதில் சில முக்கிய குறிப்புகள் சொல்லாமல் விடப்பட்டுள்ளதாய் நினைக்கிறேன்.

(1) சர்க்கரையையும் தண்ணீரையும் கொதிக்க விட்டு சிட்ரிக் ஆசிட் கலந்து இறக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. சர்க்கரையோடு சிட்ரிக்ஆசிடையும் சேர்த்துத் தண்ணீரில் போட்டு, சர்க்கரையும் சிட்ரிக் ஆசிடும் கரையும் வரை அடுப்பில் வைத்தால் போதும். சிட்ரிக் ஆசிட் சர்க்கரையில் உள்ள அசுத்தங்களை வெளிப்படுத்தும் என்பதால் சேர்த்துக் காய்ச்ச வேண்டும்.

(2) அட்டவணையில் பழச்சாறு, சர்க்கரை, தண்ணீர் முதலிய அளவுகள் கொடுக்கப் பட்டுள்ளது.

இதில் பைனாப்பிள் ஸ்குவாஷ் செய்யும் போது, தண்ணீர் சர்க்கரை சிட்ரிக் ஆசிட் ஆகியவற்றைக் காய்ச்சி வடிகட்டி, பைனாப் பிளின் சாற்றைக் கலந்து ஒரு கொதி வரும் வரை அடுப்பில் வைக்க வேண்டும். இவ்வாறு செய்தால்தான் பைனாப்பிளுக்கு இயல்பாக உள்ள தொண்டையைப்பாதிக்கும் கரகரப்பு, கமறல் தன்மையை அகற்ற முடியும். பைனாப் பிளில் உள்ள சில என்ஸைம்கள் தான் இதற்குக் காரணம். அடுப்பில் கொதிக்கும் வரை காய்ச்சுவதால் இந்த என்ஸைம்கள் கொல்லப்படுகின்றன.

இராட்சை ஸ்குவாஷ் செய்யும்போது பழங் களை நன்றாகக் கழுவி ஒரு பாத்திரத்தில் போட்டு மத்தால் நன்றாக மசிக்க வேண்டும். பிறகு அடுப்பில் வைதது 5–10 நிமிடம் வரை கொதிக்க வைத்தல் வேண்டும். இதனால் அதிக ரசமும், நல்ல ஆழமான நிறமும் (rich colour) பெறலாம். பிறகு காய்ச்சிய சர்க்கரை தண்ணீர்க் கலவையில் சேர்க்க லாம்.

சாந்தா அனந்தராஜன்

# லக்ஷ்மி, ராவே மா இண்டிக்கி!

இந்து கலாசாரத்தின் பல பெருமைகளுள் ஒன்று — பண்டிகைகள் இல்லத்தரசிகளின்ஏகபோகச் சொத்தாக இருப்பது. பல பண்டிகைகள் வீட்டுப்-பெண்கள் அனைவரும் ஒன்றுகூடி, மஞ்சள், குங்குமம், புஷ்பத்துடன் மங்களகரமாக மகிழ்ச்சிகரமாகக் கொண்டாடப்படுகிறது. அவற்றுள் தென்னிந்தியாவில் சமீப காலமாகப் பிரபலமாகி வரும் பண்டிகை வரலட்சுமி நோன்பு.

இந்த நோன்பில் பல சிறப்பம்சங்கள் இருக்கின்றன. இது முதலில் தெலுங்கு பேசும் மக்களின் பண்டிகையாகத்தான் இருந்தது. அவர்கள் 'வரமகாலட்சுமி நோன்பு' என்பார்கள். தமிழகத்தில் விஜயநகரப் பேரரசு பரவி, பிறகு நாயக்கர்களின் ஆட்சி விரிவடைந்த போது தெலுங்கு பேசும் மக்களும் குடியேறினார்கள். அவர்கள் செய்த இந்த நோன்பின் மகத்துவத்தைப் பார்த்து தமிழகப் பெண்களும் கைக்கொண்டார்கள். அப்படி வந்ததுதான் இந்த வரலட்சுமி நோன்பு.

மற்ற எல்லாப் பண்டிகைகளைப் போலவே இதுவும் பெண்களிடையே ஒற்றுமையையும், ஆன்மீகச் சிந்தனையையும், மன ஒருமைப்பாட்டையும் கொண்டு வந்தது என்பது ஒருபுறம் இருக்கட்டும். வேறு சில சிறப்பம்சங்களும் இந்நோன்பிற்கு உண்டு. இல்லத்துக்கு முதலில் தேவை லட்சுமி கடாட்சம். எனவே இவர்கள் பாடுவதே,

'லக்ஷ்மி, ராவே மா இண்டிக்கி'

(லக்ஷ்மி, என் வீட்டிற்கு வாடி) என்பதுதான். அவர்கள் பாடும் முறையைக் கவனித்தீர்களா? ஒரு தெய்வத்தைக் கூப்பிடுவது போலில்லை. காலம் காலமாகத் தன்னுடன் பழகிய தோழியை உரிமை அன்போடு கூப்பிடுவதுபோலக் கூப்பிடுகிறார்கள். ஆமாம் பெண்களின் உற்ற தோழியாக 'லக்ஷ்மி' இருந்தாலல்லவா வீட்டிலும் செல்வம் வளரும்; அதனால் எல்லா நன்மைகளும் பெருகும்.

அதே போல மற்றொன்று, இந்த நோன்பு குடும்ப ஒற்றுமைக்கும் ஒரு காரணமாகிறது. அன்னை பெண்ணுக்கு

# உனக்கு மிஞ்சியதைத் தர்மம் செய்

நோன்பு என்பது இஸ்லாம் மதத்தின் ஐம்பெரும் கட்மைகளுள் ஒன்றாகும். அது ரம்ஜான் மாதத்தில் பருவமடைந்த முஸ்லிம் ஆடவர், பெண்டிர் யாவரும் பஜ்ருத் தொழுகையின் நேரம் ஆரம்பமானது முதல் சூரியன் அஸ்தமிக்கும்வரை உண்ணுதல், குடித்தல் போன்ற காரியங்களைச் செய்யாமல் தவிர்த்துக்கொள்ளும்படியான புனித வணக்கமாகும். இதனைப் பின்பற்றியே தான் நாமும் அந்த மாதம் முழுவதும் நோன்பு நோற்க வேண்டும்.

ஷஃபான் மாதம் 29ம் நாள்ரம்ஜான் பிறையை நோக்க வேண்டும். (இந்த வருடம் ஜூன் 22ந் தேதி தெரிந்தது) பிறை தென்படின் மறுநாள் நோன்பு அனுஷ்டிக்க வேண்டும். மேகம், புழுதி முதலிய காரணங்களால் பிறை தென்படவில்லையாயின் ஷஃபான் முப்பது நாளும் பூர்த்தியான பின் மறு நாளும் நோன்பு அனுஷ்டிக்க வேண்டும். 'ரம்ஜான்' பிறையைப் பார்த்ததாக அல்லாவின் பயபக்தியும் மத பக்தியுமுடைய ஒரு நல்லவன் சொன்னால் நம்பலாம்.

நோன்பு வைக்கிறேன் என்று சொல்லி, 'நிய்யத்துச் செய்தல்' (உறுதி கூறுதல்) கடமையாகும். ஒருவன் பஜ்ருத் தொழுகையின் நேரம் ஆரம்பமானது முதல் சூரியன் அஸ்தமிக்கும் வரை உண்ணுதல், குடித்தல் போன்ற செயல்களைத் தவிர்த்து, நோன்பாளியைப்போலிருந்தாலும் நோன்பின் 'நிய்யத்து'ச் செய்யாவிடில் அது நோன்பாகாது. இரவிலேயே நிய்யத்துச் செய்வது நலமாகும். நிய்யத்துச் செய்வதில் 'நாளை நோன்பு வைக்கிறேன்' என்று மனத்தில் எண்ணிக் கொண்டால் போதும். எனினும் நாவினால் சொல்வது மிகச் சிறந்ததாகும். அந்நியத்தானது,'இந்த வருஷத்தின் நன்னுளான

முதல் குரு. அதற்கடுத்து அவள் மணாளனை மணந்து புகுந்த வீடு போகும் போது அங்கு மாமியாரே இவளுக்கு 'குரு'வாகிறாள். அன்னையின் பாதையில் நடந்து நல்ல பெண்ணாக வளருபவள், மாமியாரிடம் அவர்கள் வீட்டின் பழக்க வழக்கங்களைக் கற்றுச் சிறந்த இல்லத்தரசியாகிறாள்.

அன்னையும், மாமியாரும் குருவாக ஆவதை வரலட்சுமி நோன்பிலேயே காணலாம். ஒவ்வொரு பெண்ணும் இவர்கள் இருவரிடமிருந்தே இந்த நோன்புகளை மாணவியாக இருந்து வாங்கிக் கொள்ள வேண்டும். இன்றைக்கு மாமியார் மருமகள் உறவு ஏகப்பட்ட சிக்கலுடன் இருக்கிறது. ஆனால் இந்த நோன்பு இவர்களிடையே ஒரு அருமையான உறவை சிருஷ்டிக்கிறது.

அது மட்டுமல்ல. தன் கணவன் மட்டுமே குடும்பமல்ல, தானும் தன் குழந்தைகளும் மட்டும் சௌக்கியமாக இருந்தால் போதாது என்பதையும் சுட்டிக் காட்டுகிறது. பூஜை முடிந்த மறுநாள் மாலை அம்மனுக்கு வழிபாடு செய்யும்போது இதைப் பாட்டாகப் பாடிக் காட்டுகிறார்கள். எப்படி?

''சிட்டிசிட்டி பொம்மலே,
ஸ்ரீதோரணம்முலே
சின்னநா பிரஸன்னுக்கு
பெள்ளன்னடே?
மாகமாகம்முனு மஞ்சி
முகூர்த்தமுனு
சுக்கூர வாரமின
சுகதி பெள்ளி''

என்று இப்படி முதலில் மாமியார், மாமனாரிலிருந்து தன் வீட்டில் இருக்கும் சிறு குழந்தைவரை அவரவர்களுக்குத் தேவையான வளங்களைப் பெற்று வாழ அருள் செய் அம்மா' என்று அந்தப் பெண் வேண்டுகிறாள். 'குழந்தைக்குப் பருப்பும், பாயசத்துடன் என்றைக்கும் உணவு கிடைக்க வேண்டுமாம்!' இந்த அளவுக்கு அந்தப் பாட்டு அமைகிறது.

பெண்களிடையே சுயநலம் போய், சுற்றத்தாருடன் இயைந்து வாழும் ஓர் அற்புதமான மனநிலையை இந்தப் பண்டிகை உருவாக்குகிறது. இதோடு

---

ரம்ஜான் நோன்பை அன்பாக நானே நோற்க நிய்யத்துச் செய்கிறேன்' என்பதாகும்.

பின்பு சூரியன் அஸ்தமிக்கும் வேளையில் நோன்பை விடும் சமயத்தில் 'அல்லாவே! நான் உனக்காகவே நோன்பு நோற்கிறேன். உன்னால் கொடுக்கப்பட்ட ஆகாரத்தைக் கொண்டே நோன்பு திறக்கிறேன். உன்னை விசுவாசிக்கிறேன். மேலும் உன்னையே நம்புகிறேன்' என்று நாவினால் சொல்லி பேரீச்சம் பழம் கொண்டு நோன்பைத் திறக்க வேண்டும். (திறத்தல் என்றால் ஆரம்பித்தல் என்று பொருள்) சுத்தமான தண்ணீராலும் நோன்பு திறக்கலாம். இனிப்பான பதார்த்தங்களைக் கொண்டு நோன்பு திறத்தல் சிறந்தது. இஸ்லாம் மார்க்கத்துக்கு முரண்பட்ட முறையில் சேகரித்த பொருளால் நோன்பு திறப்பதால் நோன்பின் பலன் கிடைக்காமல் போய்விடுகிறது.

தன்னைவிட வறுமையான ஒருவருக்கு நோன்பு திறக்கச் செய்வது சாலச் சிறந்தது. நோன்பாளிக்கு உணவளிப்பதன் பலனாவது, 'யாராவது ஒருவர் நோன்பாளிக்கு நோன்பு திறக்க உணவளித்தால் அவருடைய சிறிய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப் படுகின்றன. நரக நெருப்பிலிருந்து அவருக்கு விடுதலை கிடைக்கிறது. அவருக்கு அந்த நோன்பாளிக்குக் கிடைக்கும் அளவு நன்மையும் கிடைக்கிறது. உணவு கொடுக்க முடியாதவர்கள் ஒரு அளவு பாலை நோன்பாளிக்குக் கொடுப்பதால் அந்த நன்மையைப் பெற்றுக்கொள்ளுவான்' என்று குர்-ஆனில் கூறப்பட்டிருக்கிறது.

பொதுவாக இந்த மாதம் முழுவதுமே தான தர்மங்கள் நிறைந்திருக்க வேண்டும். ஏழைகளுக்கு உணவளித்தல், துணி மணிகள் தருதல், இவையெல்லாம் பெரும் தருமங்களாகின்றன.

### நோன்பை முறியடிக்காத செயல்கள்

நோன்பு நோற்றுக் கொண்டிருக்கும் போது எண்ணெய் தேய்த்துக் குளித்

நின்றதா? கடைசியில் லக்ஷ்மியை, 'வாடி' என்று அழைத்து ஆராதித்து அவளிடம் வரங்களை வேண்டிப் பெற்றவர்கள், இறுதியில் மாமியார் வீட்டிற்கே அனுப்பி விடுகிறார்கள்.

ஆமாம், மறுநாள் மாலை அம்மனைப் பாட்டுப் பாடி ஆரத்தி எடுத்த பின் அன்னை மகளோ, மாமியார் மருமகளோ ஆளுக்கொரு புறம் பிடித்துக் கொண்டு போய் ஒரு அறையில் வைத்துக் கதவைச் சாத்திக் கொண்டு வந்துவிடுவார்கள். பெண்ணின் வாழ்க்கை பூரணத்துவம் அடையும் தத்துவத்துடன் இப்பண்டிகையும் பூர்த்தியாகிறது.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த பண்டிகையைப் பற்றி **திரு. டி. எஸ். பாலகிருஷ்ண** சாஸ்திரிகளிடம் கேட்ட போது அவர் இதைப் பற்றி மேலும் சிறப்பாக விளக்கினார்:

ஆவணிமாதம் சுக்லபக்ஷம் (பௌர்ணமிக்கு முந்தி வருகிற ஒரு சுக்ரவாரத்தில் (வெள்ளிக் கிழமை) லக்ஷ்மி திருப்பாற்கடலில் அவதரித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. அந்த நாளையே லக்ஷ்மி பூஜைக்கு உகந்ததாக 'விரத கல்பம்' (வ்ரதங்கள் செய்யும் முறை நூல்) காட்டுகிறது. அந்தக் கல்பத்தில் சொன்னபடி ஸுமங்கலி மங்கையர் வரலக்ஷ்மியை ஆஸனம் ஆவாஹனம், தியானம், ஸ்னானம், தூபம், தீபம், நைவேத்யம் முதலிய 16 விதமான பூஜை உபசாரங்களைச் செய்து மகிழ்கிறார்கள்.

செல்வத்தைத் தரும் சக்தி தெய்வம் லக்ஷ்மி. லக்ஷ்மி எட்டு விதமாகத் தோற்றம் கொண்டவள். அதில் அனைவருக்கும் வேண்டியது ஸௌபாக்கிய லக்ஷ்மியின் இருவருள். ஸௌபாக்கியம் என்றால், ஆரோக்கியம், கணவனுடன் வாழும் ஸௌமாங்கல்யம், நன்மக்கள், அமைதியான இல்லறம், அன்யோன்யமான வாழ்க்கை இவைகளைக் குறிக்கும். ஒரு பெண், என்றும் தன் சுய நலனுக்காக இறைவனிடம் வேண்டியதே இல்லை. தன் கணவன், குடும்பம், மக்கள் இவர்கள் வாழ்வு பெறவே தான் இல்லத்தின் அன்னை அகில உலகத்திற்கும் அன்னையிடம் வேண்டுகிறாள். எந்த ஒரு பூஜைக்கும் நம்பிக்கையும், இட உறுதியும், சிரத்தையும் முழுமையான ஈடுபாடுமே பலனைத் தரும்.

---

தல், கண்ணில் மை இடல், குளிர்ச்சிக்காக ஈரமான புடவை அணிதல், புகை, தூசி முதலியவை தொண்டையில் நுழைதல், காதில் தண்ணீர் செல்லுதல், போன்ற செயல்களால் நோன்பு முறிவதில்லை.

**நோன்பை முறித்துவிடும் செயல்களாவன:** காதில் மூக்கில் மருந்து அல்லது எண்ணெய் ஊற்றினாலும், பீடி 'சிகரெட், பொடி முதலியவை உபயோகிப்பதாலும் நோன்பு முறிவாகி விடும்.

இம்மாதத்தின் பதினைந்தாம் நாளும் இருபத்தேழாம் நாளும் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படும். பதினைந்தாம் நாளில் குழந்தைகள் உள்ள வீட்டில் குதூகலம் பொங்கும். அன்றைக்கு அவர்களுக்குப் புத்தாடை அணிவித்து அழகாக அலங்கரிப்பார்கள். ஏழு வயதுக் குழந்தைக்கு நோன்பைத் தொடங்கி வைப்பார்கள். சில குழந்தைகள் ஒரு நாளைக்கு, சிலர் மூன்று நாளைக்கு, சிலர் பதினைந்து நாளைக்கு என இருப்பார்கள். குழந்தைகளின் பொருட்டும் இந்த நாள் சிறப்பாகக் கொண்டாடப்படும்.

ரம்ஜானின் 27ம் நாளின் முன்னிரவு 'சத்தாவா' என்ற மாட்சிமை மிக்க இரவாகக் கொண்டாடப்படும். இந்த இரவின் சிறப்பைக் குறித்துச் சில அறிஞர்கள் அடையாளங்கள் கூறியிருக்கின்றனர்: நாய், கழுதை இவைகளின் சப்தம் குறைவாக இருக்கும். உப்பு, தண்ணீர் முதலியன ருசியாய் இருக்கும். இவ்விரவு முடிந்து காலையில் உதயமாகும் சூரியன் மிகத் தூய்மையானதாகவும் பிரகாசமானதாகவும் தோன்றும். காரணம் அன்றிரவில் அல்லாவின் சிருஷ்டிப் பொருட்கள் யாவும் அவனின் வணக்கத்திலும் ஞாபகத்திலும் மூழ்கியிருப்பதினால்தான் என்ற பொருளாகும். எனவே அவ்விரவு முழுவதும் அனைவரும் கண் விழித்து 'நபில்' தொழுகைகளைத் தொழ வேண்டும். தம்மாலியன்ற தர்மம் செய்ய வேண்டும்.

சுற்றத்தார்கள் யாவருடைய நலனுக்காகவும் பிரார்த்திக்க வேண்டும்,

ஆண்டுக்கு ஒரு முறை ஆவணி மாதம் சுக்ல பக்ஷத்தில் (பௌர்ணமிக்கு முன்) வரும் வெள்ளிக் கிழமையில் இந்தப் பூஜையைச் செய்கிறார்கள். கும்பம்,* பிம்பம் என்ற முறையில் இந்த வழிபாடு; கும்பம் என்பது இங்கு கலசமாகும். ஒரு கலசத்தில் வெண்மை தடவி, நூல் சுற்றி தேவியின் முகத்தை எழுதி, அலங்கரித்து கலசத்துக்குள் பழமையான மங்களப் பொருட்களான பச்சோலை, கருகமணி, அரிசி இவைகளை இட்டு, மாவிலை, தேங்காய் வைத்து மூடி, அன்னை வரலக்ஷ்மியாகக் கொண்டு வீட்டின் முகப்பிலிருந்து ஸுமங்கலிகள் பாடிய வண்ணம்வீட்டுக்குள் அழைத்து வருகிறார்கள். வீட்டின் உள்ளே அமைந்துள்ள பூஜை அலங்கார மண்டபத்தில் கலச வடிவாகி எழுந்தருளிய அன்னை திருமகளை அமர்த்தி, பூஜை துவங்குகிறது.

இதன் முடிவில் 'தோரகிரந்தி பூஜை' என்று மஞ்சள் கயிற்றுக்குச் செய்யும் பூஜை முக்கியமானது. தேவியின் ஒன்பது நாமங்களைக் கூறி இந்த மஞ்சள் கயிற்றுக்குப் பூஜை செய்து, பிறகு கயிற்றைத் தங்கள் வலது கையில் கட்டிக்கொண்டு, குருவுக்கும், பெரியோர்களுக்கும் நமஸ்கரித்து ஆசி பெறுவர். பூஜை நிறைவு பெறுகிறது.

அநேக குடும்பங்களில் இந்த விரத பூஜையைக் கைக்கொள்வ தில்லை. விரத கல்பங்களில் நூற்றுக் கணக்கான நோன்புகள் சொல்லப் பட்டுள்ளன. யார் யார் எதை எதை விரும்பி ஏற்றுக் கொள்வார்களோ அவை அவை அவர்களுடைய பக்தியும் உண்மையான சிரத்தையும் கருதி, அவர்களுக்கு நற்பயனை அளிக்கும்.

நம் குல சம்பிரதாயத்தில் வரும் எந்த வழிபாட்டையும் நாம் தள்ளக்கூடாது. அவை அவசியம் அன்புடன் செய்யத்தக்கவை. இந்த ''வரலக்ஷ்மி விரத'' பூஜையும் அத்தகையதே. இதைச் செய்து மகிழும் மங்கையருக்கு தேவி ஸ்ரீ வரமகாலக்ஷ்மி, ஸௌமாங்கல்யம், ஸௌபாக்யம், நன்மக்கள், அமைதியும் அன்யோன்யமும் கொண்ட இல்லறம் ஆயுள், ஆரோக்கியம் இவைகளை அருள்வாள்.

தொகுப்பு : பப்பு

---

செத்தவர்களுக்காகவும் இறைவனிடம் வேண்டிக்கொள்ள வேண்டும். குறிப்பாக அவ்விரவில் பாவ மன்னிப்பு தேடுவதுடன் கைகால் சுகத்திற்காக வேண்டியும் பிரார்த்திக்க வேண்டும். ஒட்டு மொத்தமாகச் சொல்லப் போனால் உற்றார் உறவினரிலிருந்து இறந்தவர்கள் வரைக்கும் அனைவரின் நலத்திற்காகவும் இறைவனை வேண்டுவதே அன்றிரவின் நோக்கமாகும்.

நோன்பின் அந்த 27ம் நாளன்று ஜகாத் (தர்மம்) செய்வது பற்றி திருக்குர்ஆன் வசனத்தில் கூறப்படுகிறது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியிருப்பதாவது. ''உங்களின் பொருள்களை ஜகாத் கொடுப்பதைக் கொண்டு (ஏழைகளுக்குத் தர்மம் செய்வது) காப்பாற்றிக் கொள்ளுங்கள் என்றும், அவர்கள் அவ்வாறு செய்யவில்லையாயின் அவர்களுடைய பொருட்கள்கடலிலும் தரையிலும் அழிந்து பயனற்றுப் போய்விடும் என்றும் சொல்லியுள்ளார்கள். 'ஆதாமுடைய மகனே! உனக்கு மிஞ்சுவதை நல்ல முறையில் செலவிடு. இல்லையெனில் அவைகளினால் உனக்குத் தீமை பயக்கும். நீ செலவு செய்; உனக்கு மற்றவன் செலவு செய்வான்' என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

ரம்ஜான் மாதத்தின் இறுதி நாளான 30-ம் நாள் இரவு பிறை நோக்கி நோன்பை விட்டு அடுத்த நன்னாள் திருப்பெருநாள் என்று வெகு விமரிசையாகக் கொண்டாடப் படுகிறது. அந்நாளில் எல்லோரும் புத்தம் புதிய ஆடைகளை அணிந்து இறைவனை வழிபடுகின்றனர்.

ரம்ஜான் மதத்தில் ஆடவர் பெண்டிர்இருவருக்குமே சமமானபங்கு இருப்பினும், பெண்களுக்கு வீட்டில் உள்ள எல்லா செயல்களையும் மிகச் சிறப்பாக நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்புணர்ச்சியும், விழிப்புணர்ச்சியும் மிகவும் தேவைப்படுகின்றது. இம்முறைகளை நடைமுறையில் பெண் நன்முறையில் கவனித்து வருவாளேயானால் இறைவன் என்றும் அவன் பொருட்டும் அவனுடைய சுற்றத்தினர் பொருட்டும் இரங்குவான்.

தொகுப்பு : மும்தாஜ்

# "ஸ்..ஸ்..பாரும்மா, ரொம்ப அரிக்குது..எரியிதும்மா."

உபயோகியுங்கள்
**நைஸில்.**
உடனடி நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு பவுடர்.



2 தினுசு
டப்பாக்களில்
கிடைக்கிறது
'நீலம்' மற்றும்
'சந்தனம்'.




**வாங்குவீர்
நைஸில்
விரட்டுவீர்
வியர்க்குருவை.**



மருந்துப் பொருட்கள்
அடங்கிய—நைஸில்:

1. அதிக வியர்வையைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

CASGL N-4-182 TAM

## 17

**பா**ர்வதியைக் கண்டதும் அவள் பாய்ந்து ஓடிப்போய்க் கட்டிக் கொண்டாள். ''அம்மா அம்மா! வீட்டுக்குப் போவோம். இனிமே இங்க வரவேண்டாம்'' என்று அவளுடன் அழுந்த ஒட்டிக்கொண்டாள். பார்வதிஅப்பாவையும், காமாட்சியையும் பரிதாபமாகப் பார்த்து, ''எதுக்காகக் குழந்தையை ஏங்க அடிக்கிறீங்க? பாத்திங்களா? என்னை விட்டுட்டு இருக்குமா இது? ஒரு மினிட்டுக்கூட இருக்காதுங்களே. எங்கப் போயிருங்க குழந்தை. எவ்வளவு வாடிப் போயிடுச்சு. உன்னை ஒருத்தரும் ஒண்ணும் செய்ய மாட்டாங்க செல்லம்'' என்று பலவிதமாக அவளைக் கொஞ்சினான். அதைக் குழந்தைகள் மூவரும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க சின்னவன், ''பாப்பா எங்க வீட்டுது. நீ வீட்டுக்குப் போ'' என்று அதட்டினான். காமாட்சி பார்வதியின் அருகில் வந்து ''இத பாருங்கம்மா. நீங்க இந்த வேளையிலே அழையாத விருந்தாளியா எங்க வீட்டுக்கு வந்து ஏற்கனவே சிக்கலா இருக்கிற விஷயத்தை இன்னும் சிக்கலாப் பண்றீங்க. உங்களை மூஞ்சில அடிச்ச மாதிரி வீட்டை விட்டு வெளில போன்னு ஒரு வார்த்தை சொல்றதுக்கு எங்களுக்கு 'எத்தனை நாழியாகும்?'' என்றாள்.

பார்வதி எந்த அவமானத்தையும் தாங்கிக் கொள்ளும் நிலையில் இருந்தாள். அவன் கண்கள் கெஞ்சின. ''இதப் பாருங்கம்மா. என்னை என்ன வேணா சொல்லுங்க. உங்களுக்கு நான் கொஞ்சம் அடாவடியாப் பேசினதாலே கோபமாகக் கூட இருக்கலாம். அதுக்காகக் குழந்தையை எங்கிட்ட இருந்து பிரிக்காதீங்க. ரொம்ப எங்கிட்ட ஒட்டிக்கிச்சு. இதை விட்டு என்னாலயும் என்னை விட்டாலயும் இருக்கவே முடியாது. செத்துப் போயிருவேன்ம்மா! தயவு பண்ணி குழந்தையை எங்கிட்டக் கொடுத்திருங்க. உங்களுக்கு என்ன பணம் வேணா தரேன்.''

''அடச்சே! உங்க பணக்காரப் புத்தி இன்னும் போகலையே. உங்க பணத்துக்கு ஆசைப்பட்டா இவ்வளவு தூரம் கோர்ட்டிலே மல்லாடி செயிச்சோம்? குழந்தை இந்தக் குடும்பத்துது. இந்தக் குடும்பத்திலேதான் வளரணும். அது என்ன கத்துக் கத்தினாலும் சரி, கொஞ்ச நாளில எல்லாம் சரியாப் போயிடும். ஆனா இந்த வீட்டை விட்டுக் குழந்தை பேரக் கூடாது. உங்களுக்குக் குழந்தை மேலே அத்தனை அக்கறை இருந்தா எதிர்த்தாப்பலேயே வீடு பார்த்துண்டு வந்திருங்கோ. ஆனா இவ இங்க சொந்த அண்ணங்களோட வளர்ந்து பழகியாகணும். அதுக்கு மேல் பேச்சே இல்லை. சும்மா சும்மா வந்து கெஞ்சிண்டிருக்காதீங்கோ. உங்களுக்குத்தான் ஏராளமாய்ப் பணம் இருக்கு. எத்தனையோ இல்லங்கள் எல்லாம் இருக்கு. அங்க வளர்ப்பாரற்ற எத்தனையோ குழந்தைகள் இருக்கு. இதுக்கு பதிலா இன்னொண்ணை எடுத்து வளங்களேன்? இது



ஒண்டிதான் லோகத்திலே குழந்தையா? அதும் ரொம்பச் செல்லம் கொடுத்து வளர்த்திருக்கேன். உடம்பு பூரா பிடிவாதமா இருக்கு. ரொம்ப முரண்டு பண்றது. எல்லாத்தையும் சரிபண்ணணும்.''

''குடுக்க மாட்டீங்களா?'' என்று கடைசி முறையாகக் கெஞ்சினாள் பார்வதி.

''என்னம்மா அடிச்சு விரட்டணுமா? கொடுங்கோ குழந்தையை. நீங்க பண்றது நன்னாவே இல்லே. என்ன பார்த்துண்டு இருக்கேள். வாங்கி வச்சுக்கங்கன்னு! அது உங்க பொண்ணு! குட்டி, இடுப்பை விட்டு இறங்குடி. பாச்சை மாதிரி வேத்து ஜாதி மனுஷா இட்ட எல்லாம் ஒட்டிண்டு! இப்ப எறங்கப் போறியா இல்லையா? எம்மா குழந்தையைக் கீழே வையுங்கோ! மரியாதையாச் சொன்னா கேட்க மாட்டீங்க?''

பார்வதி அவளை இறக்கி வைக்க, அவள் புடவையைப் பிடித்து இழுத்து அழுது கொண்டே அமர்க்களம் செய்ய, காமாட்சி அவள் அருகில் வந்து புஜத்தைப் பிடித்துத் தரதரவென்று அலற அலற இழுத்துச் சென்று வாசல் பக்கம் ரூமில் செலுத்தி தானும் உள்ளே சென்று கதவைச் சார்த்திவிட்டாள். உள்ளே அவள் அலறுவதும் காமாட்சி ''பேசாம இருக்கியா, அழாம இருக்கியா மூச்!'' என்று தரையில் ஒரு கம்பை வைத்துத் தட்டுவதும் அவள் அலறல் இன்னும் அதிகரிக்கக் காமாட்சியின் குரலும் வலுப்பெற, பட்டென்று சத்தம் கேட்க சப்த நாடியும் ஒடுங்கினாற்போல் அவள் அழுகை நின்றுபோக, காமாட்சி சன்னல் வழியாக ''என்ன அவங்களைப் போகச் சொல்லுங்கோ. நாம பார்த்துக்கலாம்'' என்றாள்.

சதாசிவம் காரிலிருந்து ''பார்வதி வா, போகலாம்.''

''அடிக்காதிங்கம்மா. அய்யோ அடிக்காதிங்கம்மா.''

''அடிக்கவும் இல்லே, கடிக்கவும் இல்லே. அதட்டிப் பயப்படுத்தி அடக்கி வைச்சிருக்கேன். நீங்க போங்கம்மான்னு. நான் பார்த்துப்பேனில்லே. போங்க. குழந்தை வேணும்னு நாங்க சொல்ற மாதிரி செய்யுங்க'' என்றாள்.

பார்வதி அழுதுகொண்டே காரில் ஏறிக் கொண்டாள்.

**பா**ர்வதி அதற்கப்புறம் எட்டு மாதம் உயிருடன் இருந்தாள். ஏற்கனவே பாரியான சரீரம். டயபட்டீஸ் வேறு. அதை ஒருவாறு கட்டுப்படுத்தி வைத்திருந்தவள், குழந்தையை இழந்த பின் சாப்பாட்டில் அக்கறையோ கட்டுப்பாடோ காட்டாமல், நிறையத் தின்றாள். எதிலும் ஈடுபாடு இல்லாமல் விசித்திரமாக நடந்து கொண்டாள். காமாட்சி சொன்ன மாதிரி ஒரு தடவை அனாதைக் குழந்தைகள் இல்லத்துக்குக் கூடப்போய் வந்தாள். அழகாக ஏக்கத்துடன் பிரேமைக்குத் தவித்துக் கொண்டு இருக்கும் பல குழந்தைகளைப் பார்த்தாள். ஆனால் அவளுக்கு என்னவோ எங்க பொண்ணுக்குஇனிமே ஈடா யாரும் வர முடியாதுங்க. பாத்தீங்களா, பாப்பார சனங்க கொஞ்சமாவது நன்னி விசுவாசம் காட்டுவாங்கன்னு பார்த்தேன். ஒரு நாக் கூட கொண்டு காட்டலியே! செல்லம் என்ன செய்யுதோ? எங்ஙன வாடிப் போவுதோ? ஏங்கிப் போவுதோ? நீங்கதான் போயி விசாரிச்சுக் கூட்டியாங்களேன். ஒரு நாளைக்குத் தரமாட்டாங்களா?''



''இனி அவன் வீட்டு வாசப்படி மிதிக்க எனக்கு விருப்பமில்லே. என்ன பேச்சுப் பேசிறாங்க.''

''பேசிறாப் பேசிட்டுப் போகட்டுங்க. நமக்குக் குழந்தை முக்கியமில்லேயா?''

''செத்துப்போச்சுன்னு வச்சுக்க!''

மயக்கமா வருகிறாற்போல இருக்கிறது என்று டாக்டரிடம் காட்டியதில் அவர் பிபி, யூரின் ஷுகர் எல்லாமே இருப்பதைக் கவனித்து எச்சரிக்கையாகி உடனே ஆஸ்பத்திரியில் அட்மிட் பண்ண வேண்டும் என்று சொன்னார். ஆஸ்பத்திரிக்குப் போகாமல் ஒரு நர்ஸிங் ஹோமில் கொஞ்ச நாள் இருந்துவிட்டுச் சரிப்பட்டு வராமல் வீட்டுக்குத் திரும்பி வந்து பராமரிப்பும் கவனிப்பும் போதாமல் உணவில் கண்டிப்பு இல்லாமல் தன் வியாதியின் பரிபூரண அபாயம் தெரியாமல் ஒரு நாள் திடீரென்று தலை சுற்றல் அதிகமாகி கண் மூடிப் படுத்தவள் நினைவு திரும்பி எழுந்திருக்கவில்லை. கோமா என்றார்கள்.

மூன்று மாசம் அந்த நிலையில் படுத்திருந்தாள். முகத்தில் புன்னகையோ வேதனையோ ஏதும் இன்றி சுவாசம் இயந்திரமாகத்தான் படுத்திருந்தாள். அந்த மனத்துக்குள் என்ன என்ன எண்ணங்களோ? எத்தனை முறை அவள் தான் வளர்த்த பெண்ணைச் சந்தித்திருப்பாள்? என்னெல்லாம் பேசியிருப்பாள்? எங்கே கொண்டு போய் எண்ணத் தொடராக அவளைச் செலுத்தியிருக்கும்? எதையும் கணிக்க முடியாமல் அதே மாதிரி அச்சடித்தாற்போல கிடந்தாள். வெளியே வேலைக்காரியும் நர்ஸும் வந்து அவளை அலம்பித் துடைத்து தினசரி பொட்டிட்டார்கள். மூக்குக் குழாய் வழியாகக் காம்ப்ளான் கரைத்துக் கொடுத்தார்கள். ஸிலிண்டர் ஸிலிண்டராக ஆக்ஸிஜன் கொடுத்தார்கள். பிளாஸ்டிக் பைகளில் சிறுநீரைச் சேகரித்தார்கள். நினைவு திரும்பாமலேயே தன் பெண்ணை அப்புறம் பார்க்காமலேயே பார்வதி இறந்து போனாள்.

பார்வதி இறந்துபோன செய்தி இந்தக் குடும்பத்தில் யாருக்கும் தெரியவில்லை. யாரும் தகவல் சொல்லவும் இல்லை. இப்போது அவள் கொஞ்சம் ஒல்லியாக உயரமாக வளர்ந்திருந்தாள். காமாட்சி தலைப் பின்னலுக்கெல்லாம் நேரம் இல்லை என்று பசங்களைப் போல் கிராப் அடித்து விட்டாள். அவள் தன் புதிய விதியுடன் ஒருவாறு உடன்படிக்கை ஏற்படுத்திக் கொண்டு விட்டாள் என்றுதான் சொல்ல வேண்டும். அந்தக் கட்டாயப் பிரிவு அவள் உள் மனத்தை எவ்வாறு பாதித்திருக்க வேண்டும் என்பது பின்னால்தான் தெரியும். இப்போது அவள் தன் சகோதரர்களுடன் விளையாடுகிறாள். அதுவும் சின்னவனிடம் கொஞ்சம் அருகாமை அதிகம்தான். கொஞ்சம் கிட்டப் போய்க் கவனிக்கலாம்.

மது ரகு ரவி மூவரும் வீட்டை விட்டு கிரிக்கெட் சாதனங்களுடன் வெளியே வருகிறார்கள். மது இப்போது உயர்ந்திருக்கிறான். அவன்தான் தலைவன் என்பது சொல்லாமலே தெரிகிறது. ரகு அவனுடைய பரம பக்தன் என்பதும், ரவி அவ்வப்போது முறைத்துக் கொள்வான் என்பதும் தெரிகிறது. வீட்டு வாசலுக்கு வந்து பூமியை நனைத்து ஸ்டம்ப் நடுகிறார்கள். பக்கத்து வீட்டு வெங்கட் சுப்பையா எல்லாரும் வருகிறார்கள். இவள் ஓரத்தில் மண்ணை தோண்டிக் கொண்டு தனக்குள் நிறையப் பேசிக் கொள்ளுகிறாள். பள்ளிக்கூட டீச்சராகத்தான் நிறையப் பேசுகிறாள். கையில் குச்சி வைத்துக் கொண்டு தெருத் திண்ணை விளிம்புகளையெல்லாம் ''ஏன் ஹோம் ஒர்க் செய்து வரவில்லை?'' என்று தண்டிக்கிறாள். மது. ''ஏய் சின்னு! அவளுக்கு இந்த வீட்டில் செல்லப் பேர்— ''உள்ளே போய். அப்பா பச்சைப் பெட்டி இருக்கு பாரு. அதும் பின்னாலே கவர் பந்து இருக்கு எடுத்துண்டு வா'' என்று அதட்டுகிறான்.

''என்னைச் சேர்த்துக்கிறியா?''

'நீ எடுத்துண்டு வாயேன்.''

**சத்துக்களைப் பாதுகாக்கும் முறை**

- காய்கறிகளை வாங்கியவுடன் உபயோகிக்க வேண்டும்.
- காய்கறிகளை நறுக்கியதும் தண்ணீரில் ஊறவைக்கக் கூடாது. இதனால் வைட்டமின் சத்துக் குறைகிறது.
- காய்கறிகளை அரியும் முன்பே கழுவ வேண்டும்.
- காய்கறிகளைப் பெரிய துண்டுகளாக நறுக்குதல் நல்லது.
- காய்கறிகளை அதிகமான நீரில் வேகவைக்கக் கூடாது.
- காய்கறிகளை வேகவைக்கும்போது பாத்திரத்தை மூடிவைக்க வேண்டும்.
- காய்கறிகளைக் குறைந்த நேரம் வேக வைப்பதால் ஊட்டச் சத்துக்களைப் பாதுகாக்கலாம். நீரை முதலில் கொதிக்க வைத்துப் பிறகு கொதி நீரில் காய்கறிகளை வேக வைக்க வேண்டும்.
- சமைக்கும்போது சோடா மாவு சேர்ப்பதால் வைட்டமின் 'பி' அழிக்கப்படும்.
- காய்கறிகளைக் குளிர்ச்சியான ஈரப்பசையுள்ள இடத்தில் வைக்க வேண்டும்.
- ஒருமுறை சமைத்த காய்கறிகளை மறுபடியும் சூடாக்கக் கூடாது. இதனால் உயிர்ச் சத்துக்கள் அழிகின்றன.

கௌசல்யா சிவம்.

மிகக் குறைந்த விலையில்
துணிகளுக்கு வெண்மை ஊட்டிட..
உங்கள் ஆடைகள் அனைத்தும்
புத்தொளி பெற்றிட....

**விலையில் குறைந்த,**
**தரத்தில் உயர்ந்த**




# கோபுரம்

சலவை சோப்பு

லாப நோக்கின்றி மக்கள் நலனுக்காகத்
தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்
தயாரிக்கும் ஒரு அற்புத சலவை சோப்பு.



தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்
சென்னை-600 001.

காதி கிராப்டுகளிலும், கடைகளிலும் கிடைக்கிறது.

''சேத்துக்கறதா இருந்தா எடுத்துண்டு வரேன்.''

''சேத்துக்கறேும் சின்னு!'' என்றான் ரகு.

''அதெல்லாம் காப்டன் சொல்லாம முடியாது. பார்க்கலாம். போய் எடுத்துண்டு வாயேன்!''

சின்னு உள்ளே ஓடுகையில் வழி மறித்த காமாட்சியிடம், ''அம்மா! பாரும்மா என்னையும் சேத்துக்கச் சொல்லும்மா.''

''ஏண்டி கல்யாணி வரலையா பாண்டியாட?''

''ஊஹூம். தப்பாட்டம் ஆடிட்டு என்னைக் கிள்ளு. சேத்துக்கச் சொல்லும்மா''

''டேய் மது! குழந்தையையும் சேத்துக்கடா!''

''ப்ச்! அவ பொண்ணு. எப்படிச் சேத்துக்கறதாம்? அவ ஃப்ரெண்ட் கூடப் போய் ஆடட்டும்.''

பந்தை எடுத்துக் கொடுத்துவிட்டுத் தனியாகத் தனக்குள் பேசிக்கொண்டு கிளம்பி விடுகிறான்.

'அவ பொண்ணு. எப்படிச் சேத்துக்கறதாம்?'

பழையபடி அவளுக்கு இந்தக் கேள்விகள் உள்ளுக்குள் எழுந்தன. முழுக்க முழுக்க மூன்று பையன்களின் மத்தியில் ஒரே ஒரு பெண்ணாக வாழ்வதில் அவளுக்கு விசித்திரமான அனுபவங்கள் இருந்தன. எப்போதும் அம்மா உடன் இருக்க முடியவில்லை. இந்த ரவி இருக்கிறானே ரொம்பப் பொல்லாதவன். கேலி பண்ணுவான். சாக்லேட் முதலியவற்றில் அவளுக்கு அதிகம் பங்கு கிடைப்பதில்லை. ஆனால் அவ்வப்போது பொறாமை ஏற்படும். மேலும் நடு ஆசாமியாக இருப்பதால் அம்மா அப்பா இரண்டு பேரும் அவனைத்தான் மொத்துவார்கள். உள்ளூர இந்த அநியாயம் வெவ்வேறு விதங்களில் குறும்பாகவும் வெறுப்பாகவும் வெளிப்படும். ஒரு நாள் புறக்கடையில் அவள் பல் தேய்த்துக்கொண்டிருக்கும்போது ரவியும் அப்போதுதான் எழுந்து தூக்கக் கலக்கத்துடன் நேராகச் சாக்கடைக்கு வந்து நின்று கொண்டே சுவரின் மேல் சிறுநீர் போக்கினான் சுவரின் மேலும் கீழும் படம் வரைவது போல, அல்லது தோட்டத்துக்கு நீர் பாய்ச்சுவது போல செய்து காட்டி, ''சின்னு பாத்தியா, பாத்தியா?'' என்றுபெருமைப்பட்டுக் கொண்டான்.

அவள் அப்போதுதான் முதன் முறையாக அதைப் பார்க்கிறாள்: அது அவளை மிகவும் வசீகரித்தது. ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசங்களைப் பற்றிய அவள் அறிவு மேம்போக்காகத்தான் இருந்து வந்திருக்கிறது. 'பாய்ஸ் ஆர் டர்ட்டி! அவர்கள் மூக்கு வேறு விதமாக இருக்கும். அல்லது காதில் ஜிமிக்கி போட்டுக் கொள்ள மாட்டார்கள் என்று தான் பாகுபடுத்திக் கொண்டிருந்தாள். இப்போது ரவி அதைப் பார் என்று காட்டியதும் அவளுக்கு ஆர்வமும் குதூகலமும் அதே சமயம் அய்யய்ய தப்பு! என்கிற உணர்ச்சியும் உண்டாயிற்று. ஆனால் அது அவளுக்கு முற்றிலும் புதிதாக இருந்தது.

''ரவி, என்னடா அது?'' என்று கேட்டாள்.

''உனக்கு இல்லியோல்லியோ? உனக்கு இல்லியோல்லியோ?'' என்று ரவி அவள் ஸ்கர்ட்டை உயர்த்தினான். அவள் வாரி மடக்கிக்கொண்டு ''அய்யய்யோ! அம்மா கிட்டச் சொல்வேன்'' என்றாள்.

''தொட்டுப்பார்க்கிறயாதொட்டுப் பார்க்கறயா'' என்றான் ரவி.

அவளுக்குத் தொட்டுப் பார்க்க வேண்டும் போலத்தான் இருந்தது. அந்த அதில் தப்போ, பாவமோ என்று பெரியவர்கள் சொல்லிக் கொடுப்பதற்குள் அதன் சௌகரியம்தான் அவளை வசீகரித்தது. சே, நமக்கும்

குளிப்பதற்கு வெந்நீர் வைக்க வேண்டுமென்றால் வேறு பாத்திரங்களைப் பயன்படுத்துவதைவிட குக்கரையே பயன்படுத்தலாம். விரைவில் நீர் சூடாக குக்கர் உதவுகிறது. குக்கரில் நீரை ஊற்றி 'காஸ்கட்' போடாமல் மூடியை மூடிவிட்டால் மற்ற பாத்திரங்களில் நீர் சூடாவதை விட குக்கரில் நீர் விரைவில் சூடாவதைக் காண்பீர்கள்.

—கீதா பஞ்சு



இதுபோல் இல்லையே என்று ஒருவிதமாகக் குறையாகவும் இருந்தது.

''ரவி!'' என்று அம்மா கூப்பிட, அவன் அவளிடம் ''அப்புறம் பார்க்கலாம்'' என்று சொல்லிவிட்டுஉள்ளேஓடிவிட்டான். கொஞ்ச நேரம் அவளுக்குத் திகைப்பாக இருந்தது ஆனால் பெண்ணுக்கும் பையனுக்கும் வித்தியாசம் உண்டு என்பது தெளிவாகப் புரிந்து விட்டது. அது ஏன் என்பது பற்றித்தான் குழப்பம் இருந்தது. போன வருஷம் கவுனுக்குள் தலையணையை மறைத்து வைத்தும் பொம்மைக்குப் பால் கொடுத்தும் விளையாடின விளையாட்டுக்களிலிருந்து அவள் ஞானம் இப்போது முதிர்ச்சியடைந்து விட்டதாகச் சொல்ல முடியாது. இருந்தும் அப்போதைக்கு இப்போது சிருஷ்டி பிறப்பு இவைகளைப் பற்றிய அவள் குழந்தைக் கற்பனைகளில் சற்றே தெளிவு ஏற்படத் தொடங்கியது. இனி அவள் குழந்தை இல்லை.

(தொடரும்)

# மறப்பது அவர்கள் பண்பு

'வரவேண்டிய பணத்தை யாரும் தரலை. கொடுத்த செக்குகள் பாஸாகவும் இல்லை. ஆள் இருக்கும்போதே பணத்தைக் கொடுக்கக் கஷ்டப்படறப்ப போனப்புறமா கொடுக்கப் போறாங்க. 'அவர்' போன புதுசிலே எனக்கு ஒண்ணும் புரியலை. அப்புறம் நாங்க நிராதரவா இருக்கோம்கிறப்ப, இந்தப் புரொட்யூஸர்ஸ் பண்ணினது கோபமாகத் தான் வந்தது. என்னைப் பார்க்க வந்த நிருபர்கள் கிட்டேயும் கோபமாகத்தான் பேசினேன். ஆனா இப்ப எனக்கு எந்த வருத்தமும் இல்லை.

மறக்கறது அவங்க பண்பு. கலையுலகம் கிறது பெரிய சமுத்திரம் மாதிரி. பலபேர் வராங்க. பலவிதமாப் போறாங்க. எல்லாரையும் ஞாபகம் வச்சுக்கிட்டு இருக்க முடியுமா? ஆனாலும் கொஞ்சம் மனிதாபிமானத்தோடு நடந்துகொள்ளலாம். இப்படி நான் போன் பண்ணினால்கூட ஆளே இல்லை என்று சொல்ல வேண்டாம்...''



இவர் முத்துலட்சுமி சுருளிராஜன்.

ஆமாம். நேற்றைய நியூஸ் இன்றைய பழைய செய்தித் தாளோடு போய்விடுகிறது. ஆனாலும் அந்த நியூஸ்களுக்குப் பின்னால் எத்தனை மனங்களின் கண்ணீர் நிற்கிறது! நாளும் நாளும் முன்னேறிக் கொண்டிருக்கும் உலகம் இவற்றைத் திரும்பிப் பார்ப்பதில்லை. மனிதாபிமானம் மருந்துக்குக்கூட இருப்பதில்லை.

தினமும் பத்துக் காருக்குக் குறையாமல் வந்து கொண்டிருந்த இடம் இது. முத்து

## நட்சத்திர வாழ்க்கை:



குழந்தைகளுடன் எதிர் காலத்தை நோக்கி கொண்டிருக்கிறார். அவருடைய சொந்தக்காரர்கள் அவரைக் கைவிட்டுவிடவில்லை. உணவு, உடைக்கும் தன் குடும்பத்தை நிர்கதியாக விட்டுவிட்டுப் போய் விடவில்லை சுருளி.

ஆனாலும் அன்றைக்குச் சூழ்ந்து கொண்டிருந்த தொழில் கூட்டம் இன்றைக்கு எங்கே?

''நான்காசுபணம் கேட்கவில்லை இவர்களை.'அந்த நடிகர்' விருது பெற்றிருக்கிறார்னு கேள்விப் பட்டவுடனே 'ஓ! அவர் நம்ப அண்ணன் அல்லவா என்று போன் செய்தேன். உதவி கேட்கப் பேசுகிறேன் என்று நினைத்துக் கொண்டு அவர் இல்லை என்று சொல்லிவிட்டார் மனைவி. வாசலில் ஷூட்டிங் நடந்து கொண்டிருக்கிறது, ஐயாவைக் கூப்பிடுகிறேன் என்று முதலில் உளறிக் காட்டி விட்டார் புரொடக்ஷன் மானேஜர். அன்றைக்குத்தான் நான் இந்த உலகத்தின் உண்மையான நிலையைப் புரிந்து கொண்டேன்....''

அந்தப் புண்பட்ட உள்ளம் மேலும் மேலும் நொந்து கூறிய உதாரணங்கள் ஏராளம். சுருளி இருந்தவரை அவர்கள் வீட்டில் ஒரு போட்டோ கூட இல்லை. அவருடைய முழு சைஸ் போட்டோ வேண்டும் என்று எத்தனை போன் கால்கள் செய்தாராம்! இன்றும் கூட அந்த வீட்டில் அவருடைய முழு சைஸ் போட்டோ இல்லை. காரணம் — யாரும் கொடுக்கவில்லை.

இவையெல்லாவற்றையும் விட அவர் இறந்த பிறகு இறந்த காரணம் என்று எல்லோரும் போட்ட செய்தி கொடுமையிலும் கொடுமை என்று கண்ணீர் மல்கக் கூறுகிறார். பத்திரிகைகளில் அனைத்திலும் வந்த செய்தி 'சுருளி ஏராளமாக மது குடித்ததால் உடல் நிலை பாதிக்கப்பட்டு இறந்து போய்விட்டார்' என்பதுதான். ஆனால் திருமதி லட்சுமியோ இல்லை என்று அரற்றுகிறார்.

''என் கணவருக்கு ஒரு கெட்ட பெயர் வரக் கூடாது என்பதற்காக நான் பாடு பட்டது இவ்வளவு அவ்வளவு என்றில்லை. கால்ஷீட்டைக் கவனித்துக் கொண்டது முழுவதும் நான்தான். அவர் ஒரு நாள் கொடுத்த கால்ஷீட்படி வரவில்லை என்பதோ, குடித்து விட்டு கலாட்டா செய்தார் என்பதோ இல்லை. இவ்வளவு ஸ்ட்ரிக்ட்டாக கால்ஷீட்டை யாரும் வைத்துக் கொண்டதில்லை அம்மா என்று தான் எல்லோரும் என்னைப் புகழ்ந்தார்கள்.

லட்சுமி வரும் புரொட்யூசர்களுக்குத் தேதி கொடுப்பதும் மற்ற விவரங்கள் பேசுவதுமாக இருப்பார்.

''அதிக கவலை காரணமாக அப்போதும் எனக்குச் சாப்பிடக் கூட முடியாது. இதோ இப்போது நேரமிருக்கிறது. ஆனால் சாப்பிடப் பிடிக்கவில்லை. தூங்க முடியவில்லை...'' என்று கண்ணீர் விடுகிறார்.

நல்ல நட்சத்திரமாக முன்னுக்கு வந்து கொண்டிருந்தார் சுருளி. ஏராளமான படங்கள். பெரியகுளத்திலிருந்து சினிமா ஆசையில் ஓடிவந்தவர். பல நாடக சபையில் கஷ்டப்பட்டுக் கடைசியில் சினிமாவில் சேர்ந்தார். ஏ. பி. நாகராஜன் இந்த நகைச்சுவை நடிகர் தனி அந்தஸ்துப் பெற வழி வகுத்தார். 'வா ராஜா வா' படத்திலிருந்து இவருக்கு நல்ல திருப்பு முனைதான். சிவாஜி, சாவித்திரி போன்றவர்கள் மட்டுமே போட்ட ஒன்பது வேடங்களைத் துணிந்து சுருளிக்கு 'கண் காட்சியில்' கொடுத்தார்.

சுருளியின் வசனங்களும், கிலேடைகளும் அவர் நடித்துக் கொண்டிருந்தபோது பல வாறாகத்தான் விமரிசிக்கப்பட்டது. ஆனாலும் ரசிகர்களின் கைதட்டலைக் கேட்டு அவர் வீட்டைத்தான் மொய்த்தார்கள் படாதிபதிகள். நாளுக்கு நாள் முன்னுக்கு வந்து கொண்டிருந்த இவர் திடீர் மறைவுக்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஆனால் விளைவை அனுபவிப்பது அவர் குடும்பம் மட்டுமே.

வெளியே இதுவரை காலெடுத்து வைத்தறியாத அந்தப் பெண் இன்று மூன்று



பொதுவாக எந்த நடிகர் வீட்டுக்குப் போன் செய்தாலும் அவர் ஷூட்டிங்கிற்குப் போயிருக்கிறார் என்றுதான் சொல்வார்கள். ஆனால் எங்கள் வீட்டுக்குப் போன் செய்தால் அவர் எந்த நிமிஷத்திலிருந்து எந்த நிமிஷம் வரை எங்கு இருப்பார் என்றுகூடச் சொல்லி விடுவேன். அவருடைய செகரட்டரியாக அவ்வளவு 'பக்கா'வாக இருந்தேன்.

ஆனால் என்ன பிரயோசனம்? கடைசியில் எல்லோருமாகச் சேர்ந்து எங்கள் மேல் பெரும் பாறாங்கல்லை அல்லவா தூக்கிப் போட்டு விட்டார்கள்? அவர் ஏராளமாகக் குடித்ததால் செத்துப் போய்விட்டார் என்றல்லவா தூற்றி விட்டார்கள்! அவர் குடிப்பார். இல்லை என்று சொல்லவில்லை. அது அளவுக்குத்தான். சினிமா உலகின் ஒதுக்க முடியாத பழக்கங்களில் இதுவும் ஒன்று. எனவே மற்றவர்களுக்காக அவர் மது அருந்தினார். மற்றபடி அவர் குடும்பத்தைத் தவிர வேறு ஒன்றையும் அறியாதவர். எங்கே போனாலும் எங்களுக்காக ஏதாவது வாங்கி வருவாரே தவிர அவருக்கு ஒன்று வாங்கிக் கொள்ளத் தெரியாதவர். அப்படிப்பட்டவர் மேல் இப்படி ஒரு பழியா?

கடைசிவரை அவருக்கு அருகில் இருந்த அந்த டாக்டரிடமே போய் அழுதேன். அவர் சொன்னார்: ''கருளி கணையம் வெடித்து இறந்திருக்கிறார். கணையம் வெடிப்பதற்கு எவ்வளவோ காரணங்கள் இருக்கின்றன. மஞ்சள் காமாலை வந்து உள்ளேயே தங்கி விடுதல், அல்சர், மது எனப் பல இருக்கலாம். இதுதான் காரணம் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. கணையம் வெடிப்பதையும் முன்னாலேயே சொல்ல முடியாது. இரண்டு மணி நேரங்களுக்கு முன்னால்தான் வீங்கும். அது வெடிப்பதற்குள் அறுவைச் சிகிச்சை செய்தால் பிழைக்க வைத்துவிடலாம். ஆனால் இவர் கேசில் முடியாமல் போய்விட்டதே'' என்றார்.

''இதையறியாமல்எல்லோரும்எழுதியதன் விளைவு எங்களுக்கு இன்ஷூரன்ஸ் பணமும் வராமல் இருப்பதுதான். இவர்கள் எங்களுக்கு உதவி செய்ய வேண்டாம். இப்படியொரு கஷ்டத்தைச் செய்யலாமா?'' என்று வருத்தத்துடன் கேட்கிறார் இவர்.

திருமதி முத்துலட்சுமியைப் போல இன்றைக்கு லட்சக் கணக்கில் நாட்டில் இருக்கிறார்கள். கவலையாகப் பேச விஷயமிருக்கு என்று பேசும் 'நா'க்கள்தான் நம்மிடம் இருக்கின்றன. உதவுவதற்கு இரண்டு கரங்கள் உள்ளன என்பதையே மறந்து விடுகிறார்கள்.

ஏன், முத்து முத்தாக இருக்கும் மூன்று பிள்ளைகளில் ஒருவனை யாராவது முன்வந்து நட்சத்திரமாக்கலாமே? எந்நன்றி மறந்தாலும் செய்ந்நன்றி மறக்கலாமா?

-மஞ்சுளா ரமேஷ்

# அலுவலகத்தில் நான் சந்தித்த பிரச்னையை எப்படிச் சமாளித்தேன்?

வேலைக்குச் செல்லும் பெண்களுக்கான போட்டியில் பரிசு பெற்ற கட்டுரைகள்-

**முதல் பரிசு:**

## கையைப் பிடித்தார் சூபர்வைசர்!

பிரச்னையா? பெண்களுக்கு அவர்களுடைய பெண்மையே ஒரு பிரச்னைதான்.

நான்வேலைக்குச் சேர்ந்த போது என் அலுவலகத்தில் எல்லோரும் ஆண் பொறியாளர்கள். நான் ஒரே ஒருத்தி பெண். பலர், தனக்கு உதவி செய்ய நான் வேண்டும் என எங்கள் அதிகாரியிடம் கேட்டார்கள். அவரோ ஒவ்வொருவருக்கும் வேலைப் பளு அதிகமாக இருக்கும்போது நான் உதவ வேண்டும் என்று உத்தரவிட்டார்.

ஒரு நாள் சூப்பர்வைசர் ஒருவருக்கு நான் உதவி செய்யுமாறு பணிக்கப்பட்டேன். அவர் வேலை மிகவும் அதிகமாக இருப்பதால் மறுநாள் ஒன்பதரை மணிக்கே அலுவலகம் வரச் சொன்னார். வேலையிலிருந்த ஆர்வத்தில் சீக்கிரமே வரச் சம்மதித்து ஒன்பதரைக்கே அலுவலகம் போய் விட்டேன். இரண்டொரு மதிப்பீடுகள், (Estimates) முதலியவைகளைக் கொடுத்துப் போடச் சொல்லி விட்டு அவர் போய்விட்டார்.

நான் மிகவும் சுவாரசியமாக, என்னை மறந்து எஸ்டிமேட்டில் ஈடுபட்டு விட்டேன். மணி என்ன ஆயிற்றென்று கூடத் தெரியாமல் வேலையில் லயித்திருந்தேன். சற்று நேரம் கழித்து என் காலருகே குறுகுறுவென்று தோன்றியது. குனிந்து பார்த்தால் ஒன்றுமில்லை. இன்னும் சில நிமிடங்கள் கழித்து என் பின்புறம் யாரோ நிற்பது போல உஷ்ணமான மூச்சுக் காற்று என் கழுத்தருகே பட்டது. நான் சட்டென்று திரும்பினால் சூபர்வைசர் நிற்கிறார்.

இதேதடா வம்பு, அலுவலகத்துக்கு இன்னும் யாரும் வரவில்லை. மணி பத்துதான் ஆகிறது. இருக்கிற வாட்ச்மேன் ஒருவனையும் காப்பி வாங்கிவர அனுப்பி விட்டார் அவர். தனியாக மாட்டிக் கொண்டு விட்டோமே என்ற பயமும் கவலையும் சூழ்ந்தன.

சற்றும் நான் எதிர்பாராத விதமாக என் கைகளைப் பிடித்தார் சூபர்வைசர்.

''பயப்படாதே. இங்கு யாரும் வர மாட்டார்கள்.'' என்ற அவரது கண்களில் வெறியும், முகத்தில் வழிந்த அசட்டுக் களையும் என் நிலையை எனக்கு உணர்த்தின. நான் தவித்தபோது தெய்வாதீனமாக நான் கண்டது சீஃபின் மேஜையடியில் ஒரு கரப்பான் பூச்சி. சட்டென்று எனக்கு ஒரு யுக்தி தோன்றியது.

திடீரென்று, ''சார்... சார்... தேள்... நகருங்கள்!'' என்று கூச்சலிட்டேன். என் கையை விட்டு விட்டுப் பயந்துபோய் சட்டென்று விலகினார் சூபர்வைசர்.

என் கூச்சலில் திக்பிரமை யடைந்து பயந்துபோய் நின்ற அவருக்குக் கரப்பான் பூச்சிக்கும் தேளுக்கும் வித்தியாசம் தெரியவில்லையோ, அல்லது என் எச்சரிக்கையைப் புரிந்து கொண்டு விட்டாரோ தெரியவில்லை. பேசாமல் தன் இடத்துக்கு வந்து உட்கார்ந்து வேலையைக்கவனிக்க ஆரம்பித்தார்.

மதியம் உணவு இடைவேளையின்போது மிகவும் சுவாரஸ்யமாக இதர பொறியாளர்களிடம் தேளின் மகாத்மியத்தை அளந்து கொண்டிருந்தேன். ''ஒரு பெரிய கருந்தேள். நல்லவேளை நான் பார்த்தேனோ, சூபர்வைசர் பிழைத்தாரோ! இல்லாவிட்டால் அந்தக் கருந்தேள் சூபர்வைசரை ஒரு போடு போட்டிருந்தால்...'' என்று நான் கூறிக் கொண்டிருந்தபோதே ஒருவர் குறுக்கிட்டார்.

''நீங்கள் காலையில் பத்து மணிக்கே வந்து விட்டீர்களா?''

''ஊஹூம். ஒன்பதரைக்கே வந்துவிட்டேன். சூபர்வைசர் தான்வரச் சொன்னார்.'' அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். இன்னொருவர் கேட்டார்: ''சூபர்வைசரும் ஒன்பதரைக்கே வந்துவிட்டாரா?''

''அதுதானே சொல்ல வருகிறேன். நான் ஃபைலை எடுத்துக் கொண்டு....'' என்று சொல்லு முன் சூபர்வைசர் என்னைக் கூப்பிட்டார்.

''என்ன பேச்சு அங்கே?''

''இல்லை சார்... வந்து.... கார்த்தாலே தேன் வந்தது அல்லவா? அதைப் பற்றித் தான் சொல்லிக் காண்டிருந்தேன்.'' என்றேன் குறும்புடன். இப்போது சூபர்வைசருக்குப் புரிந்திருக்க வேண்டும். ''ஐயாம் ஸாரி மிஸ் விமலா. இனிமேல் இதைப் பற்றி யாரிடமும் பேசிக் கொண்டிருக்காதீர்கள். நாம் இருவரும் இத்துடன் இதை மறந்து விடுவோம்'' என்றார் கெஞ்சலுடன்.

அதன் பின் சுமார் இரண்டரை வருஷம் அந்த அலுவலகத்தில் பணியாற்றினேன். அவரால் எனக்கு எந்தத் தொல்லையும் ஏற்படவில்லை. வயிற்றுப் பாட்டுக்கும், சூழ்நிலை காரணமாகவும் படித்த படிப்பு வீண் போகாமல் வேலைக்குப் போகும் பெண்கள் பலருக்கும் இது போன்ற பிரச்னைகள் பல வெவ்வேறு சந்தர்ப்பங்களில் இன்றும் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. நம்மைக் காத்துக்கொள்ளும் உறுதியும் திறனும், சமயோசிதமும் இருந்தால்தான் பாரதி கண்ட புதுமைப் பெண்ணாக விளங்க முடியும்.

**விமலா, சென்னை-17.**



இரண்டாம் பரிசு: கைப்பை

கடந்த மூன்று மாதங்களாக,
முதல் பரிசுப் புடவைகளை
வழங்கியவர்கள் :



**ராகமாலிகா,**
**சுகன் ஆர்கேட்,**
**(பனகல் பார்க் எதிரில்)**
**பிரகாசம் தெரு,**
**தியாகராய நகர், சென்னை-17.**

**இரண்டாம் பரிசு**

**கஷ்டம் என்று வரும்போது....**

எனக்கு 1972ம் ஆண்டு தமிழகத் தேர்வு ஆணைக் குழுவின் மூலம், மாவட்டக் கலெக்டர் அலுவலகத்தில் எழுத்தர் பதவி கிட்டியது.

ஏற்கனவே அந்தப் பிரிவில் ஐந்து பெண்கள் பணியாற்றிக் கொண்டிருந்தனர். ஆறாவதாக உள்ளே நுழைந்த எனக்கு உற்சாகமான வரவேற்பு. ஒருசில தினங்களுக்குள்ளேயே அனைவரும் என்னுடன் நெருங்கிப் பழகி, மனத்தைக் கவர்ந்தனர். ஒருவர் மட்டும் சுமார் 30 வயதைத் தாண்டியவர். யாருடனும் கலகலப்பாகப் பேசாமல் தான் உண்டு தன் வேலை உண்டு என்று இருப்பார்.

வேலையில் சேர்ந்து இரண்டு ஆண்டுகள் ஆவதற்கு முன்பாகவே என் பெற்றோர் எனக்குத் திருமண ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தனர். இயன்றவரை நல்ல தரமாகப் பார்த்து முடிப்பதில் அவர்களது முழுமையான பிரயாசை இருந்தது. இந்நிலையில் 1976ம் ஆண்டின் முற் பகுதியில் எனக்கு மகத்தானதொரு சோதனை ஏற்பட்டது.

மாநில அரசின் உணவுப் பொருள் கட்டுப்பாட்டுக் கொள்கை தளர்த்தப்பட்டதன் காரணமாக தமிழக — கேரள எல்லையோரம் நிறுவப்பட்டிருந்த அனைத்து 'செக் போஸ்ட்'களும் நீக்கப்பட்டன. இதன் காரணமாகப் பல சீனியர் அலுவலர்கள் படிப்படியாகப் பதவி இறக்கம் செய்யப்பட்டனர். முற்றிலும் ஜூனியர்கள் பதவிநீக்கம் செய்யப்பட்டனர். எதிர்பாராத இத்தாக்குதல் இம்மாவட்டத்தில் சில நூறு பணியாளர்களை நிலைகுலையச் செய்தது. அநேகமாக ஒன்றிரண்டு வாரங்களுக்குள் என் பதவியும் பறிபோகலாம் என்று என் மேலதிகாரிகள் எனக்கு ஆருடம் கணித்தனர்.

என் சக ஊழியர்களில் யாரேனும் ஒருவர், ஒரு இரண்டு மாத காலத்துக்கு லீவு போட்டால் அந்த இடத்தில் என்னைக் கணக்கிட்டு பிரச்சினையைத் தற்காலிகமாகச் சமாளிக்கலாம் என்றும், இந்தக் கால அவகாசத்தில் வருவாய்த்துறைஅமைச்சகத்திடம் தொடர்பு கொண்டு, குறிப்பிட்ட சில நிவாரணப் பணிக்கென சில கூடுதல் பதவிகளை அனுமதி பெற்றுத் தக்க வைத்துக் கொள்ளலாம் என்றும் மேலிடத்தில் ஆறுதல் கூறப்பட்டது. என்னிடமிருந்த குதூகலம் எல்லாம் எங்கோ ஓடி மறைய ஒவ்வொரு நாளும் சோகம் கப்பிய முகத்துடன் அலுவலகம் சென்று வரலானேன்.

என்னைத் தவிர என் பிரிவில் பணிபுரிபவர் அனைவரும் பல வருடங்கள் சீனியர் என்பதோடு மணமாகிக்குடும்பம் நடத்துபவர்கள். என் நிலையை எடுத்துச் சொல்லி, ஏனைய நால்வரிடமும் எனக்காக யாராவது ஒருவர் லீவு போட்டு, எதிர்வரும் இடுக்கண்ணிலிருந்து என்னைக் காத்து ரட்சிக்க வேண்டினேன். என்ன காரணத்தாலோ எங்களிடமிருந்து எப்போதும் விலகியே நின்ற அந்த நடுத்தர வயது மாதுவிடம் மட்டும் நான் மன்றாடவில்லை. இவ்வளவு கால நெருக்கமான பழக்கத்தில் ஒன்றாக இருந்து சிரித்து மகிழ்ந்து, சிற்றுண்டி அருந்தி, சினிமாப் பார்த்து, ஷாப்பிங் சென்று, உடன் உலாவி வந்த என் சக தோழிகள் என்னைக் கைவிடமாட்டார்கள் என்ற உறுதியான நம்பிக்கை எனக்கு இருந்தது.

ஆள் குறைப்பு (Retrenchment)காலக்கெடு வாரங்கள் நாட்களாகி, நாட்கள் சில மணிக்கூறுகளாகி என்னை நெருங்கி வந்த வேளையில் என் தோழிகளின் அரவணைப்பை எதிர்பார்த்து, மனத்துள் ஆண்டவரைத் தியானித்தவாறு அலுவலகம் சென்றேன். ஒரு தோழி என்னிடம் நெருங்கி வந்து, தனக்கு இப்போது 'நான்கு மாதம்' என்றும் ஒரு வேளை அனுமதிக்கப்பட்ட எம். எல்.க்கு (Meternity Leave) மேல் அதிகபட்ச லீவு தேவைப்பட்டால் மிகவும் சிரமப்பட நேரிடும் என்றும் கூறி, தன் இயலாமையை வெளிப்படுத்தியதோடு இரகசியமாக இன்னொருத்தி பெயரைக் கூறி, அவளை வற்புறுத்துமாறு சொல்லிச் சென்றாள்.

மற்றும் ஒருத்தி மதிய உணவு இடைவேளையில் என்னைத் தனியே அழைத்து, நான் தன் கணவரோடு வருகின்ற கிறிஸ்துமஸ் திருநாளை ஒட்டி (அதற்கு 9 மாதங்கள் இருந்தன.) மலேசியா, சிங்கப்பூர் செல்ல விருப்பதாகவும், அச்சமயத்தில் லீவு இருப்பில் இல்லாமற் போய்விடக் கூடாது' என்று தன் கணவர் கூறுவதாகவும் மழுப்பிவிட்டுச் சென்றுவிட்டாள். மற்ற இருவரும் அன்று அலுவலகத்துக்கே வரவில்லை. எப்போதும் போல் எங்களுடன் இணையாது தனித்து நிற்கும் அந்த மத்திய வயது மாது மட்டும் அடிக்கடி பி. ஏ.வின் அறைக்குள் செல்வதும் ஏதோ பேசுவதும், வெளி வருவதுமாகப் பரபரப்புடன் காணப்பட்டாள். அவர்தான் நிர்வாகத்தில் கான்பிடன்ஷியல் பிரிவு எழுத்தர். அவர் மீது இனம் புரியாத எரிச்சல் என் உள்ளத்தில் மண்டியது!. கொண்டு சென்ற மதிய உணவைச் சாப்பிடவே மனம் இன்றி டேபிளில் தலை சாய்த்து அழுது கொண்டிருந்தேன்.

என் தலையை ஆதரவாக ஒரு கரம் தடவிக் கொடுத்தது. அழுது சிவந்த கண்களுடன் ஏறிட்டுப் பார்த்தேன்.... நேற்று வரை அலுவலகத்தில் யாரிடமிருந்து தனித்து நின்றேனோ, யாரை எங்களிடமிருந்து தனிமைப்படுத்திப் பார்த்து, ஜாடை மாடையாக 'யந்திரம்' என்றும், 'ஜடம்' என்றும் 'சரியான பத்தாம் பசலி' என்றும் சொல்லிச் சொல்லிச் சிரித்து மகிழ்ந்தேனோ, அந்தமாது!

''ஷைலா!... நீ கவலைப்படாதே! உனக்காக நான் இரண்டு மாதம் லீவு போடுகிறேன். அவசியப்பட்டால் மேலும் கூட மருத்துவ விடுப்பில் கால அவகாசத்தை நீட்டித் தருகிறேன். பி.ஏ. விடம் எல்லா விவரங்களையும் கூறிவிட்டேன். நாளைமுதல் என் இருக்கையில் நீ அமர்ந்து பணியாற்றலாம்'' என்று அன்பொழுகக் கூறினார். பக்தையின் துயர் தீர்த்த பாசத்துடன் அணைத்துக்கொள்ளும் அன்னை மரியாளை அவர் வடிவத்தில் பார்த்தேன். நீண்ட அவர் கரங்களைப் பற்றி என் கண்களில் ஒற்றிக் கொண்டேன்.

-ஷைலாராணி, நாகர்கோயில்

**பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பட்டவை**

**தலையணை உறை தாண்டவம்**

**நா**ன் ஒரு செகண்டரி கிரேட் ஆசிரியை. கான்வெண்டில் படித்துப் பட்டதாரியாக

# இவ்வளவு ஆசையாக அவள் பாயசம் சாப்பிடுவதை நான் பார்த்ததே இல்லை...

இதுவரை கண்டதில்லை
இது போன்ற சேமியா :

- தரம் மிகுந்த மைதா மாவினால் தயாரிக்கப்பட்டது.
- சமைக்கும்போது பசைபோல ஒட்டிக்கொள்வதில்லை.
- நவீன இத்தாலிய எந்திரங்களினால் சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுவது.

1 சுவையான பாயசம் தயாரிக்க மிகவும் ஏற்றது.




பிஸ்கட்
தயாரிப்பாளர்கள்
அளிக்கும்
சிறந்த சேமியா

HTM-AFL-2856

வேண்டும் என்று கனவு கண்டு கொண்டிருந்த நான் என் தந்தையின் திடீர் மறைவினால் ஆசிரியை பயிற்சி பெற்று ஆசிரியையாக வேண்டி நேர்ந்தது.

என்னைப் போட்ட இடமோ படு நாட்டுப்புறமான கொட்லாம்பாக்கம் பள்ளி. வித்யாலயாவின் ஆறாம் வகுப்பு ஆசிரியராக. எல்லாப் பாடங்களையும் நானே எடுத்து எப்படியோ சமாளித்தேன். இந்நிலையில் பள்ளியின் ஆண்டுவிழா என்றார்கள். கும்மி, கோலாட்டம், நாடகம் என்று ஒவ்வொரு ஆசிரியையும் ஒவ்வொரு இட்டம் தயார் செய்ய வேண்டும். கான்வெண்ட் மாணவியான எனக்கு இதில் எதுவும் தெரியாது.

சக ஆசிரியைகளோ பழம் பெருச்சாளிகள். ஒருவித ஒத்துழைப்பும் தராதவர்கள். மூக்கும் முழியுமான எல்லாப் பெண்களையும் மளமளவென்று தேர்ந்தெடுத்துக்கொண்டு ஒத்திகையையும் தொடங்கி-விட்டார்கள்.

எனக்கு மிஞ்சியதோ ஒரு குள்ளம், ஒரு எடுப்புப் பல், மாறு கண், ஒரு ஒல்லிக்குச்சி இப்படியான சில மாணவிகளே. இவர்களை வைத்துக்கொண்டுநான்என்ன செய்வது?

கடைசியில் ஒரு ஐடியா தோன்றியது. கான்வெண்டில் நாங்கள் தலையணை டேன்ஸ் என்று ஒன்று ஆடுவோம். அதாவது ஒரு தலைகாணி உறையில் கண்களுக்கு, மூக்குக்கு மட்டும் ஓட்டை விட்டு முகம் தெரியாமல் மாட்டிக் கொள்வது. இரண்டு கைகளையும் அதன் உள்ளே விட்டுக் கொள்வது. பிறகு ஆங்கிலப் பாட்டுக்கேற்ப ஸ்டெப்ஸ் போட்டு ஆடுவது. பார்க்க மிகவும் தமாஷாக இருக்கும். எனக்குச் சுமாராய் மௌத் ஆர்கன் வாசிக்கத் தெரியும். என் வகுப்பில் ஒரு பெண்ணுக்கு இனிய குரல். அவளுக்கு அந்த ஆங்கிலப் பாட்டைச் சொல்லித் தந்தேன். மற்ற மாணவிகளுக்குத் தலைகாணி உறையைப் போட்டுக் கொண்டு ஸ்டெப்ஸ் போட என் வீட்டிலேயே பயிற்சி.

பிறகு என்ன? ஆண்டு விழா வந்தது. வழக்கமான கும்மி கோலாட்ட நாடகங்களுக்குப் பிறகு கடைசியில்தான் எங்கள் முறை வந்தது. அவர்களை மேடையிலே பார்த்ததும் ஒரே சிரிப்பு.என் மௌத்ஆர்கன் பின்னணியில் அந்தப் பெண் பாட, இவர்கள் ஆட, வந்தவர்கள் ஒரேயடியாய்ப்பிரமித்துப் விட்டார்கள். அவர்களுக்கு இது நூதன அனுபவம். தலைமை வகித்தவர் இதை ஒன்ஸ்மோர் கேட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். **கே. வனஜா, சென்னை-4**

**கண்ணன் காப்பாற்றினான்!**

தனியார்கல்வி நிறுவனமொன்றில்தமிழ்த்துறை ஆசிரியராகப் பணியாற்றி வருபவள் நான். ஒருநாள் தலைமை ஆசிரியர் என்னை அழைத்துக் குறிப்பிட்ட பாட நோட்ஸைக் கொடுத்து ''மாணவியருக்கு இதை மட்டும் நடத்தி எழுதச் சொல்லுங்கள் போதும்'' என்றார். நானும் பாடங்களை நடத்தி முடித்து விட்டேன். ஆண்டு இறுதியில் தேர்வு நடைபெற்றது.

மூன்றாம் பகுதியில் நான் நடத்திய பாடத்தில நடத்தாத பல பகுதிகளிலிருந்து வினாக்கள் வந்து,மாணவியர் பலர் அழ, பலர் முணு முணுக்க, அச் செய்தி நிறுவனத் தலைவருக்குத் தொலைபேசி மூலம் உடனே தெரிவிக்கப்பட்டது.

எப்படியோ மாணவியரைச் சமாதானப் படுத்திதேர்வினை எழுத வைத்துவிட்டு,என்னை அழைத்தனர் நிறுவனத்தார். ''என்ன செய்வீர்களோ தெரியாது. எப்படியேனும் மாணவியர் தேர்வு பெற வேண்டும். ஏனெனில் இது அவர்கள் தவறில்லை. தேர்வுத்தாள் யாரால் திருத்தப்படுகின்றது என்று பார்த்து அவர்களிடம் சென்று ''நடத்தாதது என் தவறு'' என்று கூறி நிலைமையை விளக்கி ஏதாவது செய்யுங்கள்'' என்று சொல்லிப் பலவாறு என்னைக் கடிந்தும் பேசிவிட்டனர்.

நான் நினைத்திருந்தால் என்னிடம் முதன் முதலில் நோட்ஸ் கொடுக்கப்பட்டபோது சொன்ன செய்திகளைச் சொல்லித் தலைமையாளரின் தவற்றையும் சுட்டிக் காட்டியிருக்கலாம். 'பாடத் திட்டத்தைக் கேட்காததும் என் தவறுதானே' என்று என்மீதே நொந்து கொண்டு என்ன செய்வது எனப் புரியாமல் திணறினேன். தேர்வுத் தாள் திருத்தப்படும் ஆசிரியரைச் சென்று காண்பதும் சட்டப்படி குற்றம்.

ஒன்றும் தோன்றாமல் நேராக வீட்டுக்கு வந்து பூஜை அறையில் இருக்கும் கண்ணன் படத்தின் அடியில் மாணவியர் எண்களையெல்லாம் எழுதிய தாளை வைத்தேன்.என் தவறு ஏதேனும் இருந்தால் மன்னித்து மாணவியர் தேற வேண்டும் என்று மனமுருகி வேண்டிக் கொண்டேன்.

வேறு எவ்வித முயற்சியும் மேற்கொள்ளாமல் கண்ணனிடமே பொறுப்பை ஒப்படைத்து, கீதை படிக்கத் தொடங்கினேன். ஒரு மாதம் கழித்து கல்லூரி திறந்த முதல் நாள் என் காதில் தேனாக விழுந்தது செய்தி.

''மிஸ், மூன்றாம் பகுதியில் எல்லாரும் எல்லாப் பகுதிகளிலும் பாஸ்!''

தெய்வமே! என் உடல் சிலிர்த்தது. ஒரு பெண் நன்கு படிக்காமல் தவறியிருந்தால் கூட என் தவறு என்றல்லவா நிறுவனத்தார் எனக்கு மெமோ அனுப்பியிருப்பார்கள்! மலை போல வந்ததை அந்த ''மாயக் கண்ணன்'' பனிபோல் விலக்கியதை நான் மறக்கவே மாட்டேன். **எஸ். மோகனா, மதுரை-20**

# குறுநாவல்

# கூடு முடியாத தீபங்கள்

லட்சுமி ராஜரத்னம்

## 1

"கெட்டி மேளம், கெட்டி மேளம்"

தந்தையின் மடியில் அமர்ந்திருந்த சாருவின் இதயம் படபடத்தது. உள்ளங்கையில் வியர்வை கசகசத்தது. கண்களில் பட்டாம் பூச்சி சிறகடித்தது. கால்கள் தரை பாவமறுத்தது போலத் துவண்டன. ஏன் இந்தத் தவிப்பு? புதிதாகஇருக்கிறது இந்த உணர்வுகள். எதிரே நின்ற கௌதம் தாலிச் சரட்டை எடுத்து அவள் கழுத்தில் கட்டினான்.

அவ்வளவுதான். இந்த இன்ப அதிர்ச்சியை அவளால் தாங்க முடியவில்லை. நினைவுகள் சரிந்து சரிந்து கரிய இருட்டுக்குள் புகுந்து

கொண்டு.... எங்கே உட்கார்ந்திருக்கிறோம் என்று புரியாமல் ஒரு தட்டாமாலைச் சுற்றுடன் உடல் இலேசாக, தலை சரிந்து வாய் கோணியது எல்லாம் அவளுக்கே தெரியவில்லை. அப்பா விஸ்வம் மகளைத் தாங்கிக் கொண்டார்.

''சாரு. அம்மாடி. சாரும்மா'' அம்மா அரற்றினாள்.

திருமண மேடையில் என்ன நடக்கிறது என்பதை அறியாத விருந்தினர்கள் நாற்காலியிலிருந்து எழுந்து எம்பி எம்பி அட்சதைகளையும், மலர்களையும் தூவினார்கள்.

''நகருங்கள், நகருங்கள்.''

பெண்ணின் மாமா சூழ்ந்திருந்தவர்களை நகர்த்தினார். மெல்லச் சாருவை அடுத்த அறையில் உள்ள கட்டிலில் கிடத்தினார்கள். வாய் கோணி நுரைத்து, சுவாசம் இழுத்து— அழகான முகம் அசிங்கமாகி — கௌதம் திகைத்து நின்றான்.

''கார்த்தாலேயிருந்து வெறும் வயிறு. அதான் கண்ணை இருட்டிண்டு வந்திருக்கு'' என்றாள் அத்தை.

**மாம்பழம் சாப்பிடுங்கள்**

ஒரு அவுன்ஸ் எடையுள்ள மாம்பழத்தில் 1383 மில்லிகிராம் அளவு 'வைட்டமின் ஏ' உயிர்ச் சத்து இருக்கிறது.

—எஸ். வனஜா
(''நோய்தீர்க்கும் பழங்கள்'' நூலிலிருந்து)

''தலை சுரம் போகலை. பூச்சுமை அழுத்தியிருக்கு. சாருக்கு அசாத்திய தலைமுடியம்மா'' என்றாள் மாமி.

இப்படித் தலைக்குத் தலை பேசினார்கள். பெற்றவர்கள் முகத்தில் ஈயாடவில்லை.

''ஆசீர்வாதம் அப்புறம் பண்ணிக்கலாம். ஏதாவது முக்கிய மந்திரங்களைச் சொல்லணும்னா நீங்களே முடிச்சிடுங்கோ. மாப்பிள்ளையை உட்கார வச்சுச் சொல்லணும்னு சொல்லுங்கோ'' என்றார் மாமா.

கௌதம் பற்களைக் கடித்துக் கொண்டான். நெஞ்சில் புரையோடிய நினைவுகளை மூட முடியவில்லை.

''நீங்களே சொல்லி முடிச்சிடுங்கோ'' என்று சொன்னவன் வெடுக்கென்று எழுந்து தன் அறைக்குள் நுழைந்து கொண்டான். கழுத்து ரோஜா மாலையைப் பிடுங்கி ஆணியில் மாட்டினான். பூக்களின் இதழ்கள் உதிர்ந்தன.

அவனுக்குப் பின்னால் அவன் அம்மா பார்வதம் வந்து நின்றாள். ''எதுக்கு இவ்வளவு கோபம்? பூஞ்சை உடம்பு போல இருக்கு. பட்டுன்னு மயக்கம் வந்துடுத்து. நீ எதுக்கு மூஞ்சியை இப்படி வச்சண்டு இருக்கே?'' என்றாள் நிதானமாக.

தாயாரை உறுத்துப் பார்த்தான். அந்தக் கண்கள் கொட்டிய விஷயத்தைப் பார்வதத்தால் புரிந்து கொள்ள முடியாதா, என்ன? அவன் அம்மாவின் அருகில் வந்தான்.

''வெறும் மயக்கம்னா கை கால் வெட்டி இழுக்குமா? வாய் கோணி நுரை தள்ளுமா? காக்கா வலிப்பு உள்ள பெண்ணை நம்ம தலையில கட்டிட்டாங்கன்னு உனக்கு இன்னுமா புரியலே?''

இதைக் கேட்டுப் பார்வதம் துடித்துப் போனாள்.

''நரம்புத் தளர்ச்சியா இருக்கும்டா. பெண் பாவம் பொல்லாது! நாக் கூசாம எதுவும் சொல்லக் கூடாது. உன் நெஞ்சோட வன்மத்தை இப்படித் தீர்த்துக் கொள்ளாதே கௌதம்'' என்றாள் பார்வதம் சன்னக் குரலில் அழுத்தமாக.

''நீ என்னைக் கொஞ்சம் தனியா விட்டுட்டுப்போயேன்'' என்று வெடுவெடுத்தான். பார்வதம் மெல்ல வெளியேறி சாரு படுத்திருந்த அறைக்குள் போனாள்.

கௌதம் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு ஜன்னல் அருகே அமர்ந்து கொண்டான். பக்கவாட்டு ஜன்னல். அதனால் கல்யாணக் கும்பல் அங்கே வரவில்லை. முன்புறத்தையே ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். வெளியோரம் நட்டிருந்த செடிகளின் பசுமையும், பூக்களின் அழகும் ரம்யத்தை உண்டாக்கவில்லை. மாறாக ரம்யா நினைவில் வந்து நின்றாள்.

ரம்யா!

அவன் மாமாவின் பெண்! வலது கை விரலைப் புரட்டிப் பார்த்தான். நீல எனாமலில் சிறிய எழுத்துக்களில் கிராஸாக 'ரம்யா' என்று பொறித்திருந்தது. அதை வாங்கி அவன் விரலில் போட்ட அன்று எப்படித் துள்ளிக் குதித்து ஆடினாள்!

''கண்ணைப் பொத்திக்கொள் கௌதம்!''

''ஊஹூம். மாட்டேன்.''

''போ; நானும் சொல்ல மாட்டேன்.''

''உன்பிடிவாதம் போகவே போகாது.'' என்று செல்லமாக அவள் தலையில் குட்டிய படி கண்களை மூடிக் கொள்வான். அவளா நம்புவாள்!

''இது என்ன?''

''ரம்யா!'' — மெல்லக் கண்களை மூடிய படி அவள் தோளைத் தழுவுவான்.

''சீ...விடு. இது எவ்வளவுன்னு கேட்டால்?''

''ஓ... நான் கண்ணை மூடிண்டு இருக்கேனா இல்லையான்னு டெஸ்ட் பண்றியா?''

வேண்டுமென்றே பொய்யாகச் சொல்லுவான்: ''ஐந்து.''

''சீ... நீ ரொம்ப மோசம். வேணும்னே சொல்றே கௌதம்.''

இப்படியெல்லாம் விளையாடி அவன் கரத்தில் அந்த மோதிரத்தை போட்டாள் ரம்யா.

''ஹாய், எப்படி வாங்கினே?''

''எப்படி வாங்கினேன்?'' பழிக்கக் காண்பித்தாள். ''திருடினேன்னு நினைச்சியா?''

''அப்படித்தான்.''

''அப்ப, நான் திருடியா?''

''என்ன சந்தேகம்?''

முறைத்தாள் ரம்யா.

''என் மனசை நீ திருடல்லேன்னு சொல்லு!''

அவளது முகத்தில் ரோஜா குடியேறும்.

''ரம்யா, கௌதமை நீ, வா, போன்னு சொல்லலாமா. உனக்குத் தாலி கட்டப்போறவன் இல்லையா.'' என்று அவள் அம்மா கண்டிப்பாள்.

''கௌதம், கல்யாணம் ஆனாக் கூட நான் உன்னை இப்படித்தான் கூப்பிடுவேன்.' என்ன சொல்றே.''

அவன் பதிலுக்குச் செல்லமாகக் கன்னத்தில் தட்டுவான். தங்களின் காதலுக்கு எந்தவிதமான இடையூறுகளும் இல்லை என்றுதான் அவர்கள் நினைத்தார்கள். ஆனால் எப்படிப்பட்ட நீங்காத இடையூறு வந்தது?

அவன் அயல்நாட்டுத் தொடர்புடைய வங்கி ஒன்றில் பணியாற்றி வந்தான். அங்கு கிடைத்த முதல் சம்பளத்தில்தான் அவனுக்கு மோதிரம் வாங்கிக் கொண்டு வந்து போட்டாள்.

''நான் எப்பவும் உன் கையிலே. எப்படி?'' என்று கொஞ்சினாள்.

ஒரு தடவை வங்கியில் உள்ள சிலருடன் காஷ்மீர், சிம்லா என்று போய்விட்டு வந்தான். அவனும் வருவதாகக் கூறினாள். ஆனால் அந்தச் சமயம் பார்த்தா அவனுடைய தங்கை அமெரிக்காவிலிருந்து வந்து வைக்க வேண்டும்? அதனால் அவன் சென்னையிலிருந்து கிளம்ப முடியவில்லை. ரயிலடிக்கு வந்து 'டாட்டா' காட்டினான்.

''ரமி, நாம திரும்ப ஹனிமூனுக்குப் போகலாம்'' என்று காதருகே முணு முணுத்தான்.

ரம்யா திரும்பி விட்டாள். அவன் அச்சமயம் ஹைதராபாத் போயிருந்தான். இரண்டு தினங்கள்... அவன் அவளைப் பார்க்கவேயில்லை. ரயிலடியில் டாட்டா காண்பித்தவன்தான். ஒரு நாள் மாலை வெளியே சென்ற ரம்யா திரும்பி வரவேயில்லை. அவன் ஹைதராபாத்திலிருந்து மறுநாள் காலையில் தான் திரும்பி வந்தான்.

வீட்டில் சோகம் கப்பியிருந்தது. ரம்யா எங்கே போயிருப்பாள்? தேடாத இடம் இல்லை. கேட்காத ஜோசியம் இல்லை. கௌதம் பைத்தியம் பிடித்தவன் போல் ஆனான். இரண்டு மாதங்கள் அலுவலகம் போகவில்லை. அவன் தங்கையும் ஒரு மாதம் போல அமெரிக்கப் பயணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டாள்.

ஆறு மாதங்கள்!

**யோசனை**

காலில் கண்ணாடி குத்தி விட்டதா? ஓமத்தை வெல்லத்துடன் அரைத்துக் கிளறிக் கட்டுங்கள். எவ்வளவு சிறிய துண்டாகிலும் வந்துவிடும். —மீரா

ரம்யா திரும்பவில்லை.

'ரமி, எங்கேம்மா போனே?' கௌதமின் குரல் ரம்யாவுக்குக் கேட்கவில்லையே? குடும்பத்தினரால் மறக்க முடியாத சோகமாயிற்று. போலீஸ் தேடல், டி. வி. அறிவிப்பு என்று எத்தனை பண்ணியும் பயனில்லை.

'ரமி, நீ எங்கே போனே?' தனிமையில் அன்றிலாக அழுது துடித்தான் கௌதம்.

மாதங்கள் ஓடின. எதுதான் நடக்காமல் இருக்கிறது? அம்மா வற்புறுத்தினாள். கௌதம் மசியவில்லை.

''எனக்கு எல்லாமே ரமியுடன் போய் விட்டது'' என்று கூறினான்.

மாமா வந்தார். ''கௌதம், நீ ஒரே பிள்ளை. உன் அம்மா கண்ணீர் விடுகிறாள். உன் குலம் விளங்கணும். ஒரு கல்யாணம் பண்ணிக்கொள். ரம்யா உயிருடன் இருக்காளோ இல்லையோ'' என்று மேல் துண்டை வாயில் அடைத்துக் கொண்டு கேவினார்.

கல்யாணமா? தனக்கா? அவனால் நினைத்தே பார்க்க முடியவில்லை. அம்மாவின் அழுகை மாமா ஓயாமல் நடந்த நடை. தங்கை லல்லியின் பக்கம் பக்கமான பல்லவி — தரகர் செல்லையா சாருவின் ஜாதகத்தைக் கொண்டு கொடுத்தார். பெண் பார்க்க முடியாதுஎன்று முரண்டு பிடித்தான். தன்னை வளர்த்தவர் என்று மாமாவிடம் உள்ள மதிப்பில் மறுக்க முடியவில்லை.

சாரு — கறுப்பா, சிவப்பா?

குட்டையா, நெட்டையா?

அவள் படிப்பு என்ன?

அவன் எதிலும் கலந்து கொள்ளாமல் தலையை ஆட்டினான்.

கல்யாணம் ஆனால் போதும் என்றுதான் முதலில் எண்ணினாள் பார்வதம். ஆனால் கல்யாணம் நிச்சயம் ஆனதும் கறவை மாட்டைக் கண்டு பிடித்த திருப்தி. பெரிய பெரிய லிஸ்டாக நீட்டினாள். சாருவின் அப்பாவும் முடிந்தவரை தயார் பண்ணினார். ஜானவாசத்தன்றுகூட ஏதாவது அதிசயம் நடந்து ரம்யா வந்து விடக் கூடாதா என்று ஏங்கினான் கௌதம்.

ஆனால் ரம்யா வரவில்லை. சாருதான் மயங்கி விழுந்தாள். 'ஏற்கனவே 'கர்பிணி; அதிலும் 'துர்பிணி' என்ற கதையாய் எரி மலையாக ஆனான் கௌதம்.

சாரு கட்டிலில் படுத்திருந்தாள். தலைப் பூச்சுமைகள் எடுக்கப்பட்டிருந்தன. கழுத்து மாலையைச் சிரமத்துடன் எடுத்திருந்தார்கள். சாருவின் அண்ணா ரமணி டாக்டரை அழைக்க ஓடினான். அதற்குள் தலைக்குத் தலை வைத்தியம் சொல்லியதுடன் நிற்காமல், செய்யவும் தலைப்பட்டார்கள். ஆனால் விசிறியைச் சுழலச் செய்து கூட்டத்தைக் கலைத்தார்கள். சாருவின் இழுப்பும் சற்று நின்றது.

டாக்டர் வந்தார். டாக்டரின் பின்னால் ரமணி பெட்டியுடன் வந்தான். பரிசோதனை ஊசி, மருந்துஎழுதிக்கொடுத்து விட்டு இந்தப் பக்கம் வந்தார்.

''டாக்டர், எப்படி இருக்கு?'' சாருவின் அப்பா விஸ்வம் பின்னால் வந்து கேட்டார்.

''ஒன்றுமில்லை. இப்படி அடிக்கடி வருமா?''

விஸ்வம் மெல்லச் சொன்னார். ''இல்லை. சின்ன வயசில் வரும். சமீபத்தில் வந்ததே இல்லை. எங்க போறாத காலம் இப்படி சம்பந்தி வீட்டார் எதிரே வந்து மானத்தை வாங்கியிருக்கு'' என்று தழுதழுத்தார்.

''கவலைப்பட ஒண்ணும் இல்லை. அதிக ஆனந்தம் இதைக் கொண்டு விட்டிருக்கலாம். இதெல்லாம் அதிக கவலை, அதிக மகிழ்ச்சியிலே வர்றதுதான்.''

ரமணி நீட்டிய பணத்தை வாங்கிக் கொண்டு கிளம்பிப் போனார்.

சற்று நேரத்தில் சாரு கண் விழித்துக் கொண்டாள். சுற்றிலும் அப்பா, அண்ணா, தங்கை, அம்மா என்று பார்வை சுற்றி வந்தது. கால்மாட்டில் மாமியார் பர்வதம் நிற்பதைக் கண்டதும் லஜ்ஜை பொங்கப் பொசுக்கென்று எழுந்து உட்கார முயன்றாள்.

''சும்மா படுத்துக்கோ. கண் விழிச்சுட்டே. இனிமே கவலை இல்லை. ரசம் சாதமா சாப்பிடு'' என்று கூறிவிட்டு நகர்ந்தாள்.

வேதனையுடன் கண்களை மூடிக் கொண்டாள். தான் மயங்கியதில் யார் யார் என்னென்ன நினைத்துக் கொண்டார்களோ? முதல் நாள் வரை சரியாகப் பணம் வராமல் ரமணி என்ன திண்டாட்டம் திண்டாடினான்! பணத்தை எங்கேயிருந்து புரட்டினான் என்பதெல்லாம் அவளுக்குத் தெரியாத விஷயம்.

''ஏம்பா, பணம் கிடைச்சுதா?''

விஸ்வம் காவிப் பற்கள் தெரியச் சிரித்தார்.

''அதெல்லாம் உனக்கு எதுக்கு? நீ பாட்டுக்கு இரு சாரு. வேறு நல்ல புடவையாக் கட்டிக்கக் கூடாதா? ரொம்ப சுமாரா இருக்கேம்மா'' என்று பேச்சை மாற்றினார்.

இதை யெல்லாம் நினைக்க நினைக்க, கண்ணீர் சரம் வழிந்தது. ''சீ... அசடு, என்ன



ஆயிடுத்துன்னு நீ இப்ப அழறே?'' என்று கண்ணீரைத் துடைத்தான் ரமணி.

''ஏண்டா, கௌதம், எழுந்து முகத்தைத் துடைத்துக்கொள். நல்லதா ஷர்ட் போட்டுக் கொள். இப்ப நலுங்கிற்கு அழைக்க வந்துடு வாளே?'' என்றாள்.

அம்மாவை உறுத்துப் பார்த்தான் கௌதம். ''இதப் பாரு, காக்கை வலிப்புப் பெண்ணைக் கட்டி வச்சிட்டு... எனக்கு நலுங்கு ஒரு கேடா? 'நலங்கிட வாராய்'னு பாடலேனு யார் இப்ப அழுதா? கார்த்தாலேயே என் ஆபீஸ் நண்பர்கள் எல்லாம் என்னைப் பரிதாபமா, ''ஏண்டா, பெண்ணுக்குவியாதின்னு முன்னலேயே தெரியாதா? மறைச்சு வெச்சுட்டாளா'ன்னு கேட்டாச்சு. இப்ப நலங்கு ஒண்ணுதான்குறைச்சல். என்னைப் பொறுத்தவரை கிளம்பவேண்டியது தான் பாக்கி'' என்றான் படபடவென்று.

''ஏண்டா, நீ தொட்டுத்தாலி கட்டிய பெண். ஏண்டா இப்படிப் பேசறே?'' என்று பதை பதைத்தாள் பார்வதம்.

''பின்னே இவளுக்கு எப்ப வலிப்பு வருது என்று பார்க்கப் பின்னாடியே போயிண்டு இருக்கட்டுமா?'' என்று சீறினான் கௌதம்.

''வரவேற்பு இருக்கு. ராத்திரிக்கு அறை தயார் பண்ணியிருக்கு.''

''நத்திங் டூயிங். வரவேற்பு ஒண்ணுக்குதான் சம்மாவந்து நிப்பேன். தொண தொணன்னு



பேசினே நானும் ரம்யா மாதிரி தொலைஞ்சு போயிடுவேன்'' ஓர் அதட்டல் போட்டான்.

பார்வதம் பெட்டிப் பாம்பானாள். கௌதம் வசதியாக நாற்காலியில் சாய்ந்து கொண்டான். சாரு நலுங்கிற்கு அழைக்கத் தயாராகக் கிளம்பினாள்.

## 2

எங்கேயோஒரு வீட்டில் வரட்டு வரட்டு என்று பெருக்கும் சப்தம் கேட்டது. சாருவுக்குத் தூக்கம் கலைந்து விட்டது. கண்ணை மூடிக்கொண்டு சற்று நேரம் கிடந்தாள். மார்கழி மாதம். பக்கத்தில் உள்ள பிள்ளையார் கோயிலில் பாடல் ஒலிக்கத் தொடங்கி விட்டது.

'கணபதியே வருவாய் — அருள்வாய்' என்று மல்லாரியின் அசைவாக கணீரென்று சீர்காழி பாடிய பாடல்.

எழுந்துபடுக்கையில் அமர்ந்துபார்த்தாள். மாமியார் பார்வதம் நன்றாகத் தலையோடு கால் போர்த்திக் கொண்டு உறங்கினாள். ஆஸ்துமா தேகம். பனி ஆகாது. படுக்கையைச் சுற்றி வைத்துவிட்டு, மாமியாரின் தூக்கம் கலையாமல் வெளியே வந்தாள். நடு முற்றத்தின் குளிர் ஊசி முனையாகக்குத்தியது.

வாசல் தெளித்துக்கோலம் போட்டுவிட்டு தான் குளிக்க வேண்டும். பார்வதத்துக்கு மடி ஆசாரமாகப் பண்ணியாக வேண்டும். பல்லைத் தேய்த்துக் கொண்டு கெய்சரைப் போட்டுவிட்டு வாசலைத் தெளித்துப் பெருக்கினாள். புள்ளி புள்ளியாக வைத்து இணைத்ததில் பெரிய கோலம் உருப்பெற்றது.

ஆனால் தன்னுடைய வாழ்க்கைக் கோலம்?

மணமாகி மூன்று மாதங்கள் ஓடிவிட்டன. கௌதம் இன்னும் அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவில்லை.

''காக்காய் வலிப்புப் பெண் எனக்கு வேண்டாம்'' என்றே பாடினான்.

''நல்ல டாக்டரிடம் கூட்டிச் சென்று செக்கப் பண்ணிக் கொள்ளலாம்'' என்றெல்லாம் கூறினாள் பார்வதம்.

எதுவும் எடுபடவில்லை. கல்யாண நிகழ்ச்சிகள் ஏனோ தானோவென்று நடந்தது. கட்டாயப்படுத்தி நலுங்கிற்கு அழைத்து வந்து உட்கார வைத்தார்கள். கௌதம் இயந்திர கதியில் நடந்து கொண்டான். வரவேற்பும் சரியாக இல்லை. வந்த தன் நண்பர்களிடம் பேசிச் சிரித்தான். அவளை எதிர்பார்க்காமல் சாப்பிடப் போனான்.

தன் அறைக்கு வந்தவன் அம்மாவைக் கூப்பிட்டான்.

''அம்மா, நான் ஏற்கனவே சம்மதம் இல்லாமல் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். இந்தப் பெண்ணுக்குக் காக்கா வலிப்பு. அதனாலே இன்னிக்கே ஃபஸ்ட் நைட் அது இதுன்னு கொண்டாட வேண்டாம். புரிஞ்சுதா?'' என்று அடிக் குரலில் உறுமினான்.

அறையின் அலங்காரத்துக்கான ஜோடனைகள் நடைபெறுவதைப் பார்வதம் பார்த்துக் கொண்டிருந்தாள். இதை எப்படித் தடுப்பது என்ன சொல்லித் தடுப்பது? மெல்ல விஸ்வத்தின் அருகில் வந்தாள்.

''உங்க மாப்பிள்ளை ஓர் ஐடியா சொல்றான். இன்னிக்கு ஒண்ணும் வேண்டாம். அவனுக்கு ரெஸ்ட் தேவை. அதனாலே இந்த வைபவத்தை வீட்டுக்குப் போய் வச்சுக்கலாம்னு சொல்றான். நீங்க என்ன சொல்றேள்?''

விஸ்வத்தின் முகம் இருண்டது. ''ம்... எல்லா ஏற்பாடுகளும் செய்தாச்சே!'' என்றார்.

பார்வதம் என் சொல்படிதான் என்பது போல பதில் பேசாமல் நின்றாள். விஸ்வம் எழுந்து போனார். அறையினுள் கசமுசாக்கள் கிளம்பி அடங்கின. பார்வதம் சொல்வதைச் சொல்லியாகி விட்டது என்று தன் பக்கத்திற்கு வந்தாள். அறைக்குள் கௌதம் படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தான். அவனால் இன்னும் ரம்யாவை மறக்க முடியவில்லை என்பதை அவள் அறியாதவளா?

திருமணம் முடிந்து ஒரு வாரத்துக்குப் பின் நல்ல நாள் பார்த்துக் கொண்டு சாருவின் பெற்றோர் வந்தார்கள். முரண்டு பிடித்த மகனைச் சரிக்கட்டி வைத்திருந்தாள் பார்வதம். ரம்யாவின் அண்ணன் முரளிதான் அவனை ஓரளவு சம்மதிக்க வைத்தான்.

''இதோ பார் கௌதம், அந்தப் பெண்ணைப் பற்றி நன்றாக விசாரித்தேன். அவ படிச்ச கல்லூரி பிரின்சிபாலிடம் கூடக் கேட்டேன். சாருவா, நல்ல ஜெனரல் நாலட்ஜ் உள்ள பொண்ணு; நல்ல கேரக்டர் ஆச்சே. இந்த மாதிரி ஃபிட்ஸ் சமாசாரம் எல்லாம் ஒரு நாள் கூட இங்கே படிக்கிற போது வந்ததேயில்லை'னு சொல்லிட்டா. உன்னைக் கைப்பிடிச்ச பெண்ணை வாழாம பண்ணாதே'' என்றான்.

முழு நெல்லிக்காய் கிடைக்கும் காலத்தில் வாங்கி சீவி, உப்புடன் உலர்த்திவைத்தால் 'நெல்லிப் பாக்கு' தயார். உணவுக்குப் பின் இதைச் சாப்பிட்டால் ஜீரண சக்தி அதிகரிக்கும். உடலுக்கும் நல்ல வலு. பாக்கு கேட்கும் குழந்தைகளுக்கும் தரலாம்.

திருமதி ராகவன்

கௌதமின் மனத்தில் அருவருப்பு ஏற்பட்டது. கோணல் மாணலாக வாய் இழுத்து நுரை தள்ளிய காட்சி. முகத்தைச் சுளித்தான். என்ன சொல்லி என்ன பயன்? கட்டிலும், மெத்தையும், பூவும், சந்தனமுமாக மாடி அறை நிர்மலோகப்பட்டது. சாருவின் வீட்டினர் காலையிலேயே வந்து விட்டார்கள். விருந்து தடபுடல் பட்டது.

சாருவுக்கு ஓரளவு கணவரின் போக்கு தெரிந்தே இருந்தது. கல்யாண சத்திரத்தில் அவன் அவளிடம் விடை பெறவில்லை. யாருக்கோ கல்யாணம் என்பது போலப் போய் விட்டான். தாலி கட்டிய பின்னர் ஒரு வார்த்தை, ஒரு கள்ள விழிப் பார்வை என்று பார்க்காதது மனத்தை உறுத்தியது! இது சாதாரணப் போக்கா, இல்லை தன்னைக் கண்டு ஓடும் விலகலா? புரியவில்லை.

எதுவானாலும் அவள் காட்டிக் கொள்ளவில்லை.

ஏழு மணி அளவில் முரளி சரிகை வேட்டி, வெள்ளை ஷர்ட் எடுத்து வைத்தான். அவற்றில் லேசாக இன்டிமேட்டைத் தெளித்தான். தலையை வாரிக் கொண்டிருந்த கௌதம் இந்த மணத்திரால் தலையைத் திருப்பினான்.

''இதெல்லாம் எதுக்கு?'' என்று முணு முணுத்தான்.

''நீ பேசாதே. உன் வேலையைப் பார்''

கௌதமின் கண்களில் நீர் துளிர்த்தது. அவன் இந்த முதலிரவை ரம்யாவுடன் கொண்டாட எப்படியெல்லாம் திட்டமிட்டிருந்தான்! 'ரம்யா என்னை விட்டு விட்டுப் போக எப்படி மனம் வந்தது. நீ இருக்க வேண்டிய இடத்தில் இன்னொருத்தியா?'

குறிப்பிட்ட வேளை. கௌதம் அறைக்குள் போய்க் காத்திருந்தான். முரளியால் தள்ளப்பட்டான் என்று சொல்வதுதான் சரி.

''இளமை போனால் வராது. ரம்யா என்ன ஆனாளோ நீ அவளை நினைச்சு இவளைப் புறக்கணிக்காதே. புத்திசாலியா இரு'' என்று அறிவுரை கூறினான்.

அறையின் புது மணம். அவனால் தாங்கிக் கொள்ள முடியாத மனச் சுமை. கட்டிலின் விளிம்பில் அமர்ந்து கொண்டிருந்தான். மெல்லிய கால் கொலுசின் ஒலி. கதவை தாழிடும் ஓசை. மெல்ல விழிகளை உயர்த்தினான். கதவை உட்பக்கம் தாளிட்டுவிட்டு சாரு வந்து கொண்டிருந்தாள்.

சிவந்த பாதங்கள். அவற்றின் மேல் புரண்ட சரிகை பார்டர். நீல வண்ணப் புடவை. பால் டம்ளரை ட்ரேயில் வைத்த சாரு அவன் காலில் விழுந்து வணங்கினாள். அவன் தொட்டுத் தூக்கவில்லை. ஓர் இளம் பெண்ணின் வணக்கத்துக்குரியவனாக இருக்கும் பெருமை அவனுக்கு இல்லை. இதென்ன நாடகம் என்ற எரிச்சல் மேலிட ''எழுந்திரு'' என்றான் கடுமையாக.

சாருவின் உள்ளத்தில் மிருதங்கம் 'தகிட தகிட' என்று வாசித்தது. அவளால் நிறுத்த முடியவில்லை. அன்று மாதிரி விழுந்துவிடக் கூடாது என்று சமாளித்துக் கொண்டாள். அம்மா கூறிய அறிவுரைகளை நினைத்துப் பார்த்தாள். மெல்ல எழுந்து நின்றாள். பிறகு பால் தம்ளரை எடுத்து நீட்டினாள்.

''குடியுங்கள்.''

அவன் வாங்கிக் கொள்ளவில்லை. ''இது ஒன்னுதான் குறைச்சல்... ஃபிட்ஸ் உள்ள உன்னை என் தலையில் கட்டி விட்டார்கள். தாலி கட்டுவதற்கு முன்னால் விழுந்திருந்தே, நான் தாலி கட்டியே இருக்க மாட்டேன். என் விதி உன்னைக் கட்டி வைச்சு வேடிக்கை பார்க்கிறது'' என்று வார்த்தைகளால் குத்தினான்.

அவள் கண்கள் நீர்க் குமிழிகள் ஆயின. முதல் சந்திப்பிலேயே கணவன் முன்பு கண்ணீர் விட்டுக் கொண்டு நிற்கக் கூடாது என்று கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''எனக்கு எப்பவும் வந்தது கிடையாது' என்று முணு முணுத்தாள்.

''திடீர்னு முளைச்சதாக்கும்'' என்று நக்கல் பண்ணினான் கௌதம்.

''ரொம்பச் சின்ன வயசிலே இருந்தது. எனக்கே தெரியாத சமயம். ஏன் திடீர்னு வந்ததுன்னு தெரியல்லே'' — தன்னையும் மீறித் தழுதழுத்தது குரல்.

''ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை முடிச்சுடுன்னு சொல்லுவார்கள். உங்க குடும்பத்தினர் ஒரு பொய் சொல்லி உன் கல்யாணத்தை முடிச்சுட்டாங்க. இல்லையா? உங்க பொய்க்கு என் வாழ்க்கைதான் பலி இல்லையா '' என்று குரலெடுத்துக் கத்தினான்.

அவளால் பதில் சொல்ல முடியவில்லை. அழத்தான் முடிந்தது.

''இதப் பார், வலிப்பு நோய் உள்ள உன் கூட என்னாலே வாழ முடியாது'' என்றவன், படுக்கையின் மீது உள்ள புது ஜமக்காள விரிப்பை எடுத்துத் தரையில் விரித்தான். தலையணை ஒன்றை அதன் மீது போட்டுக் கொண்டான். படுத்து விட்டான்.

அவளுக்கு அது உறங்காத இரவாகக் கழிந்தது. இப்படிப் பல இரவுகள். இது

**அகத்திக்கீரை**

அகத்திக்கீரை எல்லாக் காலங்களிலும் உடம்புக்கு ஒத்துக்கொள்வதில்லை. மருந்து சாப்பிடும் காலங்களில் அகத்திக் கீரை சாப்பிட்டால் மருந்தின் சக்தி முறிந்துவிடும். எண்ணெய்த் தலைமுழுகும் நாட்களிலும் இக் கீரையைச் சாப்பிடக் கூடாது.

—எஸ். விஜயா சீனிவாசன்

பார்வதத்துக்கும் தெரிந்தது. சாரு தன்வீட்டினரிடம் இதைப் பற்றிச் சொல்லவில்லை. ஆனால் மறுவீடு, விருந்து என்று சொல்லாமல் இருக்கும் மருமகளைக் கண்டு அதிசயித்தனர். சாரு மட்டும் பிறந்த வீட்டுக்குப் போய்வந்தாள்.

''கௌதம், ஒரு பெண்ணை வாழாமல் பண்ணுதே. அது மகா பாவம். உன்னை நம்பி வாழ வந்தவளை நோகப் பண்ணுதே'' என்ற பார்வதத்தை அவன் லட்சியம் பண்ணவில்லை.

''அம்மா, நீ எல்லாம் எனக்குச் செய்யறதா இருந்தாச் சொல்லு. இங்கே இருக்கேன். இல்லாட்டா எங்கேயாவது தொலைஞ்சு ஒழியறேன்.''

''அவளுக்கு என்னடா? கிளி மாதிரி இருக்கா.''

''வியாதிக்காரப் பொண்ணைப் பண்ணி வச்சுட்டுக் கதை பேசறியா?''

''வியாதி என்னடா பெரிய வியாதி. ஒரு டாக்டர் கிட்டக் காட்டினாப் போறது''

''அதுதான் எனக்கு வேலை! பேசாமப் போம்மா.''

–இதையெல்லாம் நினைச்சு நினைச்சு சாரு மறுகினாள். இதை லட்சியம் பண்ணாத கௌதம் மூன்று மாத காலம் ஹைதராபாத் பக்கம் டூர் என்று போய்விட்டான்.

வடாம் போட்ட டப்பாவில் பெருங்காயத்தைப் போட்டு வைத்தால் வடாம் பெருங்காய வாசனையோடிருக்கும்.
-வி. காமாக்ஷி

கோலக் கிண்ணத்துடன் உள்ளே போன சாருவை இருமலுடன் கூப்பிட்டாள் பார்வதம்.

''என்னம்மா ''

நிலைப்படி அருகே நின்றவளை ஏறிட்டு அந்த மங்கிய ஒளியில் பார்த்தாள். இவளுடன் வாழ கௌதம் கொடுத்து வைக்கவில்லையே என்ற துக்கம் பீறிட்டது.

''ஏம்மா கூப்பிட்டீர்கள் ''

''கொஞ்சம் வெந்நீர் சூடா தர்றியா பால்காரன் வந்துட்டானா? இன்னிக்குத் தானே கௌதம் வரான் ''

''ஆமாம்மா'' கடைசிக் கேள்விக்கு மட்டும் பதில் சொன்னாள் சாரு.

''எனக்கு என்னவோ ரொம்ப இழுக்கிறது. எழுந்திருக்க முடியாது போல இருக்கிறது சாரு.''

''நீங்க எழுந்து என்னம்மா பண்ணணும்? நான் பார்த்துக்கறேன்'' என்ற சாரு வெந்நீர் கொண்டுவர உள்ளே போனாள்.

படி ஏறும்போதே கௌதம் சிடுசிடுப்புடன் வந்தான். கால் பூட்ஸ்களைக் கழற்றி வீசினான்.

''அம்மா, அம்மா!''

பார்வதம் வருவதற்குப் பதில் சாருதான் வந்தாள்.

''உன்னைக் கூப்பிடல்லே.'' என்றான் சுவரைப் பார்த்துக் கொண்டு.

''அம்மாவுக்கு உடம்பு சரியாயில்லே.''

அவன் வெடுக்கென்று எழுந்து மாடிக்குப் போய்விட்டான். சாருவின் கண்களில் குபுக்கென்று நீர் கொப்புளித்தது.

''சாரு, சாரு!''

''என்னம்மா ''

''கௌதம் வந்துட்டானா?''

''ம்....வந்தார். காப்பி கூடக் குடிக்காமல் மாடிக்குப் போய் விட்டார்.'' பொங்கிய நீரைத் துடைத்துக் கொண்டாள்.

''அவனுக்குப் புத்தி வரப் போகிறதோ இல்லையோ'' என்று அலுத்துக் கொண்டாள் பார்வதம். திரும்பிப் படுத்துக்கொண்டாள்.

காட்டில் காயும் நிலவாக நிற்கும் சாரு சமையலறைக்குள் நுழைந்து கொண்டாள்.

பேருக்குச் சமையலை முடித்து விட்டு வந்தாள் சாரு. சுவர்க் கடிகாரம் மணி பத்தடித்தது. குளித்துவிட்டு வெளியே கிளம்பிப் போன கௌதம் அப்பொழுதுதான் உள்ளே நுழைந்தான். சாப்பிட வருவானா? கேட்டால் ஏதாவது பட்டென்று பதிலைச் சொல்லி அவளை நோக அடிப்பானா? மாடிக்குப் போய் விட்டான். தவித்துத் தண்ணீராக உருகியபடி சோபாவில் காத்துக் கிடந்தாள் சாரு.

''அம்மாடி, சாரு, சாரும்மா'' – கனிவாக அழைத்தபடி செருப்பைக் கழற்றிவிட்டு ஹாலுக்குள் வந்த தந்தையைக் கண்டதும் துள்ளி எழுந்தாள் சாரு.

''வாங்கோப்பா.''

''சௌக்கியமாம்மா? மாமியார் எங்கே''

''உடம்பு சரியில்லை. படுத்துண்டு இருக்கார்.'' விஸ்வம் பார்வதத்தின் அறைக்குள் நுழைந்தார். ''எப்படிம்மா இருக்கிறீர்கள் '' என்று விசாரித்தார்.

சாரு காப்பி கலக்கப் போனாள். காப்பியைக் குடித்த பிறகு விஸ்வம் விஷயத்தைச் சொன்னார். ''இன்னிக்கு ரமணிக்கு நிச்சயதார்த்தம். சாருவை அழைச்சிண்டு போக வந்தேன்'' என்று மென்று விழுங்கினார்.

''தாராளமாகக் கூட்டிண்டு போங்கோ''

''உங்களுக்கு உடம்பு சரியாயில்லையேம்மா'' என்று குறுக்கிட்டாள் சாரு.

'' நீ போயிட்டு வாம்மா. உங்க வீட்டுக் கல்யாண நிச்சயதார்த்தம். நீ இருக்க வேண்டாமா ''

விஸ்வம் பார்வதத்துடன் சிறிது பேசிக் கொண்டிருந்தார். பிறகு ஹாலுக்கு வந்தார். ''அப்பா, மாப்பிள்ளையைப் பார்க்க வேண்டாமா ''

மகனை ஏற இறங்கப் பார்த்தார். "நீ போய்ச் சம்மதம் வாங்கிட்டு வாம்மா" என்றபடி சோபாவில் அமர்ந்தார்.

சாரு மெல்ல மாடி ஏறி அறை வாசலில் நின்றாள். புத்தகத்திலிருந்து தலையைத் திருப்பினான். சாப்பிடக் கூப்பிட வந்திருப்பாள் என்று நினைத்தான். சுரீர் என்ற சீற்றம். "மனுஷனைக் கொஞ்ச நேரம் சும்மா விட மாட்டியா? நீ ஒழிஞ்சாத்தான் எனக்கு நிம்மதி" என்று முரட்டுத்தனமாய் ஒரு கத்தல் போட்டான்.

இது கீழ் ஹாலில் உள்ள விஸ்வத்தின் காதுகளில் விழுந்தது. பார்வதம் சொன்னதெல்லாம் எவ்வளவு உண்மை! நெஞ்சில் வந்து அறைந்தன அவன் வார்த்தைகள். அப்படியே துக்கத்தை விழுங்கிக் கொண்டார் — சாரு இறங்கி வருவதைப் பார்த்து!

## 3

ரமணியின் நிச்சயதார்த்தம் முடிந்துவிட்டது. வந்தவர்கள் திரும்பிப் போய்விட்டார்கள். மறுநாளே சாரு கிளம்பினாள். அப்பொழுதுதான் வாயைத் திறந்தார் விஸ்வம்.

"அம்மாடி.உன் மாமியார் நிஜத்தையெல்லாத்தையும் கொட்டிட்டா. நான் வேற காதாலே கேட்டேன். எதும்மா உண்மை?" கேட்கும்பொழுது தொண்டை கரகரத்தது.

லட்சத்தைச் செலவழித்துச் செய்த கல்யாணம் சிறக்கவில்லை என்றால் அவருக்குஎப்படி இருக்கும்? வீட்டினர் திகைத்துப் போனார்கள். அதற்கு மேல் சாருவால் தாங்க முடியவில்லை. கல்யாணத்துக்கு முதல் நாள் வரை பணம் கிடைக்காமல் இந்த ரமணி எப்படி ஓடினாள். பணம் பணமாக அம்மா சீட்டுக் கட்டிப் பாத்திரங்களையும், பண்டங்களையும் அம்மா எப்படிச் சேர்த்தாள்! எல்லாம் இதற்காகவா?

"என்னடிம்மா நடந்தது? அப்பா ஏதோ பூடகமாச் சொல்றாரே! கொஞ்சம் சொல்லேடி" என்றாள் அம்மா படபடப்பாக.

"சாரும்மா, என்னம்மா இதெல்லாம்? உங்கிட்ட கௌதம் எப்படி நடந்துகொண்டான்" என்ற ரமணி ஆதரவாகத் தங்கையைப் பிடித்துக் கொண்டாள்.

சாரு உடைந்து போனாள். ஆறு மாத காலமாக நெஞ்சில் தேக்கி அணை கட்டிய விஷயங்கள் — பெருமழை காரணமாக விரிசல் விடுவது போல அவர்களின் பாசத்தால் உடைப்பெடுத்தன. கண்கள் செம்பருத்திப் பூவாகச் சிவந்தன.

"அம்மா, அண்ணா, கல்யாணம் நடந்த நாளாய் நான் வாழவே இல்லை. கல்யாணத்தன்று அவர் என்னைத் தொட்டதுதான். எனக்குக் காக்காய் வலிப்பாம். அதனாலே என்கூட அவர் வாழ மாட்டாராம்." என்று சொன்ன சாரு பொல பொலவென்று கண்ணீர் உகுத்தாள்.

சிலருக்கு பற்களில் இரத்தம் கசியும். கடுக்காய், சீரகம், உப்பு ஆகிய மூன்றையும் இடித்துத் தூளாக்கி தினமும் இரண்டு வேளை பல் தேய்த்தால் இரத்தம் கசிவது நிற்கும்.

—ஏ. கே. சகிலாபேகம்

ரமணியின் ரத்தம் கொதித்தது. இது என்ன அநியாயம்! அம்மா ஓடிவந்து மகளின் கண்ணீரைத் துடைத்தாள். "நீ எதுக்கு அழறே அசடு! அப்பாவையும் ரமணியையும் விட்டு அவனை என்னன்னு கேட்கச் சொல்லுவோம். நீ அதுவரை இங்கேயே இரு" என்றாள் ஆதரவாக.

"ஒரு பெண்ணுக்குப் புகுந்த இடம் தான் நிரந்தரம்! அது இல்லேன்னா?" —சாருவால் துயரத்தை அடக்க முடியவில்லை. அழுதாள்.

இரவு மணி எட்டு. டி. வி.யில் தமிழ்ச் செய்தியைக் கேட்டுக் கொண்டிருந்தான் கௌதம். வெறுமனே ஒருக்களித்த கதவைத் திறந்து கொண்டு அவன் மாமா சங்கரனும், முரளியும் நுழைந்தார்கள். பின்னால் விஸ்வமும், ரமணியும் நுழைந்தார்கள்.

"வாங்க, வாங்க" என்று பொதுவாக வரவேற்றான்.

முரளி அறைக்குள் நுழைந்து அத்தை பார்வதத்தைப் பார்த்தான்.

"வாடா, முரளி, என்ன இந்தப் பக்கமே உன்னைக் காணலே " என்று கேட்டபடி படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள்.

"உடம்பு சரியில்லேன்னு சொல்லி அனுப்பக்கூடாதா அத்தை? சாருகூட இல்லை போலருக்கு "

"அவாண்ணா ரமணிக்கு நேத்திக்கு நிச்சயதார்த்தம். இன்னிக்கு வருவாள்னு பார்த்தேன். காணோம். கௌதம் இருக்கிற அழகுக்கு அவ எப்படி வருவா? நானே நேத்திக்குச் சம்பந்திகிட்ட மெல்ல சாடையாய்ச் சொல்லிட்டேன். அந்தப் பெண்ணோட முகத்தைப் பார்க்கச் சகிக்கலே."

பார்வதம் கண்களைத் துடைத்துக்கொண்டாள். முரளி, குரலைச் சன்னமாக்கிக்கொண்டான். "அத்தை, சாருவோட அப்பாவும், அண்ணாவும் எங்க வீட்டுக்கு வந்திருந்தா. அப்பா கிட்ட விஷயத்தைச் சொன்னா. அப்பாவுக்கு ஒரே கோபம். அவாளை இங்கே கூட்டிண்டு வந்துட்டா. கௌதம் ரொம்ப மோசம் அத்தை. இப்படி நடந்துக்கக் கூடாது."

பார்வதத்தின் கண்களில் நீர் திரண்டது. 'ஒரே மகனின் வம்சம் விளங்க வேண்டும் என்று அவள் கண்ட கனவு கனவாகவே ஆகி விடும்போலிருக்கே' அவள் நெஞ்சு அடித்தது.

''நீயும் வந்து ஹால்லே உட்கார்ந்துக்கோ அத்தை. கௌதம் என்ன சொல்லப் போகிறான்னு கேட்கலாம்.'' என்ற முரளியைத் தொடர்ந்து பார்வதம் ஹாலுக்கு வந்தாள். முரளி ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டான். கௌதம் சாருவுடன் வாழ வேண்டுமே என்று அவள் நெஞ்சு அடித்துக்கொண்டது.

கௌதம் பேசாமல் அவர்களையே பார்த்தான். அவர்களோ, ஒரு கணம் டீ.வி.யைப் பார்ப்பதும், பிறகு அவனைப் பார்ப்பதுமாகக் கழித்தார்கள். அவர்கள் சாருவைப் பற்றிப் பேச வந்திருக்கிறார்கள் என்பது புரிந்தது கௌதமிற்கு. தனக்குப் பிடிக்காதவள் எங்கே இருந்தால் என்ன?

சங்கரன் வெற்றிலைப் பெட்டியைத் திறந்து வெற்றிலையைப் போட்டுக் கொண்டார். சிறிது புகையிலையை உள்ளங்கையில் வைத்து உருட்டிப் போட்டுக் கடை வாயில் அடக்கிக் கொண்டார். குரலும் காரமாகவே எழுந்தது.

''என்டா டேய், விசுவம் என்னவோ சொல்றாரே என்னடா அது!''

கௌதம் மனத்தை அசையாமல் உறைய விட்டவனாக இருந்தான்.

''என்ன சொல்றார். அதையும் சொல்லுங்கோ மாமா.''

''ஏன்டா, கட்டின உடனே வாங்கிக் கல்யாணம் பண்ணி வச்சா — நீ சாரு கூட வாழலையாமே ''

கௌதம் அயரவில்லை. ''என்ன காரணம் தெரியும் இல்லையா '' என்று கேட்டான் மாமாவை.

''பெரிசா என்னடா காரணம்? நான் ரம்யாவை இழந்துட்டு நிக்கறதும், இவர் பெண் வாழாம நிக்கற பரிதாபமும் ஒண்ணுதானடா? பெத்த வயிறு கொதிச்சும்டா''

''நோய்க்காரப் பெண்ணை என் தலையில கட்டின பரிதாபம் தெரியல்லையா மாமா? காலம் பூரா அவளுக்கு வைத்தியம் பண்ணி எனக்குப் பிறக்கிற குழந்தைகளுக்கும் இந்தப் பரம்பரை நோயைப் பரப்பணும் இல்லையா? தாலி கட்டறத்துக்கு முன்னாடி இது தெரிஞ்சிருந்தா தாலி கட்டியே இருக்கமாட்டேன்.'' படபடவென்று பேசியவன் கழுத்திலும் முகத்திலும் துளிர்த்த வியர்வையை வேஷ்டி நுனியால் துடைத்துக் கொண்டான்

பார்வதம் வாயடைத்துப் போய் அமர்ந்திருந்தாள். விஸ்வத்துக்கே இந்தப் பேச்சைக் கேட்டதும் படபடவென்று வந்தது. முரளி அவர்கள் பேசுவதை உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தான். ரமணியின் ரத்தம் கொதித்தது. எப்பவும் இல்லா மயக்கம் திடீர்னு வந்து அவள் வாழ்வில் மண்ணை அள்ளிப் போட்டதைத்தான் விதி என்பதா?

''மிஸ்டர் கௌதம், என் தங்கைக்கு இது எப்பவும் உள்ள வியாதி இல்லை. நீங்க எந்த டாக்டர் கிட்ட வேணும்னாலும் காட்டிக்கலாம். அதிகப்படியான மகிழ்ச்சியைத் தாங்கிக்கொள்ளச் சக்தி இல்லாம இந்த மயக்கம் வந்துடுத்து'' என்று நிதானமாகக் கௌதமிடம் ரமணி அழுத்தமாகக் கூறினான்.

''உங்க தங்கை பின்னாடி மருந்துப் பெட்டியைத் தூக்கிண்டு — எந்த ஆனந்தத்தின் பொழுது இந்த வலிப்பு வரும்னு காத்துண்டு இருக்கணுமா? இம்பாஸிபிள் மிஸ்டர் ரமணி. உங்களுக்குக் கல்யாணம் ஆகப் போறது. அதிகப்படியான மகிழ்ச்சியினால் அவளுக்கு வலிப்பு வருகிறதான்னு பார்க்கட்டுமா ''

இடம் பார்த்துக் குத்தினான் கௌதம். சங்கரனால் பேச முடியவில்லை. இவ்வளவு தீர்மானமாக இப்படிப் பேசுகிறானே?

''இதே வியாதி உனக்கு இருந்தா, வச்சுக்கோ, ஒரு பேச்சுக்குச் சொல்றேன்.'' என்றார் சங்கரன்.

''நான் கல்யாணம் பண்ணிண்டு ஒருத்தர் வாழ்வை வீணாக்க மாட்டேன்'' என்றான் கௌதம் பட்டென்று.

விஸ்வத்துக்குத் துக்கம் குமுறிக்கொண்டு வந்தது. தம்மை மிகுந்த சிரமத்துடன் அடக்கிக் கொண்டார். இப்படிச் சகிப்புத் தன்மையோ, இரக்கமோ, ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பலி கொண்டு விட்டோமே என்ற மனப்பான்மையோ இல்லாதவனிடம் என்ன பேசுவது? சாருவின் தலைவிதி என்று தான் சொல்ல வேண்டும்.

கிளம்பலாமா, இனிமேப் பேச என்ன இருக்கிறது என்பது போலப் பார்த்தார் விஸ்வம். ரமணி எழுந்து விட்டான். முகம் சிவந்து கிடந்தது. 'நீ எல்லாம் ஓர் ஆண் பிள்ளையாடா ' என்று கேட்டு ஓர் உலுக்கு உலுக்க வேண்டும் போல ஆவேசம். ஒரு காலத்தில் இவர்கள் தங்கள் குற்றங்களை உணராமலா போவார்கள்?

**யோசனை**

சிறிதளவு நொச்சி இலையை எடுத்துக் கொதிக்கும் நீரில் போட்டு, அதன் ஆவியை (வெளிக் காற்று படாதவாறு) பிடித்தால், சுவாசிப்பதில் மிகவும் சிரமம் இருப்பவர்களுக்கு இரவில் அவஸ்தை இன்றி தூக்கம் வரும்.

திருமதி. அகிலா கோபாலன்

''அப்ப உங்க முடிவு''

''உங்க பெண்ணும் நானும் சேர்ந்து வாழ்வது என்பது இயலாத காரியம்'' என்றான் கௌதம் கடுமையாக.

பர்வதம் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''மிஸ்டர் கௌதம், உங்க முடிவுக்கு என் நன்றி. எனக்கு சாரு பெண் இல்லை; பிள்ளை என்று எண்ணிக் கொள்கிறேன். ஆனால் உங்கள் முடிவு சரியானது இல்லை என்று காலம் உணர வைக்கும்.''

இதற்கு மேல் அங்கு வேலை இல்லை என்பது போலக் கிளம்பினார்கள் விஸ்வமும், ரமணியும். சங்கரனும் எழுந்து கொண்டார். பர்வதம் இந்த அதிர்ச்சியைத் தாங்க முடியாமல் எழுந்து போய் படுக்கையில் விழுந்தாள். அருமை மகளின் வாழ்க்கை இப்படியா முடிய வேண்டும்... குமுறிக் குமுறி அழுதாள்.

''நாங்க வரோம்'' என்று சங்கரனிடம் விடை பெற்றுக் கொண்ட விஸ்வமும், ரமணியும் போய் விட்டார்கள்.

சங்கரன் பர்வதத்தைத் தொடர்ந்து அறைக்குள் போனார். குமுறிக் குமுறி அழும் அருமைத் தங்கையைப் பார்க்க முடியவில்லை.

''பர்வதம் மனசைத் தேத்திக்கோ. இள ரத்தம் துள்ளறது. கொஞ்ச காலம் போகட்டும். சரியாப் போயிடும்'' என்று ஆறுதல் சொன்னார்.

## 4

**கொ**ஞ்சகாலம் போனது. கௌதம்மின் மனம் மாறவா செய்தது? அவன் சாருவைப் பற்றியே நினைக்கவில்லையே. எங்கேயாவது போனால் கூட்டங்களில் கூட ரம்யாவைத் துழாவினான். சாருவும் அதற்குப் பிறகு அங்கு வரவில்லை. அவள் மேலே படிப்பைத் தொடரப் போவதாக முரளிதான் சொன்னான்.

''நல்ல பெண்ணின் வாழ்வைப் பாழாக் கிட்டே கௌதம். அதே ஃபிட்ஸ் இன்னொரு தடவை வந்தால் நீ சொல்றதிலே நியாயம் இருக்கு. அன்னிக்கு அவளை பஸ்லே பார்த்தேன்'' என்று நிறுத்தினான் முரளி.

''ஒன்னு ஒப்பாரி வச்சாளோ? கர்மம் கர்மம். நீ அந்த ஒப்பாரியை இங்கே வந்து கக்கறியா?'' என்று சிடுசிடுத்தான் கௌதம்.

கௌதம் சாருவைக் கூட்டி வைத்துக் கொண்டு வாழாததிலிருந்து முரளிக்கு அவன் மீது உள்ள பிடிப்பு விட்டுப் போயிற்று. எந்த ஒரு பிரச்னையையும் தர்ம நியாயத்துடன் அணுகாத ஒருவன் எதில் சேர்த்தி என்ற விட்டேத்தி மனப்பான்மைதான் வந்தது. அந்தளிச்சலைச்சொற்களில் காட்டினான்

''கணவன் காலையே சுத்திண்டு கையேந்தி நிற்கும் பெண்கள் நிலை மாறிப்போச்க

> தீப்புண், கொப்புளம், மற்றும் ஆறாத அழுகிய புண்களுக்கு ஒரு எளிய வைத்தியம்.
>
> அரச மரத்தின் பழுப்பு இலைகளை ஒரு சட்டியில் போட்டு அதன்மீது ஒரு சட்டியை வைத்து மூடி பத்து நிமிடம் அடுப்பில் வைத்தால் இலைகள் சாம்பலாகும். இச் சாம்பலில் தேங்காய் எண்ணெயை ஊற்றி கலந்து புண்களில் தடவி வந்தால் புண்கள் ஒரே வாரத்தில் ஆறும்.
>
> எஸ். விஜயா சீனிவாசன்

கௌதம். தன்னைக் காத்துக் கொண்டு கிடைக்கிற சுதந்திரத்தைத் தனக்கு கை விலங்காக்கிக் கொள்ளாத பெண்கள்தான் உருவாகிறார்கள். நீ எட்டி உதைக்கஉதைக்க உன்காலை முத்தமிடும்பெண்ணைத்தேடாதே'' என்று கூறிய முரளி எழுந்து போய்விட்டான்.

கௌதமின் முடிவை ரமணியும் விஸ்வமும் வந்து சொன்னபொழுது ஒரு கணம் குடும்பத்தினர் ஆடித்தான் போனார்கள். பெண் ஏன் கணவன் வீட்டில் போய் வாழவில்லை என்று அக்கம் பக்கத்தினர் கேட்பார்களே என்று அஞ்சினாள் அம்மா.

''என்னடிம்மா இது அதிசயமா இருக்கு'' என்று நொந்த குரலில் கூறினாள் பாட்டி.

சாருவின் அம்மா புலம்பினாள். சாரு ஜன்னலடியில் சிலையாக நின்றாள். விஸ்வம் மகளைத் தேற்ற அருகில் போய் மெல்லத் தலையைத் தடவினார்.

''அம்மாடி, உனக்கு இப்ப நல்ல காலம் இல்லை போல் இருக்கு. கொஞ்ச காலம் போகட்டும். நீ அதுவரை மேலே படி.''

இந்தத் தீர்மானத்துடன் படிப்பைத் தொடர்ந்த சமயம் தான் ஒரு நாள் பஸ்ஸில் முரளியைப் பார்த்தாள். அவனும் அருகே வந்து நின்றுகொண்டான்.

''சௌக்கியமா'' என்ற அறிமுகத்துடன் முரளி ஆரம்பித்தான்.

''சௌக்கியம்தான்'' என்று சிறிது லஜ்ஜை பொங்கப் பதில் கூறினாள் சாரு.

''மேலே என்ன பண்ணுகிறீர்கள்''

''படிக்கலாம்னு இருக்கேன். எல்லாரும் சௌக்கியம்தானே? என் மாமியார் எப்படி இருக்கார்''

''அத்தைக்கு வேதனை பிடுங்கித் தின்கிறது. படுத்த படுக்கையா இருக்கா'' என்றான் முரளி.

அற்கு மேல் சாருவால் பேச முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது.

முரளி சொன்னது வாஸ்தவம்தான். பர்வதம் படுத்த படுக்கையாக ஆகிவிட்டாள். நடமாட்டம் இல்லை. முரளி தினமும் அவளைப் பார்க்க வருகிறான். வாய் விட்டுப் புலம்பினாள் பர்வதம்.

''முரளி, நான் என்னவோ பிழைக்கமாட்டேன் போல இருக்கு. அதனாலே நீ சாருவை ஒரு தடவை வரச் சொல்லேன்'' என்று வற்புறுத்தினாள்.

முரளி வந்து சொன்னதும் விஸ்வம் சாருவை அழைத்துக் கொண்டு வந்தார். ரமணிக்கு அவ்வளவாக இஷ்டம் இல்லே.

''ஒன்றை உடைப்பது சுலபம் ரமணி. ஒட்டவைப்பதுதான் கஷ்டம். கூடிய வரைக்கும் ஒட்டவைக்கவே முயலுவோம். தவிர உனக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருக்கு. இந்தச் சமயத்தில் நம்ம பெண் வாழலேனு டமாரம் அடிக்கக் காண்பிக்க வேண்டாம்.'' என்று விஸ்வம் தன் மகனுக்கு புத்தி சொன்னார்.

சாருவைப் பார்க்கக் காத்துக் கொண்டிருந்தது போல இரண்டே தினங்களில் பார்வதம் கண்ணை மூடிவிட்டாள்.

''சாரு, நீ என்னைப் பொறுத்தவரையில் என் மருமகள்தான். நான் செத்துப் போனு என் காரியங்களை நீவிட்டுக் கொடுத்திடாதே'' என்ற பார்வதம் சாருவின் கரங்களைப் பற்றிக் கொண்டாள்.

வெண்ணெயைக் காய்ச்சி இறக்கும் போது அரை ஸ்பூன் வெந்தயத்தைப் போட்டால் நெய் மணமாக இருக்கும்.

-ஏ. கே. சகிலாபேகம்

இந்தக் குறை வைக்கக் கூடாது என்று விஸ்வம் பெருந்தன்மையுடன் மகளை அனுப்பி வைத்தார். அமெரிக்காவிலேயிருந்து கௌதமின் தங்கை வந்திருந்தாள். அவளுக்கு கௌதம் மீது சரியான கோபம். அதுவும் பத்துத் தினங்கள் சாரு கூடப் பழகியதில் தன் சகோதரனின் குற்றம் நன்கு விளங்கியது.

பத்து தினங்கள் காரியங்கள் முடிந்தன. அடுத்த நாள் கௌதமின் தங்கை கபம் முடித்த கையுடன் திரும்பப் போகிறாள். கௌதம் கூப்பிட்டான்.

''சாந்தி, சாந்தி!''

''என்ன அண்ணா''

''என்ன வேண்டுமோ நீ எடுத்துண்டு போ. 'அவ' என்ன கொண்டு வந்தாள்னு கேள். ஒண்ணு கூடப் பாக்கி யில்லாம அவ வீட்டுக்கு அனுப்பி வைக்கப் போறேன். எனக்கும் அவளுக்கும் இதோடு சரி.''

தங்கள் உறவு கணக்குத் தீர்க்கும் உறவா? தனியாக நின்று குமுறினாள் சாரு. சாந்தி கவனித்து விட்டாள். ''கவலைப்படாதே சாரு. உனக்கு ஒரு நாள் நல்ல காலம் பிறக்கும்'' என்றாள் ஆறுதலாக. சூரியனே இல்லாத இடத்தில் ஏது வெளிச்சம்?

சொன்னது போல் எல்லாவற்றையும் கட்டி அனுப்பிவிட்டான் கௌதம். சாரு கிளம்ப வேண்டியதுதான் பாக்கி. ''சாந்தி, துக்கத்துக்கு வந்துட்டு சொல்லிக்கக் கூடாது' என்ற சாரு துயரில் திணறினாள்.

கௌதம் படீரென்று வெடித்தான். ''சாந்தி, இங்கே ஒண்ணும் இல்லே. வீட்டைக்கூட வித்துட்டேன். தாராளமா சொல்லிக்கலாம். இவளுக்கு ஏதாவது பணம் வேணுமா? தரேன். என் வேலையை ரிஸைன் பண்ணிட்டேன். ஆர்மியில் சேரப் போகிறேன்'' என்றான் கௌதம்.

அவர்கள் இடி விழுந்தாற்போல் நின்றார்கள்.

## 5

பத்தாண்டுகள். கௌதம் இப்பொழுது மேஜர் கௌதம். கோவா, மால், டெல்லி, என்று பல இடங்கள். பல போர்களைச் சந்தித்தாகி விட்டது. சென்னை நினைவே இல்லே.. தனக்கு யார் அங்கே காத்துக் கொண்டிருக்கிறார்கள்? சில விடுமுறைகளை பம்பாய், கல்கத்தா என்று கழித்தான். ஒரு தடவை அமெரிக்கா போய் வந்தான்.

''இப்படித் தனி மரமாக நிற்கிறாயே அண்ணா'' என்று சாந்தி அழுதாள்.

அவன் இப்பொழுதெல்லாம் நிறைய சிகரெட் பிடித்தான். நிறையக் குடித்தான். சாந்தியின் பேச்சு நெஞ்சில் தைக்கவே இல்லே. சாருவுக்குச் செய்த அநீதி உறைக்கவேயில்லே.

''அண்ணா, இப்பொழுதும் ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லே. என் பெண் ராணி நன்கு வளர்ந்து விட்டாள். சென்னையில் நம்ம மண்ணில்தான் வரன் பார்க்கணும். அதனாலே சென்னைக்கு வரப் போகிறேன்.''

''சரி; சென்னைக்கு வந்து''

''சாரு எங்கே இருக்கிறாள் என்று தேடிக் கண்டு பிடிக்கப் போகிறேன்.''

அவன் விரக்தியாகச் சிரித்தான். ''அடிக்கடி துப்பாக்கிக் குண்டுகளுக்கு நெஞ்சைக் காட்டிக் காட்டிப் பழகிவிட்டேன். அந்த நெஞ்சில் சாரு இல்லேயே சாந்தி.''

சாந்திக்கு ஏமாற்றமாகவே இருந்தது. அவனும் ராணுவத்தில் சேர்ந்த புதிதில் ஊன்றிய மண்ணைப் பிரிந்த துக்கத்தில் துவண்டதுண்டு. வானத்தில் பறக்கும் பறவைக் குஞ்சு கீழே இறங்கத் தெரியாமல் துடித்தது போல் துடித்ததுண்டு. தனக்கென்று என்ன சாசுவதம்? எதுவுமில்லே என்றுதான் தோன்றியது.

எல்லேயில்லாத வானக் கூரையின் கீழ் நட்சத்திரக் கூட்டத்தைக் கண்டு அண்ணாந்து படுத்துக் கொண்டு கிடக்கையில் நினைப்பான். தன்னால் ஏன் சாருவுடன்

பழகவே முடியவில்லை? ஏன் அப்படி வெறுத்தோம். சில உள்ளுணர்வுகளுக்குக் காரணம் எப்படிச் சொல்ல முடியும்?

போர் சமீபித்த காலங்களில் — நாளை வாழ்வு நிச்சயம் இல்லை என்ற நினைப்பில் நண்பன் மேஜர் ராஜு அவனை அழைத்துப் போவதுண்டு. ''கௌதம், இன்றுவரை வாழ்கிறோம். பிறகு எப்படியோ அதனால் அனுபவிப்பதில் எதற்குக் குறை'' என்று கூறுவான்.

இதுவரை எந்தப் பெண்ணையும் தீண்டிய தில்லை என்று கூறக் கூசும் நா. தன்னை விட்டுப் பிரியும் ராஜுவைத் தடுக்க இயலாமல் தவிப்பான். இவன் வரவுக்காகக் காத்துக்கொண்டிருக்கும் பெண் புரு நின்று கொண்டே இருக்க வேண்டும். ஒரு ஓரப் பார்வை. ஓராயிரம் மின்னல்கள். அந்தப் பெண் சாருவாக அவனுக்குத் தோன்றுவாள்.

சாருவை அவன் இந்த முறையில்கூட வைத்துப் பார்த்தது கிடையாதே. அவன் பேசாமல் வந்து விடுவான். சாருவால் வாழத்தான் முடியவல்லை. அவனை அவன் போக்கில் போகாமல் தடுக்கவும் அவள் நினைவு செய்கிறதே.

ராஜு அவனைக் கோழை என்று ஏசியிருக்கிறான். அதற்காக கௌதம் வெட்கப் பட்டதில்லை. சாந்தி கூறியதிலிருந்து அடிக்கடி சாரு நினைவுக்கு வருகிறாள். அவள் மரக் கிளையிலிருந்து உதிர்க்கும் நீர் மணிகளாக நினைவுகளை உதிர்ப்பாள். சேறு படிந்த தடத்தில் மறையும் காலடிச் சுவடுகளாக சாருவின் நினைவுகள் மறைந்துபோகும்.

நிர்மலமான மேகத்தில் கரு மேகங்களைக் கொண்டு சேர்க்கும் வயது சாருவுக்கு இல்லை. அப்படியானால் எந்தத் தடத்தில் சுவடுகளைப் பார்ப்பது? சாந்தியை விட்டு டெல்லி திரும்பியதும் எல்லாமே கலைந்து போய்விட்டது. அவனால் சுமக்க விரும்பாத சுமைகள்.

அவன் ராணுவத்தில் சேர்ந்த புதிதில் முரளி தொடர்ந்து கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். நல்ல பட்டில் இழையோடும் சரிகைக் கோடுகளாகச் சாருவைப் பற்றிய விஷயங்கள் குறுக்கிடும்.

'கௌதம், சாரு தன் படிப்பைத் தொடர்ந்து வருகிறாள். சமீபத்தில் ஒயிட் சாலையில் நான் பார்த்தேன். உன்னைப் பற்றி விசாரித்தாள். நீ எங்கே இருக்கிறாய்என்றும் கூறினேன்.' — இப்படி ஒன்று.

'கௌதம், சாரு படிப்பை முடித்துவிட்டாள். வேலைக்கு முயற்சி செய்கிறாள். கடிதம் எழுதினால் நீ படிப்பாயோ, மாட்டாயோ என்று தயங்குகிறாள்.'— இப்படி ஒன்று.

'நிச்சயம் பதில் போட மாட்டேன்' என்று கூறினான் கௌதம். நெஞ்சில் புதைத்த வார்த்தைகளைச் கடித்துத் துப்பினான்.

'கௌதம் சாருவுக்கு வேலை கிடைத்து விட்டது. சமூக நல அமைப்பில் சேர்ந்து இருக்கிறாள். வாழ்வில் ஏமாந்த பெண்களுக்குச் சேவை செய்யும் மனப்பான்மை அவளுக்கு நிறைய இருக்கிறது. அமைச்சருடன் அவள் மேடையில் அமர்ந்து பேசியதைக் கண்டேன். பேச்சில் வீறு கொண்டு எழும் எழுச்சி இருக்கிறது.

கௌதம், இப்பொழுதாவது அவளை ஏற்றுக்கொள். தங்க விளக்கு ஒன்று தெருவில் கிடப்பதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது. அது உன் வீட்டு பூஜை அறை விளக்குடா.' — இதுதான் கடைசியாக வந்த கடிதம்.

ஐந்து வருடங்கள் ஆகியிருக்கலாம். கௌதம் பதில் போடவே இல்லை. காலம் ஓடிவிட்டிருந்தது. சாந்தி தன் பெண்ணுக்குச் சென்னையில்தான் வரனை முடித்தாள். அதற்காகக் கௌதமும் சென்னைக்கு



மீண்டும்வரவேண்டியதாகிவிட்டது. விசேஷங்களெல்லாம் முடிந்த பிறகு மனத்தில் ஒட்டாமல் அலைந்தான் கௌதம். திகழும் தமிழ்லியா பார்த்தான்.

தனக்குச் சொந்தமில்லாத தன் வீட்டைப் பார்த்தான். மெரினா கடற்கரையில் ரம்யாவுடன் பகிர்ந்து கொண்ட நினைவுகள் கல்யாணத்தில் ஏற்பட்ட ஏமாற்றம்—அம்மாவின் மறைவு — தன்னால் ஏன் சாருவுடன் வாழ முடியவில்லை அவனுக்குப் புரியவில்லை.

சாரு சென்னையில்தான் இருப்பாளா? எங்கே இருப்பாள். சென்னையில் இருப்புக் கொள்ளவில்லை.

''அண்ணா, இப்பவாவது சொல். சாருவைத் தேடிப் பிடித்து அழைத்துக்கொண்டு வருகிறேன். காட்டில் காயும் நிலாவாக உன் இளமை வீணாகப் போய்விட்டதே'' என்று மன்றாடினாள்.

அவன் மனமே அவனுக்குப் புரியவில்லையே!

## 6

**மே**லை நாடுகளில் ஏற்பட்ட போரின் காரணமாக அநேக இந்தியர்கள் மூலை முடுக்கிலிருந்தெல்லாம் வந்து குவிந்தார்கள். அகதிகள் அஸ்ஸாமின் ஒரு பகுதியில் தங்கிக் கொண்டார்கள். தங்களைக் காத்துக்கொள்ளப் பாடுபட்டுப் போராடித் தாயகம் வந்த மகிழ்ச்சி. எல்லோருக்கும் கை கொடுக்கும் தாயகம். தன் குழந்தைகள் சில ஆண்டுகள் தன்னை விட்டுச் சென்றதால் தள்ளிவிடுமா என்ன?

இளைஞர்கள், முதியோர், இளம்பெண்கள், குழந்தைகள் என்று திருநாள் கூட்டமாக நிரம்பி இருந்தார்கள். பல மொழிகள் பேசுபவர்கள். தங்கள் தங்கள் மொழிகள் பேசுபவர்களைக் கண்டு இனம் பிரிந்து ஓடினர். வேலைக்கு நல்ல உணவுப் பொட்டலங்கள் இந்திய அரசு அளித்த உடைகள்.

இவ்வளவுக்கும் இடையில் மாலையில் கவலையை மறந்து பாடும் நாடோடிப் பாடல்கள். பாட்டுக்கு ஏற்ற ஆட்டங்கள். கேலிகள். மக்களுக்குத்தான் மகிழ்ச்சியாய் வாழ எத்தனை ஆசை! அஸ்ஸாமில் வாழும் மக்கள் இவர்களைக்கண்டு போக வந்தார்கள். சிலர் தங்கள் தோட்டங்களுக்கு ஆட்களாகத் தேயிலை பறிக்க அழைத்துச் செல்ல ஆசைப்பட்டார்கள்.

தங்கள் வேண்டுகோளை விண்ணப்பமாக எழுதி மேலிடத்துக்குஅனுப்பி வைத்தார்கள். எந்தக் கலகலப்பும் தன்னைப் பாதிக்காமல் உட்கார்ந்திருந்தாள் அந்த இளம் பெண்.

''நீ எங்க கூடத் தோட்ட வேலைக்கு வரியா? கூலி தருவாங்க'' என்று அவளைக் கேட்டாள் ஒருத்தி.

அந்த இளம் பண் பதில் சொல்லவில்லை. வெறித்துப் பார்த்தாள். தளதளவென்று உடலில் சில தழும்புகள். கண்களில் திமீர் என்று ஏற்படும் பயம். கொப்பளித்துக் கன்னத்தில் விழும் கண்ணீர் முத்துக்கள். கேட்டவள் பயந்து போய்விட்டாள்.

'இந்தப் பெண் பைத்தியமோ' என்ற சந்தேகத்தைக் கிளப்பி விட்டாள் அந்தப் பெண். உடனே அங்கே நியமிக்கப்பட்ட டாக்டர் வரவழைக்கப்பட்டார். அதற்கும் அந்த இளம் பெண் மறுப்புச் சொல்லவில்லை ஆனால் டாக்டர் பரிசோதனை செய்யும் சமயம் மட்டும் வீலென்று அலறினாள்.

அவளுக்குக் கடுமையான பரிசோதனைகள் செய்து பார்க்கப்பட்டன. ''கடுமையான பாதிப்பினால் அவள் தன் இயல்பான தன்மையை இழந்து விட்டிருக்கிறாள்'' என்று டாக்டர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். அது எப்படிப்பட்ட பாதிப்பு என்பதை அவர்கள் ஓரளவுக்கு ஊகிக்க முடிந்தது. அதை மற்றவர்களிடம் சொல்ல முடியாத இரகசியமாக இருந்தது.

நல்ல பெண்ணை அவள் விருப்பத்துக்கு மாறாகப் பெத்தடின் போன்ற போதையை ஏற்றி ஏற்றி அவளையே மறக்க வைத்திருக்கிறார்கள். கடுமையான மருந்துகள் அவள் உடம்பில் செலுத்தப்பட்டிருக்கின்றன என்பதை டாக்டர்கள் புரிந்து கொண்டார்கள். அது அவள் மூளையைப் பாதித்து அரைப் பைத்தியமாக்கி விட்டிருக்கிறது.

இவளுக்குத் தேவையான வைத்தியம் செய்ய மேலிடத்தில் உத்திரவு வாங்க வேண்டும். அதற்கு டாக்டர்கள் முயன்ற சமயம் ஓர் ஆச்சரியத்தைக் கேள்விப்பட்டார்கள். அந்த இளம் பெண்ணை அழைத்துக்கொண்டு செல்ல ஒருவர் தயாராக இருக்கிறார். அவரும் மேலிடத்துக்கு மனுவை அனுப்பி வைத்திருக்கிறார் என்பதுதான்.

---

கண்ணுக்கு இட்டுக் கொள்ளும் மை திடும் என்று கரிக்கிறதா? ஒரு பாத்திரத்தில் சுத்தமான ஜலத்தை விட்டு மை டப்பியை (மூடியைதிறந்து) அதற்குள் போட்டு விடுங்கள், 2 நாள் கழித்து மையை எடுத்து இட்டுக் கொண்டால் கரிக்காமல் குளு குளு என்று இருக்கும்

-தங்கம்மாள்

புலரும் இன்றைய
என் பொழுது
மகிழ்வாய
மலருமே

பொங்கும்
மகிழ்வைக் கூட்டுமே
**மஃபத்லால்**
**துணிகள்**
மட்டுமே

மஃபத்லால் துணிமணிகள்
மென்மையானவை. உடலுக்கு இனிய
உணர்வைத் தருபவை. பாலியெஸ்டர்
பாலியெஸ்டர் ப்ளெண்ட்ஸ், மற்றும்
காட்டன் துணிகளில் நித்தம்
நித்தம் புத்தம் புதிய படைப்புகள்.
அவற்றின் வண்ணங்கள்,
நெசவுகள், மற்றும் வடிவமைப்புகள்
அனைத்தும் காலமும் பொழுதும்
கற்பொளியூட்டி உங்கள் அழகுக்கு
அழகூட்டுகின்றன.

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



MF-123 TAM

கௌதமிற்கு டெல்லியிலிருந்து அஸ்ஸாமிற்கு மாற்றலாகி இருந்தது. சென்னையிலிருந்து வந்ததும் உத்திரவு வந்தது. சாந்தியும் அவசரமாக டெல்லி வந்து அவனுடன் தங்கிவிட்டுப் போனாள்.

"எனக்கென்ன சாமான்கள்? இரண்டு பெட்டி, ஒரு ஹோல்டால்" என்று கிளம்பி விட்டான் கௌதம்.

அவனை அனுப்பும் வரை சாந்தி உடன் தங்கினாள். தன்னுடைய மனுஷி என்று நெஞ்சில் ஒருவிதப் பாசம் சுரந்தது அவனுக்கு. நாட்டுக்காகத் தன்னைத் தியாகம் செய்யும் சகோதரனை வழியனுப்பும்பொழுது சாந்தியும் கண் கலங்கி விட்டாள்.

இப்படி அஸ்ஸாம் வந்த கௌதம் ஒரு நாள் ஜீப்பில் எங்கேயோ போய்விட்டு வந்தான். வரும் வழியில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்த அந்தப் பெண்ணைப்பார்த்தான்.

"டிரைவர், ஜீப்பை நிறுத்து."

குதித்து இறங்கினான் கௌதம். அந்தப் பெண்ணைப் பார்த்து ஓடினான். பின்புறமாகப் போய் "ரம்யா, ரம்யா, நீயா" என்று தோள்களைப் பற்றி அசைத்தான். ரம்யா மெல்லத் தலையைத் திருப்பினாள்.

இவள் ரம்யாவா இல்லையா என்ற சந்தேகம் வந்து விட்டது அவனுக்கு. அந்த முகத்தில் காது ஓரம் உள்ள மச்சம் இவள் உன் ரம்யாதான் என்று உணர்த்தியது. ஆனால் பார்வையில் என்ன மந்தத்தனம்?

"ரம்யா; நீ ரம்யாதானே"

அவள் கண்களில் வியப்பு பூத்தது. தன்னை நினைவில் கொண்டு வந்து விட்டாளா அவன் பூரித்துப் போனான். "என்னைத் தெரியல்லே நான் உன் கௌதம்."

"கௌதம், கௌதம்" முனகியவள், மெல்ல எழுந்து நின்றாள். அந்த உயரம், கைகளின் வீச்சு எல்லாம் ரம்யாதான் என்று அவனை உணர வைத்தது. ரம்யா விடுவிடுவென்று நடந்து போனாள். கௌதம் அவளைத் தொடர்ந்து ஓடினான். அகதிகள் முகாமுக்குள் நுழைந்து விட்டாள்.

கௌதம் அவளை விடுதிக் காப்பாளருக்கு அடையாளம் காட்டினான்.

"எத்தனையோ பேர்கள் அவங்களுக்கு வேண்டியவங்க, தொழில் தர முன் வந்தவங்கனு கூட்டிக்கிட்டுப் போறாங்க. நீங்களும் எழுதிக் கொடுங்க. உங்க கூட அனுப்பு வாங்க" என்று காப்பாளர் கூறியதும் அவன் உடனே ரம்யா தனக்கு என்ன உறவு என்று குறிப்பிட்டு, அவளைச் சிகிச்சைசெய்து மணக்க விரும்புவதாக எழுதிக் கொடுத்து விட்டு வந்தான்.

அதற்கு என்ன பதில் வந்திருக்கிறது என்று தெரிந்து கொள்ள ஒரு மாலையில் முகாமுக்கு வந்திருந்தான். இதன் நடுவே மருத்துவர்களுடன் தொடர்பு கொண்டு பேசியிருந்தான். ரம்யா கடத்தப்பட்டு மேலை நாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கிறாள் என்பது புரிந்தது. பெண்களை விற்கும் அடிமைத்தனம் என்று குமுறினான். அலுவலக அறையில் அவன் நுழைந்ததும் காப்பாளர் ஒட்டிய கவர் ஒன்றை அவனிடம் கொடுத்துவிட்டு வெளியே போனார்.

கவரைப் பிரித்தான். முத்து முத்தான தமிழ் எழுத்துக்கள்.

'வாழ்வை இழந்த பெண்ணுக்கு ஒரு வாழ்வைக் கொடுத்து உதவ முன் வரலாம். இது தவறில்லை. அந்தப் பெண்ணைக் காலம் முழுதும் வைத்து காப்பாற்றுகிறேன் என்று சொல்லும் இந்த மனுதாரர் மனமறிந்து கைப்பிடித்த பெண்ணுடன் வாழாமல் அவளைச் சேற்றில் எறிந்துவிட்டவர்என்பதை மனுதாரரைப் பற்றி விசாரிக்கும்பொழுது அறிய நேர்ந்தது. நன்கு உள்ள அப்பெண்ணுடன் வாழாதவர்—சறுக்கி விழுந்து அரைப் பைத்தியமாகி உள்ள ரம்யாவுடன் எப்படி வாழப் போகிறார் என்ற சந்தேகத்தை இவரின் மனு கிளப்புகிறது."

கையெழுத்தைப் பார்த்தான் கௌதம். கிறுக்கலாக இருந்தது. தன் அந்தரங்கத்தைப் பற்றி யார் சொல்லி இருப்பார்கள்?

**த**ன் வீட்டின் முன் நின்ற ஜீப்பைக் கண்டதும் களைப்பை விட்டு எழுந்து வந்தான் அந்த சீஃப் வெல்ஃபேர் அதிகாரி. அகதி முகாமின் பொறுப்பைக் கவனிக்க சில மாதங்களுக்காக ஸ்பெஷலாக நியமிக்கப்பட்டிருந்தான். கௌதம் வேகமாகப் படி ஏறியவன், அவளைக் கண்டதும் குனிந்து நின்றான்.

"சாரு...?"

"என்ன முடிவுக்கு வந்திருக்கிறீர்கள்?"

"சாரு, சாரு, நீ என் கூட வர விரும்பினால்..." தடுமாறினான் கௌதம்.

"சிறகு முளைக்காத பறவை துணையைத் தேடியபோது துணை கிடைக்கவில்லை. கடலையும், மலையையும் தாண்டித் துணிவுடன் பறக்கும் பறவைக்கு இனிமேல் துணை தேவையில்லை. மிஸ்டர் கௌதம். தங்கள் மனச் சஞ்சலம் இன்னும் போகவில்லை என்பது புரிகிறது. ரம்யாவை மணக்க அனுமதி கேட்டீர்கள். தங்கள் சுயரூபத்தைக் கிழித்ததும் சாருவைத் தேடி வருகிறீர்கள். ஆர்டர் போடுகிறேன். தாங்கள் விரும்பினால் ரம்யாவை அழைத்துப் போகலாம்."

சாரு பட்டென்று உள்ளே போய்விட்டாள்.

நகங்களில் விழும் புழுவெட்டு, சொத்தை, கால் நகங்களில் சிலருக்கு மண் புகுந்த உபாதை, உடையவர்களுக்கு குட்டையாக வளரும் காட்டாமணி செடியின் இலையை கிள்ளினால் பால் வரும். இந்தப்பாலை நகங்களின் மீது ஒரு நாளைக்கு 3 தடவை விதம் 3 நாள் போட்டால் நல்ல குணம் கிடைக்கும்.

குறிப்பு: காட்டாமணி செடியில் இரண்டு விதம் உள்ளது. உயரச்செடியின் பாலைக் கண்டிப்பாகப் போடக் கூடாது. -ஜெயா

குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

# நீங்கள் புட்டிப்பால் கொடுக்கும் அவசியம் நேரும்போது கவனமாய் இருங்கள்.

## கீழ்க்காணும் 5 முக்கியமான குறிப்புகளைப் பின்பற்றுங்கள்...

**1.** தொற்று கிருமிகளைத் தவிர்த்திடும் வகையில் பீடிங் பாட்டில், நிப்பிள், மற்றய பாத்திரங்கள் ஆகியவற்றை நன்கு சுத்தம் செய்து நீரிலிட்டுக் கொதிக்கச் செய்யவும். இல்லையெனில் பாலில் எளிதில் கிருமிகள் தோன்றிவிடும்.

**2.** நீரை பத்து நிமிடம் கொதிக்க வைத்து, உடல் வெப்பத்தைவிட சிறிது அதிகமாகவே ஆற வைத்த பின் பால் பவுடரைக் கலக்கவும்.

**3.** அதிக நீரை கலந்திடாதீர்கள், அதனால் சத்து குறைந்து விடலாம். டின்னின் மேல் கொடுத்துள்ள பால் புகட்டும் அட்டவணையைப் பின்பற்றவும்.

**4.** ஒவ்வொரு முறையும் குழந்தைக்குப் புதிதாக பாலைத் தயாரிக்கவும். மீந்துவிட்ட பாலை குழந்தைக்கு கொடுக்காதீர்கள், அதில் கிருமிகள் தோன்றி கெட்டுவிடுகிறது.

**5.** டின்னின் மேல் கொடுத்துள்ள எல்லா விதிமுறைகளையும் பின்பற்றவும். ஏதாவது சந்தேகம் இருப்பின் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.

## வாங்குவீர் க்ளாக்ஸோ சன்ஷைன்—நம்பகமான குழந்தைப் பாலுணவு

க்ளாக்ஸோ சன்ஷைன் சரிவிகித ரீதியில் சரியான அளவு புரதம், கொழுப்பு, கார்போஹைட்ரேட், வைட்டமின்கள், தாதுப்பொருட்கள், இரும்புச்சத்து போன்றவற்றைக் கொண்டது. இது சுகாதார முறையில் தயாரிக்கப்பட்டு, டின்னில் அடைக்கப் படுகிறது. குறிப்பாக குழந்தைகளின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்றது.




க்ளாக்ஸோ
—தாய்மார்களின் நம்பிக்கைக்குரியது.




CASGLS-IR-203 TAM

# முக வெட்டுக்கு ஏற்ற பொட்டு!

நாம் பொட்டு வைத்துக்கொள்வது என்பது சம்பிரதாயப்படி அழகுக்கு மட்டுமல்லாது திருமணமானவர்களுக்கு மங்கலச் சின்னமாகவும் அமைந்துள்ளது!. ஆனால் நம் முகத்துக்கு ஏதாவது ஒரு வகைப் பொட்டு மற்றவைகளை விட அழகாகவும் முகத்துக்கு ஏற்றவாறும்இருக்கும். இங்கு சில முகத் தோற்றத்துக்கு ஏற்ற பொட்டு வகைகளைக் காணலாம்.

(படம் 1) சதுர வடிவான நாடியமைப்பும் (Square cut Jaw) அகன்ற நெற்றியும் அகலமான பெரிய கண்களும் உடையவர்களுக்குப் பெரிய வட்டப் பொட்டு நன்றாக இருக்கும். அடர்த்தியான புருவங்கள் இருப்பதால் நெற்றியையும் முகத் தோற்றத்தையும் எடுப்பாகக் காட்டப் பெரிய வட்டப் பொட்டை இரு புருவத்துக்கும் சற்று மேலாக நடுவில் வைக்க வேண்டும். பொட்டின் மேல் நீள வாட்டில் விபூதி அணிந்து கொண்டால் நெற்றி சிறிது அகலக் குறைவாகத் தோற்றமளிக்கும்.

(படம் 2, 3) இந்த இரு படங்களிலும் வட்ட முகம் உடையவர்களைப் பார்க்கிறோம். இவர்களுடைய கூந்தல், மற்றும் நெற்றி, மூக்கு அமைப்பின் வேறுபாடுகளினால் இவர்களுக்குப் பொட்டும் மாறுபடுகிறது.



படம் 1



படம் 2



படம் 3



படம் 4



படம் 5

(படம் 2)– வட்ட முகமுடைய இவர் லேசாக உப்பிய கன்னங்களும் முகவாயும் உடையவர். பிறை போன்ற சிறிய நெற்றியும், சிறிதே எடுப்பான மூக்கும் வட்டமான கண்களையும் உடையவர். இவருக்குக் கூந்தல் அடர்த்தியாக அமைந்துள்ளது. மூக்கை எடுப்பாகவும் நெற்றியும் சிறிது அகலமாகவும் தோற்றமளிக்கச் சிறிய வட்டப் பொட்டு இரு புருவங்களுக்கும் நடுவில் வைத்துக்கொள்ள வேண்டும். இதனால் கண்களும் சற்று நீளமாகத் தோற்றமளிக்கும்.



படம் 6

(படம் 3)ல் இருப்பவரும் வட்ட முகமுடையவர். அதிக அடர்த்தியில்லாத கூந்தல் உடைய இவருக்குக் கண்கள் நீளமாகவும் நெற்றி அகலமாகவும் மூக்கு சிறியதாகவும் அமைந்துள்ளது. இவருக்கு நீளப் பொட்டு நன்றாகப் பொருந்தும். நீளப் பொட்டின் கீழ் வி போன்று பொட்டும் வைத்தால் மூக்கு எடுப்பாகத் தோன்றும். கண்கள் நீண்டு அழகாக இருப்பதால் நீளப் பொட்டு கண்களின் வடிவை மேலும் சுடர் விட்டுப் பிரகாசிக்கச் செய்யும். நெற்றி சிறிது அகலக் குறைவாகவும் முகம் சற்றே நீளமாகவும் தோற்றமளிக்கக் கோணல் வகிடு எடுத்துக் கூந்தலை ஒரு பக்கம் லேசாகத் தூக்கி 'பப்' என வாரி விட்டால் கூந்தலும் அடர்த்தியாகத் தோற்றமளிக்கும்.

(படம் 4) நீளமான முகமுடைய இவருக்கு கண்கள், நாடி எல்லாம் மிகவும் எடுப்பாக அமைந்துள்ளது. வகிடு எடுத்துக் கூந்தலை இரு பக்கமும் லூசாக விட்டால் முகம் மேலும் நீளமாகத் தோற்றமளிக்கும். நடுவில் பெரிய வட்டப் பொட்டு வைத்தால் இவருக்கு நன்றாக இருக்கும். முகம் சற்று ஓவலாகத் தோன்றும். புருவமும் வளைவாகக்



படம் 7

கீழ் நோக்கியே இருப்பதால் வட்டப் பொட்டைப் புருவங்களுக்கு நடுவில் கீழாக வைக்காமல் சற்று மேலாகத்தான் வைக்க வேண்டும்.

(படம் 5) இவருக்கு முகம் ஓவலாக கோழி முட்டை வடிவில் அமைந்திருக்கிறது. எடுப்பான மூக்கும் சிறிய நெற்றியும் உடைய இவருக்குச் சற்றே மேல் நோக்கிய பளீரென்ற கண்களும் வில் போன்ற புருவங்களும் அமைந்துள்ளன. கன்னங்கள் அதிகச் சதைப் பிடிப்பில்லாமல் இருக்கிறது. இவருக்கு மீடியம் அளவு வட்டப் பொட்டு இரு புருவங்களுக்கு சற்று மேலாகவைத்தால் முகத் தோற்றம் அழகாக இருக்கும். வகிடில்லாமல் வாரிக் கொண்டால் நெற்றி சற்று அகலமாகத் தோற்றமளிக்கும்.

(படம் 6): சிறிய முகம் உடைய இவர் கண்களில் கண்ணாடி அணிந்துள்ளார். எடுப்பான நாடியும் சிறிய நாடியும் உடைய இவருக்குக் கூந்தல் அதிக அடர்த்தியில்லை. முகம் சிறிதுபெரிதாகவும், 'பெர்சனாலிடி' யை சற்றுஅதிகமாகவும் காண்பிக்க இவர்கோணல் வகிடு எடுத்து ஒரு பக்கமாக வாரிக் கொள்ள வேண்டும். இதனால் இவர் முகம் சற்றுப் பெரிதாகத் தோன்றும். புருவங்களும் கீழ்நோக்கி வளைவாக இருப்பதால் பொட்டு நடு நெற்றியில் வைக்கவேண்டும். மீடியம் அளவு வட்டப் பொட்டு இவருக்கு அழகாக இருக்கும்.

(படம் 7): இவருக்கு முக அமைப்பு 'யு' போன்ற வடிவமுள்ளது. நேரான புருவங்களும், சற்றே கீழ் நோக்கிய கண்களும் உடைய இவருக்குக் கூந்தல் நேராகவும் அதிக அடர்த்தியில்லாமலும் அமைந்துள்ளது. இவர் முகம் சற்றுப் பளீரென்று தோற்றமளிக்க இரு புருவங்களுக்கும் மத்தியிலிருந்து நேராகத் திலகம் வைக்க வேண்டும். இதனால் இவரது முகத்திற்கு இளமையும் பொலிவும் அதிகரிக்கும்.

தொகுப்பு: சரஸ்வதி சுந்தரேசன்

## முளை கட்டிய கோதுமையின் மகிமை

வைட்டமின் ஏ, பி, சி, டி, ஈ, பி மட்டுமல்ல. கால்ஷியம், பாஸ்போரஸ், மக்னீஷியம், பொட்டாஷியம், சோடியம், சல்பர், குளோரின், கோபால்ட், சிலிகா அயோடின் முதலியவைகளும் முளைகட்டிய கோதுமையில் அடங்கியுள்ளன.

இரத்த சோகை, நரம்பு பலவீனம், சர்க்கரை வியாதி ஆரம்ப நிலை, இருதய நோய், சிறுநீரகக் கோளாறு, உடலில் நீர்தங்கிய வீக்கங்கள், எக்சிமாபோன்ற வியாதிகள் இவற்றுக்கு நல்ல மருந்து இது.

சரி கோதுமையை எப்படி முளைக் கட்டுவது? முதல் நாள் மாலையில் நீரில் ஊறவைத்து மறுநாள் காலை நீரை வடித்து ஒரு ஈர மஸ்லின் துணியில் கட்டித் தொங்க விடவும். அவ்வப்போது நீரை அதன் மேல் தெளித்து ஈரம் உலராமல்பார்த்துக் கொள்ளவும். மறுநாள் காலையில் நன்கு முளை வந்திருக்கும்.

இதை உரலிலோ, மிக்ஸியிலோ அரைத்து பால் கலந்தோ அல்லது மோர் சேர்த்தோ குறைந்த செலவில் சத்துள்ள பானம் பருகலாம்.

—சியாமளா தியாகராஜன்



திடீரென ஏற்படும் தீ சுட்ட புண், சூடான எண்ணெய் தெறித்தல் இவைகளுக்கு பர்னால்தான் வேண்டும் என்பதில்லை. பாக்கைத் தண்ணீர் விட்டு வெண்ணெய் போல் அரைத்து ஒரு பெரிய நெல்லிக்காய் அளவு எடுத்துக் கொள்ளவும். அதை 100 கி. தேங்காய் எண்ணெயில் கலக்கி ஒரு நாள் முழுதும் வெய்யிலில் வைக்கவும்.

மறுநாள் அடுப்பில் வைத்து சிறு தீயில் நீர் வற்றக் காய்ச்சி (கல்கம் மெழுகு போல் அடியில் தங்கும்) ஆற வைத்து பாட்டிலில் வைத்துக் கொண்டால் போதும். தீக்காயங்களுக்கு இதைப் பூசினால் உடனடியாக ஆறுவதுடன் தழும்பும் இருக்காது.

—எஸ். பட்டம்மா



# மங்கல மதிமுகத்தில் மெருகூட்ட

# ஐடெக்ஸ்

## டீலக்ஸ் குங்குமம்

## matt finish




**ஐடெக்ஸ்**
39 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்

அரவிந்த் லேபரட்டரீஸ்
சென்னை 600033

# நமது கலாசாரம்!

சேஷாத்ரிநாத சாஸ்திரிகள்

ஒளிமயமான வாழ்க்கையை விரும்பும் இளம் தம்பதிகள் ஒன்று சேர்ந்து அக்னி தேவனை ஆராதிப்பார்கள். ஒளி அவனது வடிவம். பிறருக்கு ஒளி வழங்குபவன். மங்காத ஒளிக்கு அவன் வழிபாடு சிறந்தது. மங்கள நாளில் உணவை (அக்ஷதையை) மனைவி அளவாகப் பகிர்ந்தளிக்க, கணவன் ஆதரவோடு அக்னிக்கு அளிக்கிறான். நமது உணவுக்கு உதவுகிறான். நாமும் அவனுக்கு உணவளிக்க வேண்டும். அதற்கு 'ஔபாஸனம்' (அக்னிக்கு உண வளித்தல்) என்று குறிப்பிடுவார்கள். ஔபாஸனப் பானையைப் பிடித்தவள் பாக்கியசாலி. பிற்காலத்தில் 'பானை பிடித்தவள் பாக்யசாலி' என்ற பழமொழிக்கு ஆதாரமாக அமைந்திருக்கலாம் இது.

உணவைப் பெற்றுக் கொண்டவன் ஒளியுடன் திகழ்வதைக் காண்கிறோம். அவன் அருகில் இருந்து கொண்டு அவனிடம் நமது எண்ணத்தை வெளியிட வேண்டும். அவனோடு நெருங்கி இருக்கையில் அவனது தன்மை (சூடு) நமது உடலிலும் பரவுவதை உணர்கிறோம். ஒளியின் பிரதிபலிப்பும் நமது வாழ்க்கையில் ஏற்படும்.

அசையாத ஈடுபாடு, மேதை, புகழ், சமயோசித புத்தி, கல்வி, செல்வம், உடல் வலிமை, நீண்ட ஆயுள், கவர்ச்சி, உடல்நலம் — இவைகளுக்கு அவனது வழிபாடு பயன்படுகிறது. (சிரத்தாம்.... ஹவ்யவாஹனை) என்பது பெரியோர்களின் வாக்கு. வாழ்க்கையில் தேவையானவைகள் அனைத்தும் இங்கு வேண்டிக் கொள்வதைக் கவனிக்க வேண்டும்.

வழிபாட்டில் சரிசமமான தம்பதிகளின் நடைமுறை, மாதர்களின் சம பங்கை உறுதிப்படுத்துகிறது.

'அக்ஷத' என்ற சம்ஸ்கிருதச் சொல்லுக்கு 'பாதிப்பு அற்றது' என்று பொருள். எந்த விதமான பாதிப்பும் அற்ற முழுப்பொருளைக் குறிக்கும் 'அக்ஷதை'. 'கெடுதலைச் சந்திக்காமல் வாழ்க்கையில் முழுமை பெற வேண்டும்' என்ற எண்ணத்துக்கு எடுத்துக் காட்டாக அமைந்திருக்கிறது அது. உறுத்தலை உண்டுபண்ணும் உமி, பற்றுதலோடு ஒட்டிக்கொண்டிருக்கும் தவிடு இவைகளை அறவே அகற்றி — சுத்த வெண்மையோடு திகழும் அக்ஷதை— 'அப்பழுக்கற்ற, தெளிந்த மனத்தோடு நிறைந்த வாழ்க்கையில் இருக்கும் நமது விருப்பத்தை' மறைமுகமாக வெளியிடுகிறது. துன்புறுத்தலுக்குக் காரணமானவைகளை உமிபோல் களை வேண்டும். விடாப் பிடியாக தவிடு போல் நம்மைப் பற்றிக் கொண்டிருக்கும் தேவையற்ற 'பற்றுதலை' — தேய்த்துக் களைய வேண்டும். நமது உள்ளும் புறமும் சுத்தமாக அமைய வேண்டும். ஊனமில்லாத வாழ்க்கை உயிர் பிரியும்வரை நீடித்திருக்க — அந்த நன்னாளில் அவன் வழிபாடு பயன்படுகிறது.

உணவின் தூய்மை உள்ளத் தூய்மைக்கு உரம். வாழ்க்கையும், சுற்றமும் தூய்மையும் பெற அதுவே காரணமாகிறது. (ஆஹார சுத்தௌ ஸத்வசுத்தி:) கலர் நூலால் அமைந்த சேலைக்குக் கலர் பூச்சு தேவைப்படுவதில்லை. தூய்மையானவர்களால் அமைந்த ஸமுதாயம், தூய்மையை வலியுறுத்தும். தனிமனிதனின் தூய்மையைக் கட்டாயப்படுத்தும் வேத கால அறிவுரைகளுக்கு எக்காலத்தும் சிறப்புக் குன்றாது. பாஷாண (கற்காலம்) யுகத்தில் இருந்து பண்பான யுகத்தை அடைவித்த துணைவன் அக்னி தேவன். அவனது துதிப் பாடலுடன் ஆரம்பமாகிறது உலகத்தின் முதல் ஒலியான 'ரிக்வேதம்' (அக்னி மீளே புரோஹிதம்) பானையில் வைத்துப் பெருமையோடு நம்மைக் காப்பாற்றுபவனை (அக்னியை) காப்பாற்றுவது நமது மரபு. நன்றியுணர்வு, நரம்போடு பிறந்த குலத்தில் உதித்தவர்கள் நாம். உணவு சமைத்து உதரத்தை வளர்த்துக் கொள்ள அவனைப் பயன்படுத்துகிறோம். பண்பை வளர்க்க உள்ளுணர்வைத் தூண்டுபவன் — அவன் — என்ற முனிவர்களது வார்த்தைக்குச் செவி சாய்க்க வேண்டும். நாகரிகமான நடைமுறை அவன் வழிபாடு என்பது தெளிவு.

வண்ண வண்ண அழைப்பிதழோடு இன்முகம் காட்டி இனிமையான சொற்களால் வரவேற்கிறோம். இருந்தும் மஞ்சள் கலந்த அக்ஷதையை அளித்த பிறகுதான் அழைப்பு முழுமை பெற்றதாக எண்ணுகிறோம்.

திறந்த உள்ளத்தோடு மகிழ்ச்சிகரமான முழு வரவேற்பு தங்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பதை 'அக்ஷதை' – முன்னறிவிப்பாகத் தெரிவிக்கிறது. பத்திரிகைகளும், வார்த்தைகளும் எண்ணத்தை வெளியிடுகின்றன. உள்ளத்தோடு அதன் தொடர்பை தென்னெனக் காட்டுகிறது 'அக்ஷதை' எனலாம்.

உலையில் கலந்த அரிசியைப் போடுவதற்கு முன்பு அக்னிக்குச் சிறு பங்கு அளிப்பது நமது மரபு. நாம் அங்கு விருந்தோம்பலுக்கு முந்திக்கொள்கிறோம் என்பது அதற்குப் பொருள். சமைத்த உணவை 'காகத்திற்கு' வைத்த பிறகு நாம் உணவருந்துகிறோம். ஆறறிவு அற்ற பிராணிகளுக்கும் முடிந்த அளவு உதவ முந்திக் கொள்ள வேண்டும், ஆறுவது அறிவைப் பெற்றவன். 'பசி' ஜீவராசிகளின் முதல் எதிரி என்பதை வேதம் ஞாபகப் படுத்துகிறது. (க்ஷுத் கலை மனுஷ்யஸ்ய ப்ராத்ருவ்ய:) தனது அறிவால் பசியை விரட்டிவிடுகிறான் மனிதன். அறிவற்ற பிராணிகளுக்கு உதவுவது நமது பண்பு.

அரிசி மாவில் கோலம் போடுவது அலங்காரமாக இருக்கிறது. சிறு ஜீவராசிகள் அதை உட்கொள்வதும் உண்டு. ஆசீர்வாதம் செய்யும்போது 'அக்ஷதை' போடுவதை மரபாக வைத்துக் கொண்டிருக்கிறோம். வாழ்த்துக்கள் முழுமை பெற்றதை 'அக்ஷதை' வாயிலாக வெளியிடுகிறோம்.

'பசி' வந்தால் 'பத்தும்' போய்விடும். பசியால் வாடுபவனிடத்தில் அறிவு புலன்கள் ஐந்தும், செயல் புலன்கள் ஐந்தும் செயல் அற்றுவிடுகிறது. புலனை ஸ்தம்பிக்க வைத்த எதிரியை விரட்ட வேண்டும். உடலுக்குள் இருக்கும் எதிரியைவிரட்ட உதரத்தில் இருக்கும் உணவு தாமதமானதால் நீறு பூத்த நெருப்பை (சூடு, பித்தம்) உணவு அளித்து உணர்த்த வேண்டும். ஜாடராக்னி சடுதியில் பசியை விரட்டி புலன்களை இயங்கச் செய்கிறது.

உடல் தத்துவம், உலகத் தத்துவம் – இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்பு உடையது. உடலியலில்அக்னியின் பங்கை உணர்ந்த முன்னோர்கள் உலக வாழ்க்கையிலும் அவன் பங்கைப் பெற அவசியத்தைக் காட்டி அவசரத்தையும் குறித்துத் தந்தார்கள்.

பஞ்ச பூதங்களால் உருப்பெற்று இயங்குகிறது உலகம். பஞ்ச பூத அம்சங்களின் உருவித கலவையில் உருப்பெற்றது உடல் என்கிறது ஆயுர்வேதம் (இதி பூதமயோதேஹ:) பஞ்ச பூதங்களில் நடு நாயகமாக விளங்குபவன் அக்னி. உடலிலிருக்கும் மற்ற 'பூதங்களுக்கு' செயல் திறன் அளிப்பவன். அவன் சாந்தமாக இருக்கும்போது மற்றவைகளும் அடங்கிவிடுகின்றன. உதரத்திலிருக்கும் அக்னியின் (சூடு, பித்தம்) அளவான வளர்ச்சி உடல் ஆரோக்கியத்துக்கு அடிப்படை என்பது ஆயுர்வேதத்தின் கணிப்பு. உணவால் அந்த அக்னியை அணையாமல் காப்பாற்றுவது போல் ஆரோக்கியத்தை வேண்டிக் கொண்டு பானையில் வைத்து அணையாமல் காப்பாற்றுவது உடலியலோடு உலக இயலின் பிணைப்பை சூசகமாகத் தெரிவிக்கிறது.

ஜீவராசிகளிடத்தில் தயையோடு பழக வேண்டும் என்பதை விளக்க 'பூத தயா' என்னும் தனிப் பகுதி தர்ம சாஸ்திர நூல்களில் ஒதுக்கப் பட்டிருக்கிறது.

வாழ்க்கையின் இன்பத்தைச் சுவைக்கத் தயாராக இருக்கும் இளம் தம்பதிகளின் உள்ளத்தில் 'பூத தயை' வேரூன்ற பூதங்களில் சிறந்த அக்னியிடம் பரிவோடு உபசரித்தலை வற்புறுத்தும் 'அக்னிக்கு உணவளித்தல்' நமது தனிப்பெரும் கலாசாரத்தின் மையம் என்று சொன்னால் மிகையாகாது.

சுடலையில் பயன்படுத்தத் தயாராக இருக்கும் உயிரற்ற உடலுக்கும் உணவளிக்க அக்ஷதையைப் பயன்படுத்துகிறோம். பகுத்தறிவு ஒத்துக்கொள்ளாது. பாதகமில்லை. உணவின் ஸாரத்தில் ஜீவன் உண்டாகிறது. அதன் சாரத்தில் வளர்ந்து ஓங்குகிறது. உணவோடு மடிந்து விடுகிறது – என்ற கருத்தை வலியுறுத்தும் உபநிடதத்தின் பிரதிபலிப்பாக நாம் கையாளுவதில் பொருள் உண்டு. (அன்னாத் பூதானி ஜாயந்தே. ஜாதானி அன்னேன வர்த்தந்தே. அத்யதே. அத்திச பூதானி)



மழலை மலர்:

தங்கப்பன் என்ற குடியானவன் அயராது உழைத்து வந்தான். அதன் பயனாக வசதியாக வாழ்ந்து வந்தான். அவன் பல கோழிகளை வளர்த்து வந்தான். ஒரு நல்ல ஜாதி நாய் தவிர மற்றும் ஒரு பசுவும் வைத்திருந்தான். கோழிகள், நாய், பசு இவையெல்லாம் நட்புடன் பழகி இவற்றுக்காக அமைக்கப்பட்டிருந்த கொட்டகையில் சேர்ந்து வாழ்ந்தன. இவைகளைத் தவிர கழுதை யொன்று சதா காலமும் அவ்வீட்டு

''சே! உதவாக்கரைக் கழுதை, மேய வந்து விட்டது!'' என்றன கோழிகள். ''நாமாவது அதிகாலையில் கூவி குடியானவனை எழுப்புகிறோம். முட்டைகள் இட்டு உதவுகிறோம். எந்த உபயோகமும் இல்லாத கழுதை வெட்கமில்லாமல் இங்கேயே மேய வருகிறது'' என்றன.

''ஆமாம். நீ சொல்வது சரிதான். இரவு முழுவதும் விழித்து வீட்டைக் காவல் காக்கிறேன் நான். குடியான

# துப்பற்ற கழுதை!



வாயிலில் மேய்ந்த வண்ணமிருந்தது. அந்தக் கழுதையைக் கண்டாலே இந்தப் பிராணிகளுக்கு வெறுப்பு. அதனை இளப்பமாகப் பேசி வெகுவாக அலட்சியப்படுத்தின.

அன்று வானம் இருண்டு கறுத்து. மேகங்கள் வானத்தில் சூழ்ந்துகொண்டு பலமாக மழை பெய்யப் போவதை உணர்த்தின. அன்றும் அந்தக் கழுதை வழக்கம்போலவே அங்கு மேய வந்தது. அதைக் கண்டதுமே இந்தப் பிராணிகளுக்கு எரிச்சல் மூண்டது.

ஜெயலட்சுமி ஸ்ரீதரன்

வனுக்குத் துணையாக எல்லா இடமும் செல்கிறேன். இந்தச் சோம்பேறிக் கழுதைக்கு அந்தத் துப்பு உண்டோ!'' என்றது நாய்.

''சரியாகச் சொன்னாய். குடியான வனின் குடும்பத்துக்கு ஆரோக்கிய மான பாலைக் கொடுக்கிறேன் நான். எதற்கும் உதவாமல் இப்படி மேய் கிறதே இந்தக் கழுதை!'' என்றது பசு.

இதையெல்லாம் கேட்டுக் கழுதை மனம் நொந்தது. அதன் கண்களில் நீர் திரண்டது. அப்போது சிறிதாகத் தூறல் விழத் தொடங்கிச் சற்று நேரத் திற்கெல்லாம் பலமான மழை பெய் யத் தொடங்கி விட்டது. வீட்டுப் பிராணிகளெல்லாம் கொட்டகைக்குச் சென்று ஒதுங்கின. கழுதை மட்டும் மழையில் நனைந்தவாறு நின்றிருந்தது. ''நன்றாக நனையட்டும்'' என்று கறுவின வீட்டுப் பிராணிகள்.

பளீரென மின்னல் வெட்டி இடி முழங்கி ஆவேசமாய்ப் பெய்தது மழை. அந்த வேகத்தைத் தாங்காத கொட் டகை சிதறிச் சின்னா பின்னமாகிவிட் டது. ஒண்ட இடமில்லாமல் வீட்டுப் பிராணிகள் இரவு முழுவதும் மழை யில் தவித்தன.

காலையில் மழை நின்றது. வெளியே வந்த குடியானவனும் அவன் மனைவி யும் கொட்டகை இடிந்து கிடப்பதை கண்டனர். ''அடடா, கொட்டகை நாசமாகி விட்டதே!'' என்றாள் தங்கப் பனின் மனைவி. ''ஆமாம். உடனே சீர்படுத்த வேண்டும்'' என்றான் தங் கப்பன்.

''இந்த முறை எப்படிப்பட்ட மழை யையும் தாங்குமாறு சுவரெழுப்பி, வலு வாகக் கொட்டகை அமையுங்கள்'' என் றாள் மனைவி.

''அது சரி. ஆனால் வயலுக்கு அந் தக் கோடியில்தான் கடை இருக்கிறது. வலுவான கொட்டகைக்கு வேண்டிய சாமான்களை அங்கிருந்து யார் சுமந்து வருவது?'' என்ற குடியானவன் யோச னையுடன் அங்கிருந்து அகன்றான்.

இந்தப் பேச்சைக் கேட்டுக் கொண் டிருந்த வீட்டுப் பிராணிகளும் யோச னையில் ஆழ்ந்தன.

''என்னால் எதையும் சுமக்க முடி-யாதே'' என்றது கோழி.

''எனக்கும் பளுவைத் தூக்கிப் பழக்கமில்லை'' என்றது பசு.

''என்னாலும்தான் முடியாது'' என் றது நாய்.

இவை பார்த்துக் கொண்டிருக்கும் போதே குடியானவன் அந்தக் கழுதையைத் தட் டிக் கொடுத்து அதற்குத் தீனியும் கொடுத்தான். பின்னர் அதனை அன்புடன் தடவி தன்னுடன் வெளி யில் அழைத்துச் சென்று விட்டான்.



இதனைப் பொறாமை யோடு கண்டு கொண் டிருந்த வீட்டுப் பிரா ணிகள் விஷயம் புரியாது விழித்தன. ஒரு மணி நேரம் சென்றது. அடடா, இதென்ன, தன் முதுகில் கொட்டகைக்கு வேண்டிய சாமான்களைச் சுமந்து கொண்டு ராஜ நடை நடந்து வந்து கொண்டிருந்தது கழுதை.

''கழுதைக்கு இவ்வளவு பலமா!'' அதிசயித்தன கோழிகள்.

''நல்ல உழைப்பாளிதான்'' என்றது நாய்.

''அநாயாசமாகச் சுமந்து வருகிறானே!'' பாராட்டியது பசு.

இவ்வாறு இரு முறை சிறிதும் அலுக்காமல் பொருட்களைச் சுமந்து வந்த கழுதையின் மதிப்பு பல மடங்கு உயர்ந்து விட்டது. வீட்டுப் பிராணிகள் வலியச் சென்று கழுதையிடம் நட்பு கொண்டன. எந்த ஜீவராசியும் துச்சமல்ல. அததற்கு ஏற்ப உபயோகங்கள் உண்டு என்பதை வீட்டுப் பிராணிகள் அன்று முதல் உணர்ந்து கொண்டன.

# மழலைக் குறும்பு!



ஒரு நாள் காயத்ரியின் விஷமம் தாங்க முடியாமல் அவளை அடித்துவிட்டேன். குழந்தை அழுதுகொண்டே ஓடிவந்து என்னைக் கட்டிக்கொள்ள நான் அவளைச் சமாதானப் படுத்த வெளியே வேடிக்கை காட்டி 'காயா.. அதோ காக்கா ஒக்காச்சி இருக்கு... பாத்தியா... குவ்வி (குருவி) ஒக்காச்சி மம்மு (சாதம்) சாப்பிடறது பாத்தியா என்றெல்லாம் சமாதானப்படுத்த அழுகையை நிறுத்த தலையை ஆட்டி ஆட்டி ரசிக்க ஆரம்பித்தாள்.

சில தினங்கள் கழித்து என் மூத்த மகள் தன் புத்தகத்தில் காயத்ரி கிறுக்கிவிட்டாள் என்று அவளை அடித்து விட நான் குழந்தையை ஏன் அடிக்கிறாய் என்று அவளை அதட்டி இரண்டு தட்டுத் தட்டினேன். உடன் பெரியவள் அழ ஆரம்பித்து விட்டாள். அப்போது சின்னவள் மெல்ல அவளருகில் சென்று அவள் கன்னத்தோடு கன்னம் வைத்துக் கொண்டு ஒரு கையால் அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டு மறு கையால் வெளியே சுட்டிக் காட்டி... ''இந்துத்தி (இந்துமதி) அடோ (அதோ) பார்... காக்கா பத்தியா... குவ்வி பத்தியா... மம்மு சாப்புது... பார்... அயாதே. கண்ணு...ச்சோ... ச்சோ'' என்று குஞ்சுக் கையால் அவள் கண்ணைத் துடைக்க முயன்றபோது அழுது கொண்டிருந்த என் பெரிய மகளும் சிரிப்பை அடக்க முடியாமல் சிரித்து விட்டாள். —லலிதா ரகுநாதன்

அதிமதுர பொடியையும் கசகசாவையும் (அதிமதுரம் பொடி 1 ஸ்பூன், கசகசா கால் ஸ்பூன்) கொஞ்சம் பால் விட்டு ஒரு மணி நேரம் ஊற வைத்து பிறகு மை போல் அரைத்து தலையில் தடவிக்கொண்டு அரை மணி நேரம் ஊறின பிறகு தலை குளித்தால் தலையில் இருக்கும் பொடுகு இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். பித்த நரைக்கும் இது நல்ல வைத்தியம்.

—தங்கம்மாள்

# ராசிபலன்

## ஆகஸ்டு '82

### மேஷம்



பல காரியங்களுக்காக உங்களைச் சுற்றிப் பலர் இயங்கி வருகிறார்கள். இவர்களால் உங்களுடைய நேரமும் பணமும் விரயமாகும் என்பதால் அவர்களை இனம் கண்டுகொண்டு விலகி இருப்பதே நல்லது. புதிய சிறு ஒப்பந்தங்களினால் பண வரவு உண்டாகும். பெண்களுக்கு லாபம் தரக்கூடிய மாதமாக இது இருக்கும். எழுத்தாளர்களுக்கு விருதுகளை எதிர்பார்க்கலாம்.

### ரிஷபம்



விருந்தாளிகள், வெளியூர்ப் பிரயாணம், குழந்தைகளினால் அலைச்சல் என்று இந்த மாதம் செலவினங்கள் அதிகமாக இருக்கும். லாபம் தரக்கூடியதாக இருந்தாலும் புதிய செயல்களில் இம்மாதம் இறங்காமல் இருப்பது நல்லது. விவசாயிகளைப் பொறுத்தவரை நல்ல பலன்கள் ஏற்படும். போக்குவரத்துத் தொழிலில் இருப்பவர்களுக்குப் புதிய சிநேகிதங்களும், அவர்களால் பலன்களும் உண்டு.

### மிதுனம்



உங்களுடைய திட்டங்கள் அருமையான வகையில் உருவாகி, நிறைவேறி வருவதைப் பார்க்க உங்களுக்கே ஆச்சரியமாக இருக்கும். மேலதிகாரிகளின் அன்பும் பரிவும் அதனால் காரிய சித்தியும் உங்களை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வரும். தெய்வ சம்பந்தமான காரியங்களை நிறைவேற்ற இது தகுந்த தருணம். வீட்டில் சுப நிகழ்ச்சிகளினால் மனைவி, மக்கள் உறவு சீர்படும்.

### கடகம்



நீண்ட நாட்களாகத் தடைப்பட்டு, வீட்டில் பிரச்னைகளை ஏற்படுத்திக் கொண்டு வந்த பிரச்னை இம்மாதத்தின் கடைசியில் முடிவுக்கு வந்துவிடும். உங்களுடைய துணிவும், நண்பர்களின் உறுதுணையுமே அதை முடிவுக்குக் கொண்டு வரும். வெளியூர்ப் பிரயாணங்களால் உங்கள் உடல், மனநிலை சீர்பட்டு புதிய வாழ்க்கைக்கு ஆயத்தமாவீர்கள். பண வரவும், செலவும் ஒன்றுக்கொன்று பொருந்திப் போய்விடும்.

### சிம்மம்



நீங்கள் நீண்ட நாட்களாக எதிர்பார்த்து வந்த கடன் மற்றும் பண வரவு இம்மாதம் கைகூடும். அரசாங்க, கோர்ட் விவகாரங்கள் உங்களுக்குச் சாதகமாகவே கைகூடும். அதனால் நீங்கள் திட்டமிட்டபடி புதிய முயற்சிகளில் இறங்கலாம். உறவினர்கள், நண்பர்கள் உதவி உங்களுடைய முன்னேற்றமான வாழ்க்கைக்குத் துணை புரியும். கணவன் – மனைவி உறவும் சீர்படுவதற்குப் பெரிதும் வாய்ப்புக்கள் உண்டு.

### கன்னி



அரசியல் சம்பந்தப்பட்டவர்களுக்கு இது ஒரு நல்ல மாதம். பொது மக்களிடையே புகழும் பெருமையும் பரவும். எதிர்பாராத விதமாக நல்ல பதவிகள் கிடைக்கலாம். வேலையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்கும் இம்மாதம் சாதகமாக அமையும். குடும்ப விவகாரங்களில் இருந்த

மனக் கசப்புக்களை வெளி விவகார உயர்வினால் சமாளிக்க இயலும். குழந்தைகளினால் பல குடும்பப் பிரச்னைகள் தீரும். பண வரவும் சுமுகமாகவே இருக்கும்.

**துலாம்**

விரக்தியும் வேதனையுமாக வாழ்க்கையில் வெறுப்புற்ற இருந்த நிலைமை மாறி தெய்வ பக்தியின்பால் மனத்தைத் திருப்புவது போல பல நிகழ்ச்சிகள் உண்டாகும். பெரிய மனிதர்களின் அறிமுகமும், புதிய நண்பர்களின் வரவாலும் புதியதொரு பாதை உங்களுக்காகத் திறந்திருக்கிறது. சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டால் நல்ல எதிர்காலம் உண்டு. விரோதிகளும் சுமுகமாக மாற வாய்ப்புண்டு.

**விருச்சிகம்**

வேலை மற்றும் அந்தரங்க வாழ்வில் ஏற்பட்டிருந்த பல பிரச்னைகள் இம்மாதம் தீரும். பதவி உயர்வு அல்லது வெளியூர்ப் பிரயாணத்தினால் உங்கள் அந்தஸ்து நல்ல நிலைமைக்கு உயரும். எப்பொழுதோ பத்திரப்படுத்தி வைத்திருந்த பல சேமிப்புக்கள் இப்பொழுது நன்றாக வளர்ந்து, பணப் புழக்கம் எளிதாக உதவும். சொத்து விவகாரங்களிலும் நீங்கள் எதிர்பார்த்த படியே முடியும்.

**தனுசு**

எதிர்பார்த்திருந்த விருந்தினர் அல்லது கடிதத்தின் மூலம் நல்ல செய்தி கிடைக்கும். பிரயாணங்களினால் நல்ல பலன்கள் உண்டாகும். ஆனால் உங்களுடைய பங்குதாரர் கவனக் குறைவால் அல்லது அலட்சியத்தால் செய்யும் தவறு உங்களை வெகுவாகப் பாதிக்கலாம். எனவே கவனமாக இருத்தல் நலம். குழந்தைகளினால் உங்களுடைய மன வேதனை அதிகரிக்கக் கூடும். உடல்நிலையைக் கவனமாகப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய நிலையில் இருக்கிறீர்கள்.

**மகரம்**

சொத்து மற்றும் பண விவகாரங்கள் மிகுந்த கெடுபிடியுடன் இருக்கும். அலைச்சலும் அதனால் சோர்வும் மன நிம்மதியின்மையும் உண்டாகலாம். எனவே முன்கூட்டியே திட்டமிட்டுச் செயல்படுவது நல்லது. வியாபாரத்தில் உள்ள எதிர்க் கூட்டத்தினால் நீங்கள் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். குடும்பத்தினரின் முழு ஒத்துழைப்பும் தெய்வ நம்பிக்கையும் உங்களுடைய பிரச்னைகளைத் தீர்த்து மேல் நிலைக்குக் கொண்டுவந்து விடும்.

**கும்பம்**

நீங்கள் எதிர்பார்த்தபடி உங்களுடைய குழந்தைகளின் வாழ்க்கை அமைந்துவிடும். எனவே இதுநாள்வரை தடைப்பட்டிருந்த உங்களுடைய அன்றாட அலுவல்கள் இனித் தடையின்றி நடைபெற வாய்ப்புக்கள் அதிகம். உறவினர்களின் சுமுகமான அன்பால் சுப காரியங்கள் இனிதே முடிவடையும். உங்களுடைய தன்னம்பிக்கையும், விடாமுயற்சியும் நீங்கள் திட்டமிட்ட காரியங்களைச் செவ்வனே முடிக்க உதவும்.

**மீனம்**

உங்களுடன் பணிபுரிபவர்களின் பொறாமை, எரிச்சலின்காரணமாக முன்னேற்றப் பாதையில் சிறு தடங்கல்கள் உண்டாகும். எனினும் உங்களுடைய திறமையும், வாக்கு சாதுர்யமும் அவற்றை வென்றுவிடும். மேல் பதவியோ, வெளி நாட்டுப் பிரயாணமோ விரைவில் ஏற்படவிருக்கிறது. அதிக வாக்கு வாதங்களில் ஈடுபடாமல் உங்கள் கடமையே கண்ணாக இருப்பது நல்லது. பண வரவு தட்டுப்பாடு இல்லாமல் தாராளமாக இருக்கும்.

# செந்தமிழ் நாடெனும் போதினிலே...



## இன்ப நரசுஸ் மணம் வீசுது நாசியிலே!

ஜீவனுள்ள ஒரே காபி!

**நரசுஸ்**

"தெர்மலோ" காபி!

**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636007.
கிளைகள்: தமிழகமெங்கும்.

ADWAVE/NCC/1977

நீங்கள் வாங்கும் துணியில் இருக்கும் டிசைன்கள் பல விதங்களில் இருக்கும். பெரியது, சிறியது, நடுத்தரம், 'பளிச்' என்று கண்ணைக் கவரும் வகை... இப்படிப் பல விதங்கள். ஆனால் நீங்கள் தேர்ந்தெடுக்கும் புடவை உங்களுடைய உடல் வாகை, பர்ச னாலிடியைச் சிறப்புறக் காட்ட வேண்டும். அது துணியின் தன்மை, தரம் (Texture) கலர், அணியும் காலம் இவற்றைப் பொருத்தே சிறப்பாக அமையும்.

## நினைவில் கொள்ள வேண்டியவை

(1) சாதாரணமாக டிசைன் இல்லாத பிளேன்புடவையை விட, டிசைன்கள் போட்ட புடவை, அணிபவர்களின் உடல் வாகைப் பெருக்கிக் காட்டும்.

(2) மீடியம் சைஸ் டிசைன்கள், பொருந் திப்போகும் கலரும் இருந்தால் அது அநேக மாக எப்படிப்பட்ட உடல்வாகு உடையவர் களுக்கும் பொருந்தி விடுகிறது.

(3) 'பிரைட்' கலரும் 'லைட்' கலரும், சேர்ந்து இருந்தால் (உ-ம்: கறுப்பும், லைட் நீலமும்) அது அணிபவர்களின் உருவத்தைப் பெருக்கிக் காட்டும்.

(4) டார்க் கலரும், முழுவதும் டிசைன் போட்டும் இருந்தால் அது உடல் வாகைக் குறுக்கிக் காட்டும்.

இது கலர், டிசைன்களின் பொதுவான தன்மை. இனி இவற்றைத் தனித் தனி யாகப் பார்க்கலாம்.

## துணிகளின் தரம் (Texture)

இரு ஒரு துணியின் குணாதிசயங்களைக் காட்டும். நூல், நெய்தல், அதில் கலக்கப் படும் கெமிக்கல்கள் இவற்றைப் பொருத்தே துணியின் தன்மை அமைகிறது. கெட்டியாக, சமமாக, நூலாக, விறைப்பாக எனப் பல வகைகளில் துணிகள் அமையும். துணிகளின் எடையும், அதனுடைய குணாதிசயங்களில் ஒன்றுதான். ஒரு பெண் எந்த வகைத் துணியை அணிந்திருக்கிறாள் என்பதிலிருந்து அவளுடைய பர்சனாலிட்டியைக் கணிக்க முடிகிறது. எனவே உடல் வாகிற்கு ஏற்ப துணிகளின் தன்மையையும் தேர்ந்தெடுக்க வேண்டும்.



(1) மிகவும் விறைப்பான (2) மிகவும் ம்ருதுவான துணிகள் அணிந்தவர்களைக் குண்டாகக் காட்டும். எனவே ஒல்லியான நடுத்தரமான உடல்வாகும் உயரம் அதிக மாகவும் உள்ளவர்களுக்கு இந்த வகைப் புடைவகள் பொருத்தமாக இருக்கும்.

(2) மிருதுவான துணிகள் பளபளப்பாக இல்லாதவரை அது அணிபவரின் தோற்றத் தைக் கெடுக்காது. எனவே அழகிய உடல் வாகு உள்ளவர்கள் மிருதுவான துணியை அணிந்தால் எடுப்பாக இருக்கும். ஓரளவு பளபளப்பான துணிகள் மிகவும் ஒல்லியாக இருப்பவர்களுக்குச் சரியாகும்.

(3) ஓரளவு அழகிய வளைவு நெளிவான உடல் வாகு இல்லாதவர்கள் கஞ்சி போட்டு விறைப்பாக உள்ள புடவைகளை அணியலாம். ஏனெனில் அந்த விறைப்பு உடல்வாகில் உள்ள குறைகளை மறைத்து விடும். ஆனால் கவனமிருக்கட்டும், ரொம்பவும் விறைப்பாக இருந்தால் அது குண்டாக ஆளைக் காட்டும்.

(4) ஆர்கண்டி துணிகள் ஒரு மாறுபட்ட தோற்றத்தைக் காட்டும். எனவே குண் டாக அதே சமயம் நல்ல தோற்றம் உடைய வர்கள் இந்த வகைத் துணிகளைத் தேர்ந் தெடுக்கலாம்.

## வண்ணங்கள் கூறும் உண்மை

நீங்கள் தேர்ந்தெடுக்கும் அல்லது அணிந் திருக்கும் வண்ணத்தைக் கொண்டே உங்கள் குணாதிசயத்தைக் கூறிவிடலாம். ஏனெனில் வண்ணங்கள் மூலமாக நாம் பல அபிப்பி ராயங்களை உருவாக்கலாம். மிகவும் காடி கலர் பொதுவாக இன்றைய உலகில் மறுக் கப்படுகின்றன. கண்ணுக்குக் குளிர்ச்சி யான வண்ணங்கள் மனதுக்கும் இதம் தருகின்றன.

இன்றைய பெண்கள் வெளி உலகில் அதி கம் நடமாட வேண்டியவர்கள். எனவே நீங்கள் அணியும் புடவையின் வண்ணம் அனைவரின் கண்களுக்கும் குளிர்ச்சியாக இருக்க வேண்டுமே தவிர, உறுத்தக் கூடிய தாக இருக்கக் கூடாது.

நூற்றுக் கணக்கில் வண்ணங்கள் இருந் தாலும் எல்லாவற்றுக்கும் அடிப்படை வண்

ணங்கள் மூன்றுதான். (1) சிவப்பு (2) மஞ்சள் (3) நீலம். இவை மூன்றுமே மற்ற எல்லா வண்ணங்கள் பிறக்கவும் காரணமாகின்றன. இவற்றுள் சமமான அளவுடன் இரண்டிரண்டு வண்ணங்களைக் கலந்தால் நமக்குப் பரிச்சயமான மேலும் மூன்று வண்ணங்களைப் பெறலாம்.

மஞ்சள் + நீலம் — பச்சை
நீலம் + சிவப்பு — வயலட்
சிவப்பு + மஞ்சள் — ஆரஞ்சு

இப்படியே வெவ்வேறு அளவில் கலந்து கொண்டே ஏராளமான வண்ணங்களைப் பெறலாம்.

இவற்றுள் கருப்பும் வெண்மையும் வண்ணங்களில் சேர்ந்து பலவித ஜாலங்களைப் புரிகின்றன. கறுப்பு வண்ணம் மற்ற கலர்களில் இணையும்போது அவற்றைப் 'பளிச்' சென்று எடுத்துக் காட்டுகிறது. அதுவே வெண்மை நிறம் சேர்ந்தால் மற்றவற்றின் எடுப்பைக் கொஞ்சம் குறைத்து 'டல்' கலராக ஆக்கிவிடுகிறது.

அதே போல நீலத்தைக் குளிர்ச்சியான வண்ணம் என்றும், ஆரஞ்சைச் சூடான (warm) வண்ணம் என்றும் கூறுவார்கள். எனவே நீலமோ (அ) ஆரஞ்சோ மற்றவற்றுடன் இணையும்போது அதனதன் தன்மையை, குணத்தை அணிபவர்களுக்கு ஏற்றுகிறது.

(1) உயரமும் ஒல்லியும் உடையவர்களுக்கு நல்ல நிறமும் இருந்தால் இவர்கள் பளீரென்ற வண்ணங்களை அணியலாம். இவற்றுள் எதிரும் புதிருமான வண்ணங்களும் இவர்களுக்கு எடுப்பாக இருக்கும். (1) சிவப்பு ஆரஞ்சு, மஞ்சள், (2) சிவப்பு பச்சை, (3) மஞ்சள் வயலட், (4) கறுப்பு, வெள்ளை (5) நீலம், ஆரஞ்சு.

(2) உயரமும் குண்டும் உடைய உடல்வாகு உள்ளவர்கள் மிதமான வண்ணங்களை அணியலாம். சிவப்பு ஆரஞ்சு, மஞ்சள் ஆரஞ்சு, 'கிரே', மஞ்சள், நீலம் பச்சை நீலம், வயலட் போன்றவை பொருந்தியிருக்கும்.

(3) குட்டையும் ஒல்லியுமான உடல்வாகு உடையவர்கள் ஒரே குரூப் வண்ண ஆடைகள் அணியலாம். (1) நீலம்—லைட் நீலம், அழுத்தமான நீலம்; (2) சிவப்பு, பிங்க், மிதமான நீலம்.

குள்ளமாகவும் குண்டாகவும் இருப்பவர்கள் மிதமான ஒரே வண்ணப்புடவையே அணிய வேண்டும். சாம்பல் வண்ணம் போன்றவை உடல் வாகின் குறைபாட்டை மறைக்கும்.

### புடவை அணியும் வேளை

பகல் வேளை, இரவு வேளை கூட அணியும் புடவையின் பொருத்தத்தை மாற்றியமைக்கும். எனவே நாம் எப்படிப்பட்ட இடத்துக்குப் போகிறோம், அங்கு எப்படிப்பட்ட ஒளி இருக்கிறது என்பதைப் பொறுத்தும் நாம் அணியும்வண்ணங்களின் புடவையின் வண்ணங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். மிகுந்த அல்ட்ரா வயலட் போன்ற விளக்கு இருக்கும் இடங்களில் 'பளிச்'சென்ற வண்ணத்தை அணிந்தால் அதை ஆழ்ந்த வண்ணமாகக் காட்டும். பகல் வேளைகளில் .சில கலர்கள் பொருத்தமாக இருக்கும்.

(உம்) சிவப்பு உடல் வர்ணமும், பார்டர் நீலமும் உடைய புடவைக்கு பகல் வேளையில் சிவப்பு ரவிக்கை எடுப்பாக இருக்கும். மாலை வேளையில் நீல வண்ண ரவிக்கை கண்ணுக்கு இதமாக இருக்கும்.

வண்ணங்கள் செய்யும் ஜாலங்களைப் புரிந்துகொண்டு, அவற்றை உங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

அட்டையில்: **ஆதர்ஷ வித்யாலயா**
**பிளஸ் டூ மாணவிகள்**
வண்ணப் படம்: **பி. எ. ரமணன்**

---

**இம்மாத இல்லத்தரசி போட்டி**

பொருள் : பூசணி

முடிவு தேதி : 15 - 8 - 82

**சமையல் கூபன்**

............. என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

ஒரு கூபனுக்கு ஒரு சமையல் குறிப்பே அனுப்ப வேண்டும்.

டௌன் பஸ்ஸின் ஜன்னல் ஓர சீட்டில் உட்கார்ந்திருந்த ஸ்ரீதரனின் மனதில் வெளியே தென்பட்ட காட்சிகள் எதுவும் பதியவே இல்லை. அவன் மூளை முழுக்கக் கொதித்துக் கொண்டிருந்தது.

வடக்கே பம்பாயின் சந்தடியிலும் இரைச்சலிலும் இயந்திரமாக வருஷங்களைக் கழித்திருந்தவன் தென் பிராந்தியத்துக்கு மாற்றியவுடன் எவ்வளவு ஆர்வமும் பாசமும் பொங்க ஓடிவந்து வேலையில் சேர்ந்தான் தாய் மாநிலம் என்று! அப்போதைக்கு யார்மூலமோ ஒரு வீட்டைத் தாற்காலிகமாக ஏற்பாடு செய்து கொண்டு மறு வாரமே லலிதாவை அழைத்து வந்தான். அப்போதே அவளுக்கு எட்டு மாதம். ஆயிரம் அசௌகரியங்கள் கொண்ட அந்த வீட்டில் ஐந்து வயது பாபுவையும் நிறை மாத லலிதாவையும் அந்த அறிமுகமில்லாத சூழ்நிலையில் விட்டு விட்டு அலுவலக சூழ்நிலை பழகாத வாரங்களில் வேறு வீடும் தேடினான். ஒன்றும் அமையவில்லை.

லல்லியின் வீட்டிலிருந்து இங்கு யாரும் உதவிக்கு வந்து தங்க முடியாது. ஆகவே அவளையும் குழந்தை பாபுவையும் அவள் தந்தை ஊருக்கு அனுப்பினான்.

கடைசியில் அவன்பார்த்த வீடு பெரியது தான்.



ஆனால் பெரிய வீட்டின் ஒரு பகுதியாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது. அவன் போன போது மாலை மயங்கும் நேரம். தரகனும் வீட்டுக்காரரும் சேர்ந்து பக்கத்துப் பெட்டிக் கடையில் வாங்கி வந்த மெழுகுவர்த்தியின் ஒளியில் உட்புறத்தைக் காட்டினார்கள். மின் விளக்கு வசதியிருந்தும் பல்புகள் இல்லாத தால் வெளிச்சம் இல்லை. மெயின் ஹாலின் ஒரு ஓரமாய் உள்ளே நடுப் பகுதி செல்லும் வழி தவிர இன்னொரு நிலைக் கதவு. அதைத் திறந்தால் ஒரு சதுரமான சிறு அறை-அதன் வெளிச் சுவரின் உயரே முக்கால் அடி இடை வெளி ஒரு பொக்கையாக....

வீட்டுக்காரர் கூறினார். ''கட்டறப்ப சொந்தத்துக்குன்னுதான் கட்டினதாலே ஒரே ஒரு பாத் ரூம் பிளஷவுட் மட்டும் போட்டேன். லோன் கைக்கு வர்ற முந்தியே கையிலே இருந்த சேமிப்பெல்லாம் இது முழுங்கிட்டது. லோன் வந்ததும் போன எடம் தெரியாமப் பயங்கரச் செலவு. குடி வைக்காம முடியாதுன்னு இந்தப் போர்ஷன் தடுத்து அடிஷனலா இன்னொரு பாத் ரூம் பிளஷவுட் போட ஏற்பாடு செஞ்சேன். கார்ப்பரேஷன் அனுமதி கிடைச்சவுடனே இந்தா பாருங்க... பேஸின்கூட....'' என்று அந்தச் சிறு அறை மூலையில் சார்த்தியிருந்த பீங்கான் கழிவறைக் கலத்தைக் காண் பித்தார்.

உடன் வந்திருந்த தரகன் தனியே கூட்டிப் போய் விளக்கினார். ''மனுஷனுக்கு இப்போ ஏகப்பட்ட செலவு. இந்தச் சில்லறை வேலைங் களுக்குக் கூட உங்க கிட்டே இருந்து அட் வான்ஸ் வாங்கி....''

''அட்வான்ஸ் எத்தனை மாச வாடகை?'' ஸ்ரீதரன் கவலை கனக்கும் மெல்லிய குரலில் வினவினான்.

''இந்த வீட்டுக்கு ஏகப்பட்ட போட்டி. கடைக்காரங்க வந்து மொய்க்கிறாங்க, ஒரு வருஷ வாடகை தரேன்னு. ஆனா குடியும் குடித்தனமா நல்ல மனுஷனா வேணும்னு அவர் விரும்பறதாலே பத்து மாச வாடகையானும்....''

ஸ்ரீதரனுக்கு 'பகீர்' என்றது. வாடகை இருநூற்று எண்பது என்றால் இப்போது அட் வான்ஸ் இரண்டாயிரத்து எண்ணூறா? தரக னுக்குக் கமிஷன் வேறு.

ஸ்ரீதரன் யோசனையுடன் முகவாயைத் தடவினான்.

''சந்தர்ப்பத்தை விட்டுடாதிங்க... ஒங்க அவசரத்துக்கு இது அமையறது அதிர்ஷ்டம். அதிகம் போனால் பத்துப் பன்னிரண்டு நாளில் கட்டித் தந்துருவாரு பாத்ரூமை'' என்றான் தரகன்.

அட்வான்ஸ் தந்து அந்த வீட்டுச் சாமான் களை இங்கு மாற்றினான். மாற்றிய விவரம் மட்டும் லல்லிக்கு எழுதினான். ரங்கையாவும் மின் விளக்குகளில் ஒன்றிரண்டை பொருத்தியிருந்தார்.

அவன் வீடு பார்க்க வந்தபோது லைட்கள் எரியாததற்கு முன்னால் குடியிருந்து காலி பண்ணியவர்களை வசை பாடினார் ரங்கையா. பல்ப்கள், ப்யூஸ்கள், அவற்றின் பொருந்து கட்டைகள்என்றுஎல்லா வற்றையும் அவர்கள் தான் கழற்றிக் கொண்டு போய்விட்டனர் என்று. வந்த பிறகு பல குறைபாடுகள் தெரியத் தொடங்கின. ஜன்னல் கதவுகள் எல்லாம் ஒற்றைக் கீலில் பைசா நகரத்துக் கோபுரங்கள் போலச் சாய்ந்து கொண்டு நின்றன.

குழாயில் இளநீர் போல-ஜலம் காலையில் நாலு மணி நேரம், மாலையில் இரண்டு மணி நேரம் கொட்டோ கொட்டென்றுகொட்டும் என்றார். ஆனால் மறு பகுதியில் கொட்டும் குழாயை மூடினால்தான் இவர்களுக்குக் குழாயில் தண்ணீர் சொட்டுச் சொட்டாய் விழ யோசனை செய்தது. அந்தப் போர்ஷ னில் மனித எண்ணிக்கை அதிகம்.

> மோரோ தயிரோ, இல்லா விட்டால், புளியைக் கொஞ்சம் கெட்டியாக கரைத்துக் கொண்டு அதில் உப்பு சேர்த்து, மிளகாய்களை ஊறவைத்துகாயவைக்கலாம் மோர்மிளகாயை விட இவை ரொம்ப ருசியாக இருக்கும்.
>
> -லலிதா

இவர்கள் எல்லோரும் குளித்து முழுகிச் சமைத்து. இரண்டு வேளையும் கடை கடை யாய்ப் பாத்திரம் பரத்தி விளக்கிக் கழுவி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு லாண்டரித் துணிகளை ஸர்ஃபில் நனைத்துத் துவைத்து அலசி உலர்த்தி இவர்கள் குழாயை மூடு வது என்பது.... ஸ்ரீதரன் தன் வாயை மூடிக் கொண்டான்.

பிளஷ் அவுட் பிராப்ளம் சொல்ல வேண் டாம். இவன் அங்கே போனால் அவர்கள் பார்வை இவனைப் பொசுக்கி விரட்டியது. வீட்டுக்காரர் குடியிருந்த இடத்துக்கு இவன் போய் முறையிடப் போனதில் அவர் வீட் டில் இல்லை. பெரியவர்களும் யாரும் இல்லை. சிறு குழந்தைகளிடம் ஒரளவு விவரம் கூறி விட்டு வந்தான்.

கடைசியில் லல்லி குழந்தையும் கையு மாய் ஒரு வாரத்தில் வரவிருந்தபோது அவன் ரங்கையாவைத் தேடிப் போனான். ரெண்டு நாளில் வேலை துவக்கஏற்பாடுசெய்து

விட்டதாயும் பெட்டிகளை யெல்லாம் நகர்த்தி வைத்து இடத்தை ரெடி செய்யும்படியும் ரங்கையா ஆயிரம் சத்திய வாக்கு தந்து அவனை அனுப்பினார். ஆனால் இருபத்தைந்து நாள்வரை ஆளே தென்படவில்லை. அவனுக்கு 'சீ' என்று வந்தது. மேலும் வர வர இவன் போனால் அந்த வீட்டுக் குழந்தைகள் கூட இவனை லட்சியம் செய்வதில்லை. வீட்டுக்குள் வரவிடுவது கூட இல்லை, வாசலிலேயே மணிக் கணக்காய் நிறுத்தி வைத்து இவனுடைய கேள்விகளுக்குப் பதில் கூறாமல் அவமானப்படுத்தி அவன் நெஞ்சை எரிய வைத்தனர்.

பாவம்! லல்லி பாடுதான் திண்டாட்டம். வீட்டுக்குள் பாத்திரம் துலக்க முடியாது. காலையும் மாலையும் பின்புறம் பக்கக் குடும்ப ஆக்ரமிப்பு. ஆகவே உச்சி பிளக்கும் வெயிலில்பின்புறம் போய் பாத்திரம் விளக்கினாள். பக்க வீட்டு மனிதர்களிடம் மன்றாடிக் குழாயை மூடச் சொல்லி அவள் பிடிக்கும் நீர் குழந்தையின் அழுக்குத் துணிகளைத் தாராளமாய் அலசக் கூடப் பற்றவில்லை. லல்லிக்கு உதவுவதற்கு இரக்கமோ அல்லது உழைக்கும் ஆர்வமோ இல்லாமல் இல்லை. விடுமுறை நாட்களில்போனால் லேடீஸ் ஹாஸ்டலை நினைவுபடுத்துவது போல் உள் பாவாடைக்கு மேல் ஒப்புக்குச் சுற்றிக் கொண்ட பழைய சிறு துணியும் தூக்கிக் கட்டிய எண்ணெய் தடவிய கொண்டையுமாய் பெண்கள் நாள் முழுவதும் நடமாடும் சூழலில் அவன் நிற்கவே கூசினான்.

இந்தச் சமயத்தில் ஸ்ரீதரனுடன் பணி புரியும் ராஜனைத் திருச்சிக்கு மாற்றினார்கள்.

காதும் காதும் வைத்த மாதிரி அவன் குடியிருந்த வீட்டை இவனுக்கு வீட்டுக்காரரிடம் கூறி வாங்கித் தருகிறேன் என்றான். அலுவலகத்துக்குச் சமீபம். ஆகவே ஸ்ரீதரனும் அதற்கு ஒப்பினான்.

கூட்டிக் கழித்து ஆலோசனை செய்து கொண்டிருக்க நேரமில்லை. லல்லியுடன் அவசரமாய்க் கலந்து கொண்டு அட்வான்ஸ் தரும் நிலை. ஊடே ஒரு தடவை ரெங்கையாவின் வீடு தேடிப் போனான். வழக்கம் போல் அவர் வீட்டில் இல்லை. பின்னிட்டு ஏதேனும் பேச்சு வரும் என்று கடிதம்மூலம் அவருக்குத் தெரியப்படுத்திவிட்டுப் புது வீட்டுக்கு அட்வான்ஸ் தர ஏற்பாடு செய்தான். இப்போது அவனுக்கு அவசரமாய் ஆயிரத்து ஐநூறு ரூபாய் வேண்டும். அவனுடைய பத்து வருஷ பம்பாய் வாழ்வு அவனால் எடுக்க முடிந்த லோன்களை யெல்லாம் விழுங்கி விட்டது. பிடிப்புத் தொகைகள் எல்லாம் போக இப்போது கைக்கு வருவது அரை வாசியை ஒட்டியதுதான். என்ன செய்வது?

லல்லியின் கழுத்து மாங்கல்யத்தை மஞ்சள் கயிற்றில் கோர்த்து அணிவித்துவிட்டு அவளுடைய ஒரே ஒரு கழுத்து நகையான தாலிக் கொடியை பேங்கில் வைத்துப் பணம் வாங்கிச் சமாளித்தான்.

அதன் பிறகுதான் அவஸ்தை துவங்கியது. அவன் வாடகைக் கணக்குத் தீர்க்கப் போனபோதெல்லாம் ரங்கையா விலாங்கு மீனாய் கண்ணிலே தென்படாமல் தப்பினார்.

தண்ணீர் பிளஷ் அவுட்டின் உபத்திரவம் தாளாமல் புது வீட்டுக்குப் போனார்கள். பழைய வீட்டை என்ன செய்வது? பணம் கணக்குத் தீர்ந்து தேங்கி நிற்கும் அட்வான்ஸ் மீதியை வாங்காமல் சாவியை எப்படித் தருவது? யாரிடம் தருவது?

ஒரு வழியாகப் பதினைந்து நாட்கள் சென்று மூன்றும் முறையாய் அவன் போனபோது ரங்கையா வீட்டில் இருந்தான். அன்றுவரை ஐம்பத்து ஆறு நாள் வாடகை ஐநூற்றுச் சொச்சம் போக மீதியைக் கேட்டான் ஸ்ரீதரன்.

ஆனால் ரங்கையாவின் கணக்கு வேறு மாதிரி இருந்தது. சம்பந்தமே இல்லாத மாதங்களுக்கு என்று உண்டான எலக்ட்ரிக் பில் இன்னும் என்னென்னமோ கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய்க்குக் கணக்குக் காட்டினார். மீதியும் மெதுவாகத்தான் தருவாராம். சாவி தராவிட்டால் வாடகை மாதா மாதம் சேருமாம்.

அன்று முதல் இதோடு பதினாறு மாதங்களாகி விட்டன. கிட்டத்தட்ட இரண்டாயிரம் ரூபாய் (ஸ்ரீதரன் கணக்குப்படி) இன்னும் வரவில்லை. ஒவ்வொரு தடவையும் நாலைந்து ரூபாய் செலவுடன் இவன் போய் விட்டு வெறும் கையுடன் திரும்புகிறான். இது ஏழாவது தடவையோ எட்டாவது தடவையோ....

ஸ்ரீதரனுக்குக் கொதித்துக் கொதித்துக் கண்களில் நீர் கொப்பளித்துக் கண்களை மறைத்தது.

**வழவழப்பாகவும் பெரியதாகவும் உள்ள ஒரு பாத்திரத்தில் மேலிருந்து நாலு அல்லது ஐந்து அங்குலம் விட்டு பாத்திரம் பூராகத் தண்ணீர் ஊற்றி நிரப்பி அதன் மேல் தவிட்டை தூவி எலிகள் நடமாடும் இடத்தில் வையுங்கள் தவிட்டைத் தின்ன வரும் எலிகள் தண்ணீரில் விழுந்து இறந்து போகும்.**

**அது தண்ணீரில் தவிப்பதைப் பார்க்கக் கஷ்டமாக இருந்தால் வெளியில் விட்டு விடலாம்.**

**-தி. பாரதி**

அப்போதுதான் அவன் தான் பஸ்ஸில் சென்று கொண்டிருக்கும் சூழ்நிலையை உணர்ந்து கர்சிப்பை உருவி முகத்தைத் துடைத்தபோது பஸ் ஏதோபெரிய பள்ளத்தில் இறங்கி ஏறியது. அந்த உலுக்கலில் ஸ்ரீதரன் முழுப் பிரக்ஞையையும் அடைந்தான்.

இது என்ன வழி? இது எந்த இடம்? அறிமுகமே இல்லாத சுற்றுப்புறம்! சரியான ரோடும் இல்லாத குண்டும் குழியும் சேறும் சகதியுமாய்....

பஸ்ஸில் யாரோ பேசினார்கள். 'மெயின் ரூட்டிலே ஏதோ பெரிய மரம் ஒரு லாரி மேலே சாய்ஞ்சு கிடக்காம். அதை அப்புறப்படுத்தாமே அந்த வழி உபயோகமில்லேன்னு ஏதோ புது சுத்து வழியாய்ப் போகுது....'

''இது என்னய்யா இப்படிப் பொட்டல் வெளியிலே புதுக் காலனி? நாட்டிலே என்னமோ சிமெண்ட் பஞ்சம் இரும்புப் பஞ்சம்னு ஒரே பஞ்சப் பல்லவியாய்ப் பாடறாங்க... இப்படிப் பக்கம் பக்கமா அட்டை டப்பி அட்டை டப்பியாய் அடுக்கி அடுக்கிக் கட்டடங்க எழும்பிக்கிட்டுத்தான் இருக்கு.''

பஸ் இப்போது தற்காலிகமாய் மெல்ல வளர்ந்து வளர்ந்து புதிதாய்ப் பாதை போல் தோற்றம் தரத் தொடங்கி யிருந்த குண்டு குழி வழியில் ஏகப்பட்ட குலுக்கல்களுடனும் ஏகப்பட்ட உறுமல்களுடனும் மெது மெதுவாய் நகர்ந்தது.

பஸ்ஸில் யாரோ யாரிடமோ உரத்துக் கூறினார்கள். ''ரகு, இது யார் வீடு தெரியுமில்லே? ஒங்க பழைய ஓனர் ரங்கையாவோடது. மனுஷன் நாலே மாசத்திலே இங்கே ஒரு புது வீடு எழுப்பிட்டான். அதாம்பா ஒன்னோட பழைய 118. அர்ஜுன நகர் வீடு!''

ஸ்ரீதரன் உள்ளூரத் திடுக்கிட்டுக் குரல் வந்த பக்கம் ஜாடையாகத் திரும்பினான். இருவருமே அவனுக்கு அறிமுகம் இல்லாதவர்கள். அவனுக்கு முன்னால் அமர்ந்திருந்த அந்த யாரோ ஒரு ரகு அந்தக் கட்டிடத்தை வெறுப்புக் கொப்புளிக்கும் விழிகளுடன் எரித்து விடுபவர் போல் நோக்கினார்.

மறுபடியும் அந்தக் குரலுக்குரியவரே பேசினார். ''உன்னுடைய ஆயிரம் ரூபாயையும் இதுக்குள்ளே தேடறியா? இருக்கும் இருக்கும். இதுக்குள்ளே உன் மாதிரி இன்னும் எத்தனை பேருடைய சாட்சி இல்லாத பணங்கள் புதைஞ்சு கிடக்கோ! ரூபாயையும் தந்திரமாய்ப் பேசி வாங்கிட்டு கடைசி வரை கனெக்ஷனே வாங்காம மெழுகுதிரி வெட்டும் வெளிச்சத்திலேயே உன்னைக் காலி பண்ண வச்சானே பாவி மனுஷன்!''

'ஓ...இவரைத்தான் பல்ப், ஹோல்டரையெல்லாம் பிடுங்கிக்கிட்டுப் போறான்' என்று ஒப்பாரி வைத்தானோ ரங்கையா!

ஸ்ரீரன் அந்த ரகுவின் முகத்தில் தனக்கு மிக மிக நெருக்கமான அந்யோந்யமான கொதிப்பின் ஜ்வாலையைக் கண்டான்.



17-புள்ளி.



வி. சாந்தா

# கண்ணில் ஒளிவட்டம் தெரிகிறது

டாக்டர் பத்ரிநாத்

**ஏ. எஸ். கணேசன்** கல்கத்தா-29

என் தம்பி மகனுக்கு 14 வயது. அவனுக்கு 3வது வயதில் மாறு கண் இருப்பதைக் கண்டு டாக்டரிடம் காண்பித்தோம். அப்போது தான் அவனுக்கு இடது கண்ணில் பார்வை குறைவு என்பதை டாக்டர் அறிவித்தார். இதற்காக கல்கத்தாவிலிருக்கும் இரண்டு மூன்று கண்டாக்டர்களிடம் காண்பித்தோம். எல்லா டாக்டர்களும் ஒரே மாதிரி பதிலைத் தான் சொன்னார்கள். என்னவென்றால், வலதுகண்ணை மூடிவைத்து இடது கண்ணால் concentrate செய்யச் சொன்னார்கள். 76ம் வருடம் இடது கண் (மாறுகண்) ஆபரேஷன் செய்யப்பட்டது. கடந்த பத்து வருடங்களாகச் சிகிச்சை செய்து வருகிறோம். இப்போது விவரம் தெரிந்து விட்டதால் கண்ணை மூடிக்கொள்ள இஷ்டப்பட மாட்டேன் என்கிறான். இதற்கு இதே சிகிச்சை தானா? நாளடைவில் குணமாகிவிடுமா?



**பதில்:**

கண்களின் தசை இழுப்பினால் மாறு கண் வருகிறது. இதை இள வயதிலேயே சரிசெய்திருக்க வேண்டும். பதினன்கு வயதிற்கு மேல் சரி செய்வது கஷ்டம்.

**சரஸ்வதி சுப்பிரமணியம்** பரோடா

எனக்கு வயது 56. இரத்தத்தில் சர்க்கரை 140 உள்ளது. இதுவரையிலும் கண்ணாடி போடாமல் படிக்கிறேன். எழுதுகிறேன். ஆனால் 8 வருஷமாக பஸ் தூரத்தில் வரும் போது நம்பர் தெரிவதில்லை. எனக்குக் கண் பாதிப்பு ஏற்பட்டுவிடுமோ என்று கவலைப் படுகிறேன்.

**பதில்:**

தூரத்தில் வரும் பஸ்ஸினுடைய நெம்பர் தெரிவதில்லை என்பதிலிருந்து உங்களுக்குக் கிட்டப் பார்வை இருக்கிறது என்பது தெரிகிறது. நீங்கள் கண்ணாடி அணியவில்லை என்பதால், அதற்கான பரிசோதனையும் செய்துகொள்ளவில்லை என்பது புரிகிறது. கண் மருத்துவரிடம் சென்று பரிசோதித்துக் கொள்ளுங்கள். பரிசோதனை மூலம் காடராக்ட் இருப்பது தெரிந்தால் அதற்கும் மருத்துவம் செய்வார்.

**கமலா** பெங்களூர்

சென்ற 10 வருஷமாய் எனக்குச் சர்க்கரை வியாதி இருக்கிறது. மருந்துகள் சாப்பிட்டு வருகிறேன். சுமார் 40 வருஷமாய் கண்ணாடி அணிந்து வருகிறேன். சென்ற 1980ம் வருஷம் டாக்டரிடம் போன போது இடது கண்ணில் புரை வந்திருப்பதாகக் கூறி நன்றாய்ப் பழுத்த பிறகு ஆபரேஷன் செய்தார். 3வது நாள் கட்டை அவிழ்த்தார். வீட்டுக்கு அனுப்பி விட்டார். ஒரு மாத காலம் கண்ணில் சதா கண்ணீர் வந்த வண்ணம் இருந்தது. பிறகு கண் பார்வை மங்கலாகத் தெரிந்தது. போகப் போக நன்கு தெரியும் என்றார். ஒரு வருஷம் ஆகிவிட்டது. ஒன்றும் முன்னேற்றம் இல்லை.

**பதில்:**

பொதுவாக காடராக்ட் ஆபரேஷன் செய்து ஆறிலிருந்து எட்டு வாரங்களுக்குள் மீண்டும் பரிசோதனை செய்து கண்ணாடி அணியச் சொல்வார்கள். அப்படிச் செய்திருந்தால் உங்கள் பார்வை எவ்வளவு முன்னேறியிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். சாதாரணமாக இப்படி அணியும் கண்ணாடிகள் தடிமனாக இருக்கும் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.

கண்ணாடி அணிந்த பிறகும் உங்களுக்கு பார்வை சரியாகாது என்று உங்கள் கண் மருத்துவர் கூறினால் அதற்குரிய காரணத்தைக் கேளுங்கள். போட்டோ காகுலேஷன் அல்லது வெட்ரியஸ் ஆபரேஷன் பலன் தருமா என்று அவரிடம் ஆலோசனை கேட்டுக்கொண்டு அவர் ஆமோதித்தால் அவரையே அதற்குரியஸ்பெஷலிஸ்டிடம் சிபாரிசு செய்யக் கோருங்கள்.

**விசாலம் நாராயணசாமி** நெய்வேலி

என் தாயாருக்கு வயது 65. இரண்டு வருடத்துக்கு முன்பு எழுத்துக்கள் சரியாகத் தெரியவில்லை. அதனால் சென்னையில் டாக்டரிடம் காண்பித்துக் கண்ணாடி போட்டுக் கொண்டார். சென்ற வருடம் மலேரியா சுரம் வந்தது. ஜுரம் குணமாகித் தலைக்கு எண்ணெய் தேய்த்துக் குளித்து வந்தவுடன் ஒரு கண் சுத்தமாகத் திரை போட்டாற் போல் ஒன்றும் தெரியவில்லை. டாக்டரிடம்

கேட்டதில் மலேரியா கரத்துக்காக கொய்ஞ மாத்திரை அதிகமாகச் சாப்பிட்டதால் ஏற்பட்டது எனச் சொன்ஞர். கண் தெரியவில்லை என்று என் தாயார் மிகவும் மனது கஷ்டப்படுகிஞர். இதற்குத் தங்களது வைத்தியத்தில் ஆலோசனை என்ன?

**பதில்**

திடீரென்று கண் பார்வை போவது என்பது Detachment of Retina or Catastropies என்னும் காரணங்களினுல் இருக்கலாம். இடது கண்ணின் காடராக்ட் வலது கண்ணுக்கும் பரவாமல் இருக்க முழுமையாகப் பரிசோதிக்கப்பட்டதா?

**விஜயலட்சுமி** சேரங்குளம்

எனக்கு பத்து வயதிலிருந்து கண் பார்வை மறைக்கிறது. கிட்டப் பார்வை.ஒரே லைனில் நேர் பார்வை மட்டும்தான் தெரிகிறது. கீழ் பார்வை, சைட் பார்வை ஒன்றும் தெரியவில்லை. ஒரே சமயத்தில் எல்லா பக்கமும் பார்த்து நடக்க முடியவில்லை. என்னுடைய கண்ணின் கோளாறு தீர வழி கூறுங்கள்.

**பதில்**

நீங்கள் கூறியுள்ளதிலிருந்து உங்களுக்கு 'டியூபுலர் விஷன்' உள்ளது என்பது தெரிகிறது. க்ளுகோமா, நரம்பு கோளாறு ரெடினிடிஸ் பிக்மென்டோஸா என்னும் இம்மூன்று காரணங்களில் ஏதேனும் ஒன்றினுல் இக்கோளாறு இருக்கலாம்.

கண் மருத்துவரிடம் சென்று முழுமையான கண் பரிசோதனை செய்து கொள்ளுங்கள்.

**சிக்களூர் எம்.வி. ராகவாச்சாரியா** ஹைதராபாத்

என்னுடைய கண் பார்வை பாதிக்கப்பட்டுள்ளது. கண் மருத்துவரைக் கேட்டதற்குப் பார்வை கொஞ்சம் தெரிவதால் இப்போது ஆபரேஷன் செய்யக் கூடாது என்கிஞர்கள். மங்கையர் மலர் மே இதழில் வெட்ரோக்டமி என்னும் முறையால் கண் பார்வை சரிப்படுத்தலாம் என்று வந்திருந்தது. இந்த மருத்துவ சிகிச்சையை எனக்கும் அளித்து, என் கண் பார்வை முழுவதும் பெற உதவி செய்ய வேண்டுகிறேன்.

**பதில்**

'வெட்ரோக்டமி' என்பதும் அறுவைச் சிகிச்சை முறைதான். இது மருத்துவ சிகிச்சை முறையல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

**ஆர். கே. டி. சுப்ரமணியம்** சத்ஞ

ஒன்பது மாதங்களுக்கு முன் நான் சென்னை வந்த சமயம் ஒரு கண் மருத்துவ மனையில் செக்கப் செய்ததில் சர்க்கரை உள்ளது என்ற விவரம் அறிந்ததும் உணவுக் கட்டுப்பாடுகளுடன் இருந்து வருகிறேன். ஆஞல் ஒரு மாதமாகவே கண் பார்வை குறைந்தும், படிக்க முடியாத அளவும் உள்ளது. கண் பார்வை வர தங்கள் அறிவுரைகள் என்ன?

**பதில்**

நீங்கள் உணவுக் கட்டுப்பாடுடன் இருப்பது பற்றி மிகவும் மகிழ்ச்சி. சர்க்கரை வியாதி உள்ளவர்களுக்கு உணவுக் கட்டுப்பாடே மிகவும் முக்கியம். உங்கள் கண் பார்வைக் கோளாறுகளுக்கு அருகில் உள்ள கண் டாக்டரை அணுகவும்.

**ஸ்ரீவத்ஸன்** சென்னை-47

என் வயது 72. டயபெட்டீஸ் மிகக் குறைவாக உள்ளது. (150). இரத்த அழுத்தம் இல்லை. எனது வலது கண் காடராக்டுக்காக ஆபரேஷன் செய்யப்பட்டு, பெரிய பொருள்களையே பார்க்கும் சக்தி பெற்றுள்ளது. படிக்க இயலாது. இடது கண்ணுக்கும் காடராக்ட் வந்துள்ளது. ஆஞல் ஆபரேஷன் செய்யும் அளவுக்கு முதிரவில்லை என்று டாக்டர்கள் கூறுகிஞர்கள். இடது கண்ணுக்கு எழுத்துக்கள் தெரிவதில்லை. பெரிய பொருட்கள் தெரிகின்றன.

தற்போதுள்ள முக்கிய குறை: இடது கண்ணின் கோடியிலிருந்து ஆறு அங்குலம் தொலைவில் ஒரு தர்மா மீட்டர் நீளத்துக்கு ஒரு வெளிச்சம் சிற்சில சமயங்களில் தெரிகிறது. இது ஒன்றிரண்டு நொடிப் பொழுது இருக்கும். இது கடந்த இரண்டு வருடமாக இருக்கிறது. சில சமயங்களில் தலை திரும்பும் போது இது காணப்படும்.

வலது கண்ணுக்கு எதிரில் ஒரு ஆறு அங்குலம் தொலைவில் அரை ரூபாய் அளவுக்கு ஒரு ஒளி வட்டம் அடிக்கடி தோன்றி மறைகிறது. கண் மூடி இருந்தாலும் இந்த ஒளி வட்டம் தெரிகிறது. இவ்வொளி வட்டம் நீர்ச் சுழல்போல் ஒரு தரம் சுழன்றுவிட்டு மறைகிறது. சில சமயம் திடீரென்று மறையும் . இதுவும் ஒரு நொடிப் பொழுது தான் இருக்கும். ஒரு நாளில் இது பல தடவை ஏற்படும். இதுவும் ஏறக்குறைய இரண்டு வருடமாக உள்ளது.

**பதில்**

நீங்கள் அழகாக வர்ணித்துள்ளதில் இருந்து உங்கள் 'ரெடிஞ'வில் 'டிராக்ஷன்' இருப்பதற்கான அறிகுறிகள் புலஞகின்றன இது 'ரெடீஞ' பிரிவதற்கான அறி

குறியும் கூட. அதிலுள்ள கோடுகளே உங்களுக்கு அவ்வப்பொழுது தெரியும் ஒளிக் கதிருக்கான காரணம். வலது கண்ணைப் பற்றி நீங்கள் கூறியுள்ள விவரங்களிலிருந்து என்னால் எதுவும் கூற இயலவில்லை.

**ரம்யா** **காரைக்குடி**

எனக்கு மிகச் சிறிய வயதிலேயே வலது கண்ணில் கிட்டப்பார்வை இருந்திருக்கிறது. ஆனால் அதிக நாட்கள் கழித்துத்தான் பெற்றோரிடம் கூறினேன். மருத்துவரை அணுகியதில் அந்தக் கண்ணில் மிகவும் அதிகபவர் இருப்பதாகவும் அதற்குச் சில பயிற்சி அளித்தால் காண்டாக்ட்லென்ஸ் அணியலாம் என்கிறார். நான் என்னால் இயன்ற பயிற்சியை அந்தக் கண்ணுக்குக் கொடுத்தேன். பின்பு மருத்துவரை அணுகியதில் எதிர்பார்த்த முன்னேற்றம் இல்லை என்று கூறினார்.

இனிமேல் இந்தக் கண்ணுக்குச் சரியான பார்வை வர வழி ஏதும் உண்டா? மேலும் இரண்டு கண்ணுக்கும் பார்வை வித்தியாசப் படுவதால் சில சமயங்களில் பொருட்கள் இரட்டையாகத் தெரிகிறது. கோடைக் காலம் முழுவதும் கண்ணில் எரிச்சலும், கண்ணைச் சுற்றி வலியும், தலை வலியும், கண் சிவப்பாகவும் ஆகிறது. இவற்றையும் தவிர்க்க இயலுமா?

**பதில்**

உங்கள் மருத்துவரின் ஆலோசனை சரியானதே. இரண்டு கண்களுக்கிடையே பவர்வித்யாசப்படுபவர்களுக்குக்காண்டாக்ட், லென்ஸ்' மிகவும் பொருத்தமானது. எனவே அதை அணிந்தீர்களானால் உங்களுடைய பிரச்னைகள் தீரும். கண் எரிச்சல், முதலியன இப்போது நீங்கள் சரியான 'பவர்' உள்ள கண்ணாடி அணியவில்லை என்பதால் ஏற்பட்டுள்ளவை.

**எஸ். ஜெயலட்சுமி.** **சென்னை-90**

என் தாயாருக்குப் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் இடது கண்ணில் குளுகோமாவில் பார்வை போய்விட்டது. வலது கண்ணில் க்ளுகோமாவிற்காக ஆபரேஷன்செய்து கண்ணாடி உதவியால் பார்வை நன்றாக இருந்தது. ஆனால் இந்த ஏழெட்டு மாதமாக கண்ணாடி போட்டிருந்தும் மனிதர்கள் அடையாளம் தெரிவதில்லை. படிக்கவும் முடியவில்லை. இதற்கு ஏதாவது சிகிச்சை உண்டா?

**பதில்**

முதலில் உங்களுடைய தாயார் அணிந்திருக்கும் கண்ணாடியின் 'பவர்' போதுமா என்று மீண்டும் பரிசோதித்துக் கொள்ளுங்கள். க்ளுகோமா, ஆபரேஷன் செய்த பிறகு மீண்டும் வருவதற்கு வாய்ப்பு இருக்கிறது. எனவே உங்கள் கண் மருத்துவரை அணுகி முழுமையாகப் பரிசோதித்துக் கொள்ளுங்கள்.

# தையல்

# அண்டர்வேர்

லலிதா கணபதிராமன்

இங்கு மாதிரிக்காகக்கொடுக்கப்பட்டுள்ள அளவுகள் மூன்று வயதுக் குழந்தைகளுக்கு உரியவை. இதற்கு 35 செ.மீ. துணி தேவைப்படும். அண்டர்வேர் தைப்பதற்கான கோடு போட்ட துணிகள் கடைகளில் விற்கப்படுகின்றன. அவற்றை வாங்கி இந்த உடையைத் தைக்கலாம். அல்லது தடிமனான வாங்கிளாத் போன்ற துணியிலும் தைக்கலாம்.

## பேப்பர் மாதிரியை வரைதல்

ஒரு பழைய செய்தித் தாளில் தேவையான அளவுப்படி வரைந்துகொள்ளவும். பெரியவர்களுக்கு அண்டர்வேர் தைக்கும் போது அவர்களது முழு உயரம், சீட் அளவு (இடுப்புச் சுற்றளவோடு 4 அங். சேர்த்தால் சீட் அளவு கிடைக்கும்) ஆகியவற்றைக் கணக்கிட்டுக் கொண்டு வரையவும்.

## அளவுகள்

0 முதல் 1 வரை— 9''
0 முதல் 2 வரை — 7½''
(½ சீட் அளவு)
2 முதல் 3 வரை — 9''
1 முதல் 3 வரை — 7½''
(½ சீட் அளவு)
4 முதல் 2 வரை — 2
5 முதல் 3 வரை

முதலில் உயரத்தை (0 – 1) அளந்து பேப்பரில் குறித்துக் கொள்ளவும். சீட்டின் ½பாகத்தை (0–2)படத்தில் உள்ளதுபோன்று வரைந்துகொள்ளவும். பின்னர் 0–1, 0–2, 2–3 ஆகியவற்றை 4 சமமான கட்டங்களாகப் பிரித்துக் கொள்ளவும். இடுப்புப் பகுதியின் மேற்புறம் (4–2) ½'' மார்க் செய்து, சாய்வான கோட்டை அமைத்து, அது மூன்றுவது கட்டத்தின் இறுதியில் முடியுமாறு வரைந்துகொள்ளவும். அதே போன்று கடைசிக் கட்டத்தில் (5–3) ½'' மார்க் செய்து கால் பாகத்தின் கீழ்புற சாய்வுக் கோட்டை அமைத்துக் கொள்ளவும்.

மேலே கண்டவாறு தேவையான அளவுப்படி பேப்பர் பேட்டனை அமைத்துக்கொண்டவுடன் ஒரு சிறு கத்தரியால் அவற்றை வெட்டி எடுத்துக் கொள்ளவும்.

## பேப்பர் மாதிரியைத் துணியில் வெட்டுதல்

முதலில் துணியைக் கரைப் பகுதி உயரவாக்கில் அமையுமாறு 4 ஆக மடித்துக் கொள்ளவும். மடிப்பின் ஓரத்தில் பேப்பர் பேட்டனைச் சேர்த்து வைத்துக் கொள்ளவும். மேற்புறம் நாடா சேர்ப்பதற்காக மடிப்புப் பகுதியில் ஒன்றரை அங். துணியும், கீழ்ப்புறம் கால் பகுதியை மடித்துத் தைப்பதற்காக ஒன்றரை அங். துணியும் விட்டு, பேப்பர் பேட்டனை குண்டூசியால் பின் செய்துகொள்ளவும். மற்ற சாய்வான பாகங்களில் தைப்பதற்காக ½'' தாராளமாக இடம் விட்டு பென்சிலால் வரைந்து கொள்ளவும். பின்னர் பேப்பர் பேட்டனை எடுத்துவிட்டுத் துணியை வெட்டவும்.

## தைக்கும் முறை

முதலில் கால் பகுதிகளின் மடிப்புக்களை உட்புறம் 1'' மடித்துத் தைத்துக் கொள்ளவும். பின்னர் இரு கால்களையும் தனித் தனியாக ரன்அன்டு பெல்தையலால் (Run & fellseam) தைக்கவேண்டும். இந்தத்தையல் அநேகமாக உள்ளாடைகள் தைப்பதற்கு மட்டுமே பயன்படுகிறது. பின்புறத் துணியைக் கொஞ்சம் உயர்த்தி வைத்து முன்புறத் துணியைக் கொஞ்சம் கீழே இறக்கி வைத்துத் தைத்துக் கொள்ள வேண்டும். பின்னர் மேற்புறம் உயர்த்தி வைத்த துணியை மடித்துக் கீழ்ப்புறத் துணியின் மீது படியுமாறு வைத்து ¼''ல் தையல் போட வேண்டும். இவ்வாறு துணியின் கெட்ட பக்கம் இரு கால்களையும் தனித் தனியாக இணைத்துத் தைத்த பின்னர் நல்ல பக்கம் திருப்பிக் கொள்ள வேண்டும். பின்னர் இரு பகுதிகளையும் பின்புறம் முதுகிலிருந்து முன்புறம் ஓபன் பகுதி வரை இதே தையலால் தைக்க வேண்டும். முன் பகுதியில் நடுவில் ஓபனுக்காக ஒன்றரை அங் அளவு½'' மடித்து ஓபன் தைத்துக் கொள்ளவும். கடைசியில் மேற்புறம் 1¼'' மடித்து மேற்புற படிப்பைத்தைத்துக் கொள்ளவும். இந்த மடிப்பினுள் கடையில் விற்கும் மெல்லிய நாடாக்களை வாங்கிக் கோர்த்துக்கொள்ளலாம். அல்லது 1'' அகலமுள்ள நீண்ட துணியை இரு புறமும் ¼'' மடித்து, மடிப்புக்களை ஒன்றின் மீது ஒன்று வைத்து, மிஷினால் தைத்து நாடாக்களை உருவாக்கியும் கோர்க்கலாம்.

# சொல்ல விரும்புகிறோம்

● ஜூலை இதழின் அட்டைப் படம் மிக அருமை. ஆண்களுக்காக இப்படி ஒரு பத்திரிகை இல்லையே என மங்கையர்மலரைக் கண்டு பொறுமைப்படுகிறேன்.
அண்ணாமலைநகர் - சாரதாதேவிப் பிரியன்

● நமது கலாசாரம் என்ற தொகுப்பில் சேஷாத்ரிநாத சாஸ்திரிகள் தொகுத்தளித்த ''பாணிக்கிரஹணம்'' பற்றிய கட்டுரை விளக்கம் தெளிவாக உள்ளது. இப்போதைய கல்யாணங்களிலே நாகரீகம் என்ற பெயரால் தெளிவாக மந்திரமே சொல்லாமல் சமயத்துக்கேற்ப பலவற்றைக் குறைத்தும் மணமகளை விட போட்டோகிராபர்களுக்கு முக்கியத்துவமும், அதற்குப் போஸ்கள் என்றும் நாகரிகப் போர்வை சூடியுள்ளது. பாரம்பரியம் மிக்க நமது வேதப் பெருமைக்கு இனியாவது மதிப்புச் சேரட்டும்.
நெல்லை-1 ஜி. சதாசிவம்

● ஆயிரம் வந்தாலும், அது வசதிகளை வாரித் தந்தாலும் மனதிற்கு நிம்மதி இல்லையென்றால் அத்தனையும் பாழ் என்பதைப் பெண்களுக்கு உணர்த்திவிட்டு மறைந்த நடிகை ஃபடாபட் ஜெயலட்சுமியின் சோகக் கதையை மங்கையர் மலரில் வெளியிட்டது மிகவும் பொருத்தமே.
சிதம்பரம் வெ. ச. தமிழரசன்

● படாஃபட் ஜெயலட்சுமி பற்றிய (கட்டுரை) உமது நினைவுகள் – 'அடி என்னடி உலகம் இதில் எத்தனை கலகம்' – படாஃபட் பாடியதை உண்மையாக்கி விட்டதே!
சென்னை-4 மயிலை கோபி

● என்ன சார் இது அநியாயம்! நானுந்தான் ஏப்ரல் 1975லிருந்து வெளியான முதல் மங்கையர் மலரிலிருந்து இன்று வரை தொடர்ந்து வாங்கி வருகிறேன். என்னைப் போன்ற நீண்ட கால மங்கையர் மலர் வாசகர்களுக்கு எல்லாம் கெய்த்தான் ஃபேன் மற்றும் போட்டிகளில் பங்கு இடையாதா? ப்ளீஸ்... கொஞ்சம் கவனியுங்களேன் வாசகர்களையும்.
சங்கரன்கோவில் என். குருநாதன்

● வேலைக்குச் செல்லும் பெண்களுக்கான போட்டியில் இம்மாதம் (ஜூலை) நாகர்கோயில் ஞானம்பாள் எழுதிய கட்டுரை உள்ளத்தை நெகிழச் செய்து விட்டது.
ஹைதராபாத்-4 திருமதி. பிரபா டாக்கர்

● மங்கையர் மலருடன் நீங்கள் வழங்கிய ''உங்களைப் பற்றி – எது எப்படி?'' என்ற இலவச இணைப்பில் வயிற்று வலி முதல் புற்று நோய் முடிய அனைத்தையும் அலசி விட்டீர்கள். ஒவ்வொரு இல்லத்தரசிக்கும் இந்தப் புத்தகம் பயனுடையதாக – பாதுகாக்கப்படக் கூடியதாக விளங்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.
சென்னை எஸ். வனஜா

● மங்கையர் மலர் ஜூலை 82 இதழ் வழங்கிய இலவச இணைப்பு 'உங்களைப் பற்றி எது, எப்படி?' மிகவும் பயனுள்ளதாக உள்ளது. மணமாகாத நான், வருங்காலத்தை முன்னிட்டு என் குடும்ப நூலகத்தில் தங்கள் இலவச இணைப்பை சேர்த்து வைத்துள்ளேன்.
சென்னை-12 அ. சாம்பசிவம், பி.ஏ.

● கேக் தயாரிப்பது, ஸ்குவாஷ் செய்வது, கொண்டை போடுவது, காய்கறிகள் வாங்குவது, நமது கலாச்சாரம் இப்படிப் பல வகைகளில் உபயோகமான தகவல்களை ஜூலை மாத இதழில் தந்ததும் இல்லாமல் போனஸாக 'எது, எப்படி?' என்ற சிறப்பான இணைப்பையும் தந்து வாசகர்களை மதித்துக் கௌரவித்துள்ளீர்கள். மிகவும் நன்றி!
பங்களூர் வசந்தா கோவிந்தன்

● ''நாடிவந்த நேரத்தில்'' தேடிவந்த புதையல். அலோக்கைப் போன்ற பிஞ்சு மனப் ''பிச்சுமணிகள்'' உள்ளவரை நந்தித்தாக்களுக்கு ஏது பஞ்சம்?
பம்பாய்-52 மணக்கால் வேதமணி



# திருமண மலர்

[illegible] இஞ்சினியர், 34 வயது 5½ அடி உயரம். [illegible] குழந்தைகள் உள்ள [illegible] [illegible] சைவ வெள்ளாள பிள்ளைக்கு [illegible] ஜாதி அல்லது சைவ முதலியார், [illegible] [illegible]யாரில் உத்தியோகத்தில் உள்ள பெண் போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். வர தட்சிணை வேண்டாம்.

பெட்டி எண் 410

கௌசிக கோத்திரம், மிருகசீர்ஷ நட்சத்திரம், அய்யங்கார், வடகலை, 26 வயது, பி.காம். பம்பாயில் தனியார் கம்பெனியில் வேலையில் இருக்கும் ரூ. 1000 மாத வருமானம் உள்ள பையனுக்கு 24 வயதுக்குட்பட்ட நன்கு படித்த அல்லது வேலையில் இருக்கும் வடகலை, தென்கலை அய்யங்கார் பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும்.

பெட்டி எண் 411

அரசினர் அச்சகத்தில் டெக்னிகல் அஸிஸ்டெண்டாகப் பணியாற்றும் (மாதம் ரூ.700) புனர்பூச நட்சத்திரம், காஸ்யப கோத்ரம், பிரஹசரண பிரிவைச் சேர்ந்த மாநிற அழகிய பையனுக்கு (வயது 28) அரசினர், தனியார் அலுவலகத்தில் பணியாற்றும் பெண் தேவை. உட் பிரிவுகள் பரவாயில்லை.

பெட்டி எண் 412

ஸ்ரீவத்ஸ கோத்ரம், உத்திரட்டாதி, பிரஹசரணம். 32 வயது எஸ். எஸ். எல். ஸி. டைப்ரைட்டிங் ஆங்கிலத்திலும் தமிழிலும் ஹையர், ஷார்ட்ஹாண்ட் லோயர், ஆங்கில டைப்பில் டி.டி.ஸி. தேர்ச்சி பெற்றுள்ள பெண்ணுக்கு நல்ல உத்தியோகத்தில் ரூ. 600க்கு மேல் சம்பாதிக்கும் 36 வயதுக்குட்பட்ட மணமகன் தேவை.

பெட்டி எண் 413

ஸ்ரீவத்ஸ கோத்ரம், மத்வர், கன்னட பாஷை பேசுபவர் பி.எஸ்.ஸி. பி.டி., 40 வயது பெண்ணுக்குமணமகன்தேவை.விடோயர் பரவாயில்லை. பிராமணர்களில் பிரிவு பேதமில்லை.

பெட்டி எண் 414

பாரத்வாஜ கோத்திரம், பூச நட்சத்திரம், சென்னையில் கம்பெனியில் வேலையில் இருக்கும் டைப்ரைட்டிங், டெய்லரிங் தெரிந்த கொஞ்சம் நல்ல நிலைமையில் உள்ள குடும்பப் பாங்

கான மாத்வ, கன்னடம், ஆறுவே பிரிவைச் சேர்ந்த 27 வயதுள்ள பெண்ணுக்கு கன்னடம் தேசஸ்தா மணமகன் தேவை. ஜாதகம் இருந்தால் அனுப்பவும்.

பெட்டி எண் 415

பம்பாயில் நல்ல உத்தியோகத்தில் இருக்கும் ஹரித கோத்திரம், வாத்திமா, 28 வயது அஸ்வினி நட்சத்திரம், சுத்த ஜாதக வரனுக்கு 23 வயதுக்குள் பட்டதாரியும் உயரம் 5'2''க்கு மேல் இருக்கின்ற பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். வேறு பிரிவில் இருந்தாலும் பரவாயில்லை.

பெட்டி எண் 416

விஸ்வகர்மா (ஆச்சாரி) வகுப்பைச் சேர்ந்த சைவமான 28வயதுடைய எஸ். எஸ். எல். சி. வரை படித்த பெண்ணுக்கு அரசாங்கத்திலோ அல்லது தனியார் நிறுவனத்திலோ பணி புரியும் தகுதியான மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும்.

பெட்டி எண் 417

26 வயது, பி. யூ. சி. செவ்வாய் தோஷமுள்ள மலையாளப் பெண்ணுக்கு செவ்வாய் தோஷமுள்ள மலையாள வரன் தேவை.

பெட்டி எண் 418

கௌண்டின்ய கோத்ரம், பிரஹசரணம், ரேவதி நட்சத்திரம், சென்ட்ரல் ஸ்கூலில் வேலை பார்க்கும் 31 வயது உள்ள பட்டதாரி பெண்ணுக்கு 37 வயதுக்குள் இருக்கும் பட்டதாரி ஐயர் மணமகன் தேவை. உட் பிரிவுகள் பரவாயில்லை.

பெட்டி எண் 419

வன்னியகுல க்ஷத்திரிய, படித்த (பட்டதாரி மற்றும் எஸ். எஸ். எல். சி.க்குச் சமமான படிப்பு) அழகான பெண் தேவை. பையன் மத்திய அரசு வங்கி பிராஞ்சு மானேஜர். வயது 33, மாத சம்பளம் ரூ. 2500. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன்தொடர்பு கொள்ளவும்.

பெட்டி எண் 420

மௌத்கல்ய கோத்ரம், வயது 33 எஸ். எஸ். எல்.சி. தையற் கலை தெரிந்த குடும்ப பாங்கான — கடவுள் பக்தியுள்ள பெண்ணுக்கு மணமகன் தேவை. ஜாதகத்தை விட மனப் பொருத்தமே போதுமானது.

பெட்டி எண் 421

18 வயது அகமுடையார் பெண், 4' 10'' உயரம். 7வது வகுப்பு வரை படிப்பு. காது கேளாது. பேச்சு சரிவர வராது. சாடையால் உணர்ந்து செயலாற்றும் திறன் நிரம்ப உண்டு நல்ல புத்திசாலி. சமையல் தையல் தெரியும். அகமுடையார் வகுப்பில் இரக்க குணமுடைய மணமகன் தேவை. சொந்தமாக ஒரு வீடு உண்டு. 10 சவரன் நகை, தகுந்த சீர் வரிசை செய்யப்படும்.

பெட்டி எண் 422

34 வயது, அரசாங்கக் கல்லூரியில் அசிஸ்டெண்ட் புரொபசர் வேலை; விசாகம், தென்கலை ஐயங்கார் மணமகனுக்கு 27 வயதுக்குள் கௌசிக கோத்திரமல்லாத பட்டதாரி மணமகள் தேவை.

பெட்டி எண் 423

வடமான், பௌருகுத்ஸ கோத்ரம், அவிட்டம், 27 வயது டி.எம். ஈ. ரூ. 1200 வருமானத்தில் பெரிய தனியார் நிறுவனத்தில் வேலை பார்க்கும் கேரள ஐயர் மணமகனுக்கு பட்டதாரி 22 வயதுக்குள் 5' 6'' குறையாமல் கேரள ஐயர் மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும்.

பெட்டி எண் 424

பி. லிட். எம்.ஏ. படிக்கும் 26 வயது இந்து நாயுடு நடுத்தரக் குடும்பப் பாங்கான பெண்ணுக்கு உத்தியோகத்தில் உள்ள அதே இன மணமகன் தேவை.

பெட்டி எண் 425

நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த ஐயர் நைத்ருப காஸ்யப கோத்ரம், வடமான், உத்திரட்டாதி, 23 வயது பி.எச்.இ.எல். ராணிப்பேட்டையில் ஸ்டெனோ ஆகப் பணி புரியும் பெண்ணுக்கு வேலூருக்கு அருகிலேயே வேலை செய்யும் 30 வயதுக்குள்ளான படித்த மணமகன் தேவை.

பெட்டி எண் 426

ரேவதி நட்சத்திரம், வடமான், விச்வாமித்ர கோத்ரம், 37 வயது பி.ஏ. படித்த ஐயர் பெண்ணுக்குத் தகுந்த மணமகன் தேவை. உட்பிரிவுகள் வேறு இருந்தாலும் பரவாயில்லை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும்.

பெட்டி எண் 427

35 வயது பி. ஏ., விச்வாமித்ர கோத்திரம் சுவாதி நட்சத்திரம், வடமான், அரசாங்க உத்தியோகம் பார்க்கும் ஐயர் பெண்ணுக்கு 39 வயதுக்கு நல்ல வேலையில் இருக்கும் மணமகன் தேவை. விவரங்களுடன் ஜாதகம் அனுப்பவும்.

பெட்டி எண் 428

வாதூல கோத்ரம், தென் கலை, பி.எஸ். ஸி. பி.எட். வேலையில் உள்ள 27 வயது பெண்ணுக்கு 32 வயதுக்குள் மணமகன் தேவை. வடகலை பாதகமில்லை. ஜாதகத்துடன் அனுப்பவும். பெட்டி எண் 429

பாரத்வாஜ கோத்ரம், கார்த்திகை, வாத்யமா, கேரள ஐயர், வயது 32 ஜூனியர்

**இப் பகுதியில் திருமண விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 20/- மட்டுமே. தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்ப வேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு மட்டுமே. 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தரவேண்டும். பதில் அனுப்புபவர்கள் பெட்டி எண்ணுக்கே அனுப்பவேண்டும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.**

என்ஜினியர் பாம்பே டெலிபோன்ஸ். எங்கும் மாற்றலாகக் கூடிய வேலை. (தீ பட்டதால் முகத்தில் சிறு ஊனமுள்ள) பெண்ணுக்குத் தகுந்த மணமகன் தேவை. ஜாதகம், குடும்ப விவரம் அனுப்பவும்.

பெட்டி எண் 430

தமிழக அரசில் பணிபுரியும் செங்குந்த முதலியார் வகுப்பைச் சேர்ந்த கெஜடட் அதிகாரியின் 19 வயது – அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்த – பெண்ணுக்குத் தகுதியுள்ள மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பம் செய்யவும்.

பெட்டி எண் 431

26 வயது. அரசு வங்கியில் ரூ. 1000 சம்பளம் பெறும் மணிப்புரியில் பிறந்த எங்கள் வளர்ப்பு மகனுக்கு நல்ல குடும்பத்து மணமகள் தேவை. ஜாதகம் இல்லை. தமிழ் நாட்டைச் சேர்ந்த இந்துக்களில் எந்தப் பிரிவினரும் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கலாம்.

பெட்டி எண் 432

காஸ்யப கோத்ரம், அஷ்ட சஹஸ்ரம். கேரள ஐயர், வயது 37. எஸ். எஸ். எல்.சி. படித்த டெல்லியில் தனியார் கம்பெனியில் மாதம் ரூ. 1200 வருமானம் உள்ள மணமகனுக்குப் படித்து வேலையில் இருக்கும் கேரள ஐயர் மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும்.

பெட்டி எண் 433

ஸ்ரீவத்ஸ கோத்ரம், உத்திரம், தென்கலை, ஐயங்கார், 28 வயது பி.ஈ. (எலக்ட்ரானிக்ஸ் படித்துவிட்டு நல்ல உத்தியோகத்தில் உள்ள வரனுக்கு 23 வயதுக்குள் நன்கு படித்த மணமகள் தேவை. ஜாதகம் முழு விவரங்களுடன் விண்ணப்பிக்கவும்.

பெட்டி எண் 434

தமிழ்அய்யர், காச்யபகோத்ரம், கேட்டை நான்காம் பாதம், 34 வயது எஸ்.எஸ்.எல்.சி தமிழ் ஆங்கிலம் டைப்ரைட்டிங் ஹையர், பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. விவரங்கள் ஜாதகத்துடன் அனுப்பவும்.

பெட்டி எண் 435

மணமகன் பாரத்வாஜ கோத்திரம், 30 வயது. வடகலை. ராஜாவெட், செகந்திராபாத் பாங்கில் உத்தியோகம். ரூ. 1200 சம்பளம். பூராட நட்சத்திரம். பாங்கில் பணி புரியும் மணமகள் தேவை.

பெட்டி எண் 436

மிருகசீர்ஷ நட்சத்திரம், சிம்ம லக்னம், குடமுடையான் கோத்ரம், 25 வயதுள்ள கார்காத்த சைவ வேளாளர் பிள்ளைகுடும்பப் பெண்ணுக்கு வேலை பார்க்கும் (சென்னையில் இருப்பின் நலம்) அல்லது சுய தொழில் புரியும் நல்ல குணமுள்ள சைவ பிள்ளை, செட்டியார், முதலியார் பிரிவைச் சார்ந்த சைவ மணமகன் தேவை. மிகக் குறைந்த படிப்பு. வேலையில் இல்லை. எளிய திருமணம். ஜாதி பொருட்டில்லை.

பெட்டி எண் 437

தமிழ் வடமான் ஐயர், 21 வயது. பிகாம். கார்க்க கோத்திரம் பெண்ணிற்கு என்ஜினியரிங் போன்ற நல்ல படிப்பு படித்த வேலையில் உள்ள மணமகன் தேவை. உட் பிரிவுபேதமில்லை.

பெட்டி எண் 438

தொகுப்பு: டி.ஆர். ரமேஷ் எம்.ஏ.பி.எல்.

# இது நடந்தால் என்ன செய்வது?

## சொத்தை எப்படிப் பிரிப்பது?

**டி. முனியம்மாள்** திருச்சி

என் தந்தைக்கு ஒரு பையன், மூன்று பெண்கள். பையன் குழந்தைகள், மனைவியை விட்டு விட்டு இறந்து விட்டார். பிதுரார்ஜித சொத்துக்களைப் பெண்களுக்கு என்ன விகிதத்தில் பிரித்துக் கொடுக்க வேண்டும்? தந்தை உயிருடன் இல்லை. தாய் உயிருடன் வசிக்கிறார். தாயின் பேரில் சில சொத்துக்கள் உள்ளன. இதை எப்படிப் பிரிப்பது?

**வழக்கறிஞர் பதில்:**

சுய சம்பாத்தியமாக உள்ள சொத்தில், மனைவிக்கும், பையன், பெண் களுக்கும் சம மான பங்கு உண்டு. பையன் இல்லை யென்றால் அவருடைய பங்கு, அவருடைய மனைவியைச் சேரும். தாயின் பேரில் உள்ளசொத்து, அவர் உயிர் உள்ள வரை அவர் அனுபவிக்கலாம். பின்னர் அவர் விருப்பப்படி யாருக்கும் எழுதி வைக்கலாம்.

## விதவைப் பெண் எங்கு இருக்கவேண்டும்?

**ஜோதிகொடி** மதுரை

நமது இந்துமதச்சட்டப்படி ஒரு விதவைப் பெண் (அவளுக்கு ஒரு பெண்தான் உண்டு) பெற்றோரிடம் இருப்பது சரியா? மாமியாரிடம் இருப்பது சரியா? மாமியார்வீட்டில் வசதி கிடையாது. பெற்றோர் செல்வம் படைத்தவர்கள்.

**பதில்**

திருமணம் செய்து கொண்ட பெண் என்பதால் அவள் மேஜராகவே இருக்க வேண்டும். எனவே மேஜராக உள்ள ஒரு பிரஜை எங்கும் வசிக்க உரிமையுண்டு. எனவே அவள் இங்குதான் இருக்க வேண்டும் என்று சட்டப்படி அவளை யாரும் கட்டாயப்படுத்த முடியாது. அவள் விருப்பப்படி எங்கும் வசிக்கலாம். ஆனால் எங்கு வசிக்க வேண்டும் என்பதைப் பற்றிச் சட்டம் கூறவில்லை.

## எஸ்.எஸ்.எல்.சி. புத்தகம் தொலைந்து விட்டது!

**வி. கி.** பாலக்காடு

திருமணம் ஆகி இரண்டு பெண்களைப் பெற்றிருக்கும் நான் எஸ். எஸ். எல். சி. வரை படித்திருக்கிறேன். தற்சமயம் என்னிடம் எஸ். எஸ். எல். சி. சர்ட்டிபிகேட் இல்லை. ஆனால் நான் மேற்கொண்டு தபாலில் தமிழ் மீடியத்தில் படிக்க விரும்புகிறேன். வேறு எந்த நல்ல பயனுள்ள படிப்பு படிக்கலாம்? தயவு செய்து தெரிவிப்பீர்களா?

**பதில்**

நீங்கள் எந்தப் படிப்பு படிக்கவேண்டுமென்றாலும் அதற்கு எஸ். எஸ். எல். சி. புத்தகம் தேவை. எனவே அதனுடைய 'டூப்ளிகேட் காப்பியை' முதலில் பெற வேண்டும். நீங்கள் எந்த மாவட்டத்தில் படித்தீர்களோ அந்த மாவட்டக் கல்வி அதிகாரிக்கு ஒரு விண்ணப்பம் அனுப்புங்கள். அவர்கள் குற்றவியல் நடுவரின் (மாஜிஸ்டிரேட்) விசாரணையைக்கோருவார்கள். மஜிஸ்டிரேட் உங்களுடைய எஸ். எஸ். எல். சி. புத்தகம் எப்படித் தொலைந்தது என்ற விவரங்களை விசாரிப்பார்.

நீங்கள் தகுந்த பதில் அளித்தால், உங்களுடைய புத்தகம் உண்மையிலேயே தொலைந்து விட்டது என்று அவர் சான்றிதழ் தருவார். அதை மாவட்டக் கல்வி அதிகாரி ஏற்றுக் கொண்டு உங்களுக்கு எஸ். எஸ். எல். சி. புத்தகத்தின் டூப்ளிகேட் காப்பியை வழங்க ஏற்பாடு செய்வார்.

## தாத்தா சொத்தும் பாட்டி சொத்தும்!

**எம். குமார்** பழனி

எனது தந்தை வழிப் பாட்டனார் தனது உயிலில் ''நிலம் வருவாய் எனது பாட்டி உள்ளவரை அனுபவித்துக் கொள்வதென்றும் பாட்டி காலத்துக்குப் பின் அண்ணன் தம்பியாகிய எங்களுக்குச் சேர வேண்டியது என்றும் அதுவரையாரும் விற்க உரிமை இல்லை என்றும் எழுதியுள்ளார். உயில் பதிவு செய்யப்படவில்லை. அது சட்ட பூர்வமானதா? தற்போது என் தந்தையால் ஏற்பட்ட கடன் நிர்ப்பந்தம் காரணமாக நானும் என் தம்பியும் அந்தப் பாட்டியும் மூவரும் சம்மதித்து ஒன்றாக நிலத்தை விற்க முடியுமா? உயிலில் உள்ளபடி பாட்டி உள்ளவரை விற்க முடியாதா? — பாட்டி விரும்பினால் கூட?

(1) உயில் பதிவு செய்யப்பட்டால்தான் செல்லும் என்பதில்லை. unreqistered will - கூடச் சட்டப்படி செல்லும்.

(2) உங்களுடைய பாட்டியும், அவருக்குப் பின் உரிமைதாரரான நீங்களும் சேர்ந்து சம்மதித்தால் சொத்துக்களை விற்க முடியும். அதற்கு முதலில் உங்களுடைய பாட்டனாரின் உயிலை கோர்ட்டில் தாக்கல் செய்து நடைமுறைக்குக் கொண்டு வர வேண்டும். பிறகு உங்களுடைய பாட்டியின் முழு சம்மதத்துடன் சொத்துக்களை விற்கிறோம் என்று எழுத்து மூலமாக உங்கள் பாட்டியின் கையெழுத்துடன் வாக்குமூலம் கொடுத்தால், அவர்கள் அனுமதி தருவார்கள். அதை வைத்துக் கொண்டு நீங்கள் உங்களுடைய சொத்துக்களை விற்கலாம்.

## தண்ணீர் எப்போது குடிக்கலாம்?

**பாபுகுமார்** — பெங்களூர்

உணவருந்தும்போது நடு நடுவே நீர் பருகுவது அவ்வளவு நல்லதல்லவென்று ஒருசிலரும் பருகுவதுதான் சரியானது என ஒருசிலரும் சொல்லக் கேட்டிருக்கிறேன். இதில் எது சரி?

**மருத்துவர் பதில்:**

உணவுக்கு இடையில் சாப்பிடப்படும் நீர் ஜீரண அமிலங்களை நீர்க்கச் செய்துவிடும். எனவேசாப்பிட்ட பின்னரும்,இரண்டு உணவு வேளைக்கு இடையிலும் நீரைக் குடிப்பது நல்லது. ஒரு நாளைக்குக் குறைந்தது ஆறு டம்ளர் நீர் பருக வேண்டும்.

## ஆணைப் போலக் கைகள்!

**ஜின்னி** — சென்னை-5

என் முகத்தில் பருக்கள் தோன்றி முகத்தை விகாரமாக்குகின்றன. நெற்றியில் நிறைய உள்ளது. மேலும் என் அடிவயிறும் பெரிதாகிக் கொண்டே வருகிறது. ஒரு வருடமாக உடற் பயிற்சி செய்தும் பயனில்லை. என் கைகளும் ஆண்கள் கைகளைப் போல முரடாக உள்ளது. எல்லோரும் கேலி செய்கின்றனர்.

**பதில்**

தலையில் பொடுகு இருந்தால் முகத்தில் பருக்கள் வளரும். கார்டு அல்லது ஜின்னிக் ஷாம்புவைத் தலைக்கு உபயோகியுங்கள். டாக்டரின் ஆலோசனையுடன் முகத்துக்கு Petino-A கிரீம் போடுங்கள். உங்களுடைய வயது, மாத விலக்கு சரியாக வருகின்றனவா போன்ற விவரங்கள் தெரியவில்லை. ஒருவேளை கர்ப்பப் பையில் கட்டி இருந்தாலும் அடிவயிறு பெருகும். எனவே லேடி டாக்டரிடம் பரிசோதிக்கவும். கைகளும் விரல்களும் மிருதுபெற ஒரு வழி கிளிசரின், எலுமிச்சை, தயிர் ஆடை இவற்றைக் கலந்து தினந்தோறும் நன்றாகக் கைகளில் தேய்த்துக் கொள்ளுங்கள். அதற்கான குறிப்புக்களை வேறு பக்கத்தில் பார்க்கலாம்.

## கால் வீக்கம்

**சுகன்யா வெங்கடாசலம்** — காரைக்கால்

எனக்கு வயது 32. 5 வருடம் முன்பு கால் குடைச்சல் அதிகம் இருந்தது. நடு தொடையில் மட்டும் கையகலம் வீக்கம் காணப்பட்டது. நெறி கட்டவில்லை. டாக்டரிடம் சென்றதில் 'பைலேரியல்' என்று சொல்லி அட்ரனான் மாத்திரை கொடுத்தார். ரத்தப் பரிசோதனையில் பைலேரியாவின் அறிகுறி இல்லை. அதில் குணம் தெரியாததினால் மற்ற டாக்டர்களிடமும் காண்பித்தாயிற்று. ஒருவர் ரத்தக் கட்டு என்கிறார். இன்னொருவர் எலும்பில் ஏதாவது இருக்கும் என்று எக்ஸ்-ரே எடுக்கச் செய்து பார்த்தார். அதிலும் ஒன்றுமில்லை. இப்படியே 5 வருடங்களில் பத்து டாக்டர்களிடம் காண்பித்தாயிற்று. கால் குடைச்சல் பொறுக்க முடியவில்லை. தயவு செய்து ஒரு வழி கூறுங்கள்.

**பதில்**

நீங்கள் விவரித்துள்ளதிலிருந்து இது பைலேரியல்தான் என்று தெரிகிறது. தொடர்ந்து இரண்டு மாதங்களுக்கு Banocide Foretயும் அண்டிபயாடிக்கும் எடுத்துக் கொள்ளுங்கள். Thrombo phobe ஐ கால், தொடையில் தடவிக் கொள்ளவும். குளிர் ஜுரம், வாந்தி இருக்கிறதா? ஆறு மாதங்களுக்கு ஒரு முறை Forte Banocide மாத்திரைகளைச் சாப்பிடுங்கள்.

## வயிற்றில் எரிச்சல்!

**கே. சந்திரசேகரன்** — சென்னை-24

எனக்கு வயது 30. எனக்கு ஆறு வருடங்களாக அடி வயிற்றில் எல்லா பாகமும் எப்பொழுதும் எரிச்சலும் வாயில் 4, 5 புண்களுக்குக் குறையாமல் இருந்து வருகிறது. காரங்கள் அதிகமாகச் சேர்த்துக் கொள்வதில்லை. மணத்தக்காளி கீரையும் ஒரு மாதம் விடாமல் சாப்பிட்டும் குணம் தெரியவில்லை. தற்போது மோர், முளைக்கீரைதான் அதிகமாகச் சேர்க்கிறேன். ஒன்றுக்கும் கட்டுப்படவில்லை.

**பதில்**

'ஆன்டி அமீபிக்' மாத்திரைகளை மூன்று கோர்ஸ் இரண்டு மாத இடைவெளி விட்டுச் சாப்பிடவும். மேலும் Nystatin என்னும் மாத்திரைகளை (ஸ்குவிப்) இரண்டு வேளை வீதம் சாப்பிடுங்கள். சரியாகி விடும்.

எவ்வகை உணவாயினும்
அதனை முழுமையாக்குவது
டி. எஸ். ஆர். ஊறுகாய்களே!

# புதிய
# கிடாரங்காய்
ஊறுகாய்








# டி.எஸ்.ஆர்

டி. எஸ். ஆர். & கோ
"கோகுல் கார்டன்ஸ்"
கும்பகோணம்

CRITERION

